# சமகாலத் தமிழர்களின் உறவுமுறை அமைப்பும் உறவுமுறைச் சொற்களும்

தா. இராபர்ட் சத்தியசோசப்

எட்டாம் உலகத் தமிழ் மாநாடு
பதிப்புச் சுழல்நிதி வெளியீடு

தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

# சமகாலத் தமிழர்களின் உறவுமுறை அமைப்பும் உறவுமுறைச் சொற்களும்

முனைவர், தா. இராபர்ட் சத்திய சோசப்

சமூகவியல் துறை

**தமிழ்ப் பல்கலைக் கழகம்**

தஞ்சாவூர்.

ISBN: 81 - 7090 - 217 - 7

**எட்டாம் உலகத் தமிழ் மாநாடு**
**பதிப்புச் சூழல் நிதி வெளியீடு எண் : 169**

தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு எண்: 12
திருவள்ளுவராண்டு 2027 மாசி - மார்ச் - 1996

நூல் : சமகாலத் தமிழர்களின் உறவுமுறை அமைப்பும் உறவுமுறைச் சொற்களும்

ஆசிரியர் : முனைவர், தா. இராபர்ட் சத்திய சோசப்

பதிப்பு : முதற்பதிப்பு

விலை : ரூ. 60-00

அச்சு : அருட்சோதி அச்சகம்,
சிதம்பரம் - 608 001.
வள்ளலார் மாவட்டம்.

**முனைவர் கி. கருணாகரன்**
**துணைவேந்தர்**

தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர் - 613 005
இந்தியா

மனித இன வரலாற்றில் மனித குலத்தைப் பற்றிய மானிடவியலின் மகத்தான கண்டுபிடிப்புகளுள் மரபுமுறை (Descent system) உறவுமுறை (Kinship) பற்றிய விதிகளைக் கண்டுபிடித்ததும் ஒன்றாகும். சமுதாயத்தில் மக்கள் சில விதிகளின் அடிப்படையில் பிணைப்புகளை ஏற்படுத்திக் கொண்டு குலம், கோத்திரம், கால்வழி, மரபுக்குழு போன்ற பல சிறு குழுக்களாகப் பிரிந்து செயல்படுகின்றனர். தன் இனத்தை நிலை நிறுத்த இனப்பெருக்கம் செய்ய முற்பட்டமை முதல்வகை பிணைப்பாகும் இனப்பெருக்கத்திற்கு மணத்துணையைத் தேர்ந்தெடுத்த திருமண நிகழ்வு இரண்டாவது பிணைப்பாகும். திருமணத்தால் பிறந்த குழந்தை மூன்றாவது வகை பிணைப்பாகும். இவ்வனைத்துப் பிணைப்புகளும் ஒன்றிணைந்து 'உறவுமுறை' என்னும் அமைப்பாகச் செயல்படுகிறது. திருமண நிகழ்வால் ஏற்படும் உறவை மண உறவு (Affinity) என்றும் பிறப்பால் அமையும் உறவை இரத்த உறவு (consanguinity) என்றும் தத்து எடுக்கும் உறவைப் புனைவியல் உறவு (Fictions) என்றும் கூறுவர். இவர்களுக்குள் நிலவும் தொடர்பைக் கொண்டு உறவினர்களை முதல்நிலை உறவினர்கள் (Primary Kins) இரண்டாம் நிலை உறவினர்கள் (Secondary Kins) மூன்றாம் நிலை உறவினர்கள் (Tertiary Kins) எனப் பிரிப்பர். அனைத்துச் சமுதாயத்திலும் நிலவும் மரபு முறையை i) இருவழி மரபு ii) ஒருவழி

மரபு iii) ஈரியல் மரபு iv) இணை மரபு என நான்காகப் பகுப்பர். சமுதாய அமைப்போடு தொடர்புடைய திருமணம், குடும்பம், மரபு முறை, குடிவழி, உறவு குழுக்கள் போன்ற பல கூறுகளைப் புரிந்து கொள்வதில் உறவுமுறை ஆய்வுகளைப் போன்று வேறு எந்த ஆய்வும் பயன் தருவதில்லை. உறவுமுறைச் சொற்கள் சமுதாய அமைப்பினைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

முனைவர் இராபர்ட் சத்திய ஜோசப் எழுதிய 'சம காலத் தமிழர்களின் உறவுமுறை அமைப்பும் உறவுமுறைச் சொற்களும்' என்ற நூல் 1) ஆய்வு முன்னுரை 2) கோவிலூர் கிராமமும் அங்கு வாழும் மக்களும் 3. திருமணம் 4. குடும்பம் 5. வாழ்க்கைச் சடங்குகளில் உறவினர்களின் பங்கு 6. உறவுமுறைச் சொற்கள் 7 முடிவுரை என ஏழு இயல்களைக் கொண்டுள்ளன. கிராமச் சமுதாயங்களில் நிலவி வந்த மரபுவழி குடும்ப அமைப்பு, திருமண முறை, உறவு முறை அமைப்புக்கும் தற்போதுள்ள உறவுமுறை அமைப்புக்கும் உள்ள வேறுபாடுகளை ஆராய்வது இவ் வாய்வின் நோக்கமாக ஆய்வு முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். இரண்டாவது இயலில் கோவிலூர் கிராம மக்களின் குடியேற்ற வரலாறு, குடும்பம், பொருளாதார நிலை, சாதி அமைப்பு ஆகியன நன்கு விளக்கப்பட்டுள்ளன. 'திருமணம்' என்ற இயலில் திருமண முறைகளை விரிவாகக் கூறி, உறவு முறைக்கு அடிப்படையாய் விளங்குவதையும் ஆராய்ந்துள்ளார். மனித சமுதாயத்தின் மிகத் தொன்மையான நிறுவனமாகத் திகழ்வது குடும்பம். குடும்பம் என்பது உயிரியல் அமைப்பு. அடுத்த இயலில் அக் கிராமத்திலுள்ள பல்வேறு சாதிகளுக்கிடையே காணப்படும் குடும்ப அமைப்பையும் குடும்ப அங்கத்தினர்களுக்கிடையேயான உறவுகளையும் விரிவாக விளக்கியுள்ளார். அடுத்த இயலில் பிறப்புச் சடங்குகள், பூப்புச் சடங்குகள், திருமணச் சடங்குகள், ஈமச் சடங்குகள் ஆகிய

சடங்குகளில் உறவினர்களின் பங்கை விளக்கமாக ஆராய்ந்துள்ளார். உறவு முறைச் சொற்களை விரிவாக விளக்கி ஆராய்ந்துள்ளார். உறவு முறைச் சொற்களை விரிவாக விளக்கி ஆராய்ந்துள்ளார். தஞ்சாவூர் பகுதியில் உறவு முறையானது விவசாய உற்பத்தியோடு தொடர்புடையது என்ற காத்தலின் பாப் கருத்து அரிசனங்களுக்குப் பொருத்தமாக உள்ளது என நூலாசிரியர் சுட்டிக் காட்டியிருப்பது பாராட்டத்தக்கதாகும். பதிலீடு பெயரையும் உறவுமுறைச் சொல்லையும் ஒன்றாக இணைத்துக் குறிப்பிடுவது ஒரு தொல் திராவிடக் கூறு (Proto Dravidian feature) என திராவிட மொழியியல் பேரறிஞர் எமனோ (Emeneau) குறிப்பிடுவதை இந்நூலாசிரியர் இவ்வாய்வு மூலம் நிருப்பித்துள்ளார். இனி செய்யவேண்டிய ஆய்வுகளை முடிவுரையில் பரிந்துரைத்துள்ளார். தமிழர்களின் உறவுமுறை இரோகுவாய்ஸ் முறையைச் சார்ந்தது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

முனைவர் இராபர்ட் சத்திய ஜோசப் அவர்கள் உறவுமுறை ஆய்வில் பல ஆண்டுக்காலம் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர். உறவு முறை அமைப்பை ஆராய்ச்சிப் பொருளாக ஆக்கிக் கொண்டவர். திட்டமிடல், செய்திதிரட்டல், தெளிதல், முடிவு நிலை சுட்டல், தீர்வு காணல் முதலிய ஆராய்ச்சி முறைகளில் சிறந்து விளங்குவதை இந்நூல் முழுவதும் காணலாம். தமிழ்ச் சமூகத்தை அறிய பயன்படும் இத்தகைய அடிப்படை நூலைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் வெளியிடுவதில் பெருமையடைகிறேன். தமிழ்ச் சமுதாயம் பற்றிய ஆய்வு வளரவேண்டும் என எண்ணுபவன் நான், இவ் வெண்ணத்திற்கு விதையாகவும் வேராகவும் இந்நூல் நின்று, சில பல கனிகளைத் தந்து நிற்கும் என நம்புகிறேன். சிறந்த ஆய்வாளராக வளர்ந்து வரும் இராபர்ட் சத்திய ஜோசப்பின் பணி மேலும் சிறக்க எனது இதயங் கனிந்த வாழ்த்துகள்.

**(கி. கருணாகரன்)**

# முன்னுரை

சமுதாயங்களில் நிலவும் பல உறவுகளுக்கு அடிப்படையாக விளங்குவது உறவுமுறை. குடும்ப அமைப்பு மற்றும் குடும்ப இயக்கத்தில் உறவுமுறையானது மிக முக்கிய பங்கு வகிக்கிறது. ஏனைய சமூக உறவுகளைப்போல் அல்லாமல் உறவுமுறையானது தொடர்ந்து நீடிக்கும் தன்மை உடையது. மேலும், அவசரத் தேவைகள் மற்றும் நெருக்கடி நிலைகளில் உதவும் தன்மையும் உடையது. இவ்வாறு மக்களிடையே காணப்படும் ஏனைய சமூக உறவுகளைவிட உறவுமுறையானது முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் நிரந்தரமானதாகவும் உள்ளது.

மக்களின் இடப்பெயர்ச்சி, கல்வி, பொருளாதாரம் ஆகியவற்றினால் உறவுமுறையில் பல மாறுதல்கள் ஏற்பட்டுவருவதும் குறிப்பிடத்தக்கது. தமிழகக் கிராம சமுதாயத்தில் நிலவிவரும் பாரம்பரிய உறவுமுறை அமைப்பு மற்றும் உறவு முறைச்

சொற்கள் அவற்றில் ஏற்பட்டுவரும் மாறுதல்கள், அதற்கான காரணங்கள் ஆகியவை இந்நூலில் விவரிக்கப்பட்டுள்ளன. அத்தகைய மாறுதல்களினால் உறவு முறையானது அதன் முக்கியத்துவத்தை இழந்து வருகிறதா? அல்லது சூழ்நிலைக்கேற்ப மாற்றி அமைக்கப்படுகிறதா? என்பதும் முதல்நிலைத் தரவுகள்மூலம் ஆராயப்பட்டுள்ளன.

'உறவுமுறை ஆய்வு நன்று, என அறிவுரை கூறி உறவுமுறை ஆய்வில் என்னை ஈடுபடச் செய்த எனது ஆரிசியரும் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முதல் துணைவேந்தருமான மதிப்பிற்குரிய பேராசிரியர் வ.ஐ. சுப்பிரமணியம் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த ஆய்வுப்பணியை மேற்கொள்ள அனுமதி வழங்கி அனைத்து வசதிகளையும் செய்து தந்து என்னை ஊக்குவித்துவந்த முன்னாள் துணைவேந்தர் முதிப்பிற்குரிய பேராசிரியர் ச. அகத்தியலிங்கம் அவர்களுக்கு எனது நன்றியினை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

இப்பணியை மேற்கொள்ளும்போது இதற்கான களப்பணி, ஆய்வுமுறை ஆகியவற்றை நெறிப்படுத்தி உதவிய மறைந்த முன்னாள் சமூகவியல் துறைத்தலைவர் பேராசிரியர் சி.செ. தேக்கமலை அவர்களையும் நன்றியுடன் நினைவுகூர்கிறேன்.

துணைவேந்தராகப் பதவியேற்றவுடனேயே இப்புத்தகம் வெளிவர ஆவன செய்ததோடு அணிந்துரையும் வழங்கிச் சிறப்பித்த தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர்

முனைவர் கி. கருணாகரன் அவர்களுக்கும் எனது நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

எனது ஆய்வுப்பணிகளுக்கு அவ்வப்போது ஊக்கமளித்துத் தேவையான உதவிகளை ஆர்வத்தோடு செய்துவரும் சமூகவியல் துறைத்தலைவர் முனைவர் அரோமா கு சாம் அவர்களுக்கும் என் நன்றி உரியது.

எனது ஆய்வுப்பணிகளில் பல நிலைகளிலும் உதவிவரும் முனைவர் க. சத்திவேல் அவர்களுக்கும் இந்நூலினை எழுதும்போது கருத்துகள் வழங்கி உதவிய நண்பர் முனைவர் ஆறு. இராமநாதன் அவர்களுக்கும், அச்சுப்படிகளைச் சரிபார்த்து உதவிய நண்பர் முனைவர் தா. ஈசுவரப்பிள்ளை அவர்களுக்கும், ஆய்வு உதவியாளர்கள் திரு. க. .ம. பெருமாள், மற்றும் திரு. ம. மதியழகன் ஆகியோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலினை அச்சாக்கம் செய்யும் பணியை ஏற்று, அச்சிட்டு உதவிய அருட்சோதி அச்சக உரிமையாளர் முனைவர் கோ. சீராமன் அவர்களுக்கும், இந்நூல் வெளிவரப் பலநிலைகளில் உதவிய தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை அலுவலர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஆய்வுப்பணிகளைச் செய்வதற்குத் தேவையான சூழலை ஏற்படுத்தி என்னோடு ஒத்துழைத்துவரும் எனது மனைவி றா. கேத்தரின் விமலாவுக்கும் என் நன்றி என்றும் உரியது.

தஞ்சாவூர்
*20.2.1996*

**தா. இராபர்ட் சத்திய ஜோசப்**

# ஆய்வு முன்னுரை

தமிழர்களின் உறவுமுறையில் மக்கள் வாழும் பகுதியின் அடிப்படையிலும் பண்பாட்டு அடிப்படையிலும் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. அத்தகைய வேறுபாடுகள் இந்த ஆய்வில் குறிப்பிடப்படவில்லை. தமிழ்நாட்டின் மையப் பகுதியாகிய தஞ்சை மாவட்டத்தின் சில கிராமங்களில் சேகரிக்கப்பட்ட செய்திக்கூறுகளின் அடிப் படையில் இந்த ஆய்வுநூல் எழுதப்பட்டுள்ளது.

இந்த ஆய்வில் மூன்று அல்லது நான்கு தலைமுறைகளைச் சேர்ந்த மக்களைக் குறித்த செய்திக் கூறுகள் குடிவழிப்பட்டியல் (Genealogical Particulars) மூலம் சேகரிக்கப்பட்டு ஆராயப்பட்டுள்ளன. இதனை மனதிற் கொண்டு இந்நூலின் தலைப்பில் "சமகாலத் தமிழர்களின் (Contemporary Tamils) உறவுமுறை" என்று குறிப்பிடப் பட்டது.

## ஆய்வின் முக்கியத்துவம்

உறவுமுறையானது பல கோணங்களில் ஆராயப்பட்டு வருகிறது. உறவுமுறைஆய்வில் சமூகவியலார், மானிடவியலார் மற்றும் மொழியியலார் ஆகியோர் ஈடுபட்டுள்ளனர். பண் பாட்டைப் பிரதிபலிக்கும் பல குறிப்பிடத்தக்க உறவுமுறை

அமைப்புகள் மற்றும் சொற்களை ஆராய்ந்துள்ள பல கட்டுரைகளும் புத்தகங்களும் ஆய்வேடுகளும் வெளி வந்துள்ளன. ஒரு சமுதாயத்தின் சமூக உறவுகளை வரையறுப்பதில் உறவுமுறையானது மிக முக்கிய காரணக் கூறாக உள்ளது என்பது நிரூபிக்கப்பட்டுள்ளது. உறவு முறை விளிச்சொற்களும் உறவுமுறை நடத்தையும் ஒன்றோடொன்று தொடர்புடையவையாகும். உறவுமுறை நடத்தை என்பது வெவ்வேறு சூழல்களிலும் வெவ்வேறு நிலை களிலும் மக்கள் எந்த விதத்தில் அல்லது எந்த அளவுக்குச் சரியான உறவுமுறைச் சொற்களைப் பயன்படுத்தி தங்கள் உறவினர்களை அழைக்கிறார்கள் அல்லது குறிப்பிடுகிறார்கள் என்பதாகும்.

ஒருவர் பிறந்த சமுதாய அமைப்புக்கும் அவர் தற்போது வாழும் சமுதாய அமைப்புக்குமிடையிலான இடைவெளி மிக முக்கியமானது. மனிதனின் வாழ்க்கை நிலையில் ஒவ்வொரு தலைமுறைகளுக்கிடையிலான மாறுதல்கள் பல காரணக்கூறுகளை அடிப்படையாகக் கொண்டதாகும். குறிப்பாக கல்வி, பொருளாதாரம், இடப் பெயர்ச்சி, வேலையின் தன்மை ஆகியவற்றைக் கூறலாம். இதன் விளைவாகக் குடும்ப அமைப்பு உறவுமுறை கடப் பாடுகள், உறவினர்களுக்கிடையிலான உதவிமுறை திருமணமுறை, வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுத்தல் ஆகியவற்றில் மிகுந்த மாறுதல்கள் ஏற்படுகின்றன.

சமுதாயத்தில் ஏற்படும் மாறுதல்களால் மக்களிடையே இடப்பெயர்ச்சியும் ஏற்படுகிறது. இது குடும்பத்தினை சேர்ந்து வாழ்வதைப் பிளவுபடுத்துகிறது. எனவே புதிய தலைமுறையினரை எடுத்துக்கொண்டால் சிலர் அவர்களின் பெற்றோர் மற்றும் உறவினர்களைப் போன்று அதே சமுதாயத்தில் வாழ்கின்றனர். வேறு சிலர் வேலையின் காரணமாகவோ கல்வியின் காரணமாகவோ பல்வேறு

இடங்களில் வாழலாம். பெற்றோரைப்போன்று அதே சமுதாயத்தில் அண்மையில் வாழ்பவர்கள் குடும்பத்தின் பிரச்சனைகளை உணர்ந்து கொள்வதையும் உதவிக்காக அழைக்கப்படுவதையும் காணலாம். எனவே குடும்பத்தோடு சேர்ந்து வாழ்பவர்கள் தொடர்ந்து உறவுமுறை இணைப்புக்குள் இழுக்கப்படுவதைக் காணலாம். குடும்பத்தின் அங்கத்தினர்கள் பிரிந்து வாழும்போது உறவு முறை கடப்பாடுகளை நிறைவேற்றுவதும் ஒருவருக்கொருவர் உதவுவதும் அரிதாகிவிடுகிறது. இவ்வாறு தூரத்தில் வாழ்பவர்கள் குடும்ப காரியங்களிலிருந்து முற்றிலுமாக விலகிவிடுகின்றனர் எனக் கூற இயலாது. இராம சமுதாயத்தை எடுத்துக்கொண்டால் எவ்வளவு தூரத்தில் வாழ்ந்து வந்தாலும் தங்கள் சொந்த கிராமத்தில் சிறிதளவாவது நிலமும் வீடும் இருப்பதையும் நெருங்கிய உறவினர்களோடு தொடர்பு கொண்டிருப்பதையும் காணலாம். ஆனால் இத்தகைய தொடர்புகள் முதல்நிலை அல்லது இரண்டாவது நிலை உறவினர்களோடு நின்றுவிடுவதுண்டு. தூரத்து உறவினர்களோடுள்ள தொடர்புகள் குறைந்துவிடுவதுண்டு.

கூட்டுக்குடும்பங்கள் தனிக்குடும்பங்களாக மாறுதல், தனிக்குடும்பங்கள் கூட்டுக்குடும்பங்களாக மாறுதல் போன்ற குடும்ப அமைப்பில் ஏற்பட்டுவரும் மாறுதல் பல்வேறு சமூகப் பொருளாதார காரணக்கூறுகளால் ஏற்படும் ஒருவித சூழல் மாற்றமாகும் (Cyclic Chonge). இத்தகைய மாறுதல்களுக்கு குடும்பச் சொத்து, வருவாயின் தன்மை ஆகியவை மிக முக்கிய காரணக்கூறுகளாகும். ஒரு கூட்டுக் குடும்பத்தை எடுத்துக்கொண்டால் வயதில் மூத்த ஆண் நபர் குடும்பத்தின் தலைவராக இருப்பார் குடும்பத்தின் பொருளாதார உரிமைகள் அனைத்தும் அவரிடமே காணப்படும். அவருடைய வயது சென்ற பருவத்திலும் அவர் சொற்படியே ஏனைய அங்கத்தினர்கள் செயல்படுவார்கள்

கூட்டுக்குடும்பங்கள் தனிக்குடும்பங்களாகும்போது பொருளாதார உரிமைகளும் குடும்ப அங்கத்தினர்களுக்கிடையே பங்கிடப்படுகின்றன: இந்நிலைகளில் முதியோர்கள் தங்கள் பொருளாதார உரிமைகளை இழந்துவிடுதுவதுண்டு. அவ்வாறு பொருளாதார உரிமைகளை இழந்துவிடும்போது முதியோர்களைப் பராமரிப்பதிலும் சிக்கல்கள் ஏற்படுகின்றன. அதோடு பெரும்பான்மையான முதியோர்களும் தங்கள் சொந்த வீட்டிலேயே வாழ விரும்புகின்றனர். தங்கள் பிள்ளைகள் வாழும் இடத்திற்குச் செல்ல விரும்புவதில்லை. இங்குப் பொருளாதார நிலை மற்றும் குடும்ப அமைப்பில் ஏற்படும் மாறுதல்கள் மிக முக்கிய காரணக் கூறுகளாகின்றன

கல்வி, இடப்பெயர்ச்சி, வாழ்க்கைத்தரம் ஆகியவற்றின் தாக்கம் பாரம்பரிய குடும்பத்தின் செயற்பாட்டில் (Function) அதிகமாக ஏற்பட்டுள்ளது. இதன் விளைவாகக் குடும்ப அங்கத்தினர்களின் நடவடிக்கை குறிக்கோள் ஆகியவற்றில் பல மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன.

தென்னிந்திய சமுதாயத்தில் காணப்படும் தனிக்குடும்பங்களை எடுத்துக் கொண்டால் மேற்கத்திய சமுதாயத்தில் காணப்படும் தனிக் குடும்பங்களைப் போன்று தனித்து வாழ்பவை அல்ல. பெரும்பாலான தனிக்குடும்பங்களும் தங்கள் பாரம்பரிய குடும்பத்திற்கு அண்மையிலேயே காணப்படுகின்றன. எனவே போக்குவரத்துத் தொடர்பு மட்டுமல்லாமல் பல்வேறு உறவு முறை கடப்பாடுகள் மூலம் இணைக்கப்படுகின்றனர். தனிக்குடும்பங்களிலும் வயது சென்ற பெற்றோர் அல்லது கணவனின் இளைய சகோதரன் அல்லது மனைவியின் இளைய சகோதரன் ஆகியோர் படிப்பு காரணமோ அல்லது வேலையின் காரணமோ சேர்ந்து வாழ்வதைக் காணலாம். இவ்வாறான உதவிமுறைகளில் பெற்றோர் பிள்ளைகளுக்குச் செய்யும் உதவியானது பிரதிபலனை எதிர்பாராது செய்வதாகும்,

விவசாயத்தில் ஈடுபடும் ஒரு பாரம்பரிய குடும்பத்தை எடுத்துக் கொண்டால் குடும்ப அங்கத்தினர்கள் எல்லோரும் அத்தொழிலில் ஈடுபடுவதால் அவர்களுக்குள் தெரிந்தோ தெரியாமலோ ஒருவித ஒருமைப்பாடு ஏற்படுகிறது. எனவே பொது நலன் மற்றும் குடும்பத்தில் ஏனையவர்களைத் தாங்கும் கடமையோடுள்ள கூட்டுக்குறிக்கோள்கள் காணப் படுகின்றன. புதிய தலைமுறையினரிடையே இத்தகைய ஒருமைப்பாடு காணப்படாவிட்டாலும் பெற்றோர் மற்றும் சகோதரர்களுக்கு உதவுதல், உறவுமுறை கடப்பாடுகளை நிறைவேற்றுதல் ஆகியவற்றில் ஈடுபடுகின்றனர். ஒருவர் சொந்தமாகக் குடும்பம் அமைக்கும் நிலையை அடையும் வரை தன் பெற்றோர் அல்லது சகோதரர்களைச் சார்ந்து வாழ்வதையும் காணலாம்.

புதிய தலைமுறையினர் ஒரே சீரானவர்கள் அல்லர். வேலையின் தன்மை வேலை பார்க்கும் இடத்தின் தூரம் ஆகியவற்றின் அடிப்படையிலும் வேறுபாடுகள் ஏற்படுவதுண்டு. வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதிலும் பாரம்பரிய அமைப்பிலிருந்து வேறுபடுவதைக் காணலாம்.

உறவுமுறைச் சொற்கள் சமுதாயத்தின் இயக்கத்தோடு நெருங்கிய தொடர்புடையதென கருதப்படுகிறது. சிறிய அல்லது சாதாரண சமுதாயத்தையும் (Simple Society) பல்கூட்டுச் சமுதாயத்தையும் (Complex Society) ஒப்பிட்டுப் பார்த்தால் உறவுமுறை சொல்லமைப்பில் குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் காணப்படுவதில்லை. ஆனால் பயன் பாட்டளவில் வேறுபாடுகள் இருப்பதைக் காணலாம். சான்றாக முழு வளர்ச்சியடையாத ஒரு பாரம்பரிய சமுதாயத்தை எடுத்துக்கொண்டால் ஒருவரையொருவர் அழைப்பதற்கும் குறிப்பிடுவதற்கு உறவுமுறைச் சொற்களையே பயன் படுத்துகின்றனர். அச்சமுதாயம் விரிவடைந்து ஒரு பல்கூட்டுச் சமுதாயமாக மாறும்போது ஒருவரையொருவர் அழைப் பதற்கும் குறிப்பிடுவதற்கும் உறவுமுறை அல்லாத 'டாக்டர்'

'சார்' போன்ற பலதரப்பட்ட சொற்களைப் பயன்படுத்துவதைக் காணலாம். மேலும் உறவினர் அல்லாதவர்களையும் உறவுமுறைச் சொற்களால் அழைப்பதையும் காணலாம். புதுவிதமான சமூக உறவுகள் ஏற்படும்போது புதிய விளிச் சொற்கள் (Addressing terms) தோன்றுவதைக் காணலாம். ஆனால் புதிய உறவுமுறைச் சொற்கள் தோன்றுவதில்லை. எனவே ஒரு பெரிய கலப்புச் சமுதாயத்தில் உறவுமுறைச் சொற்களின் பயன்பாடு குடும்பம் என்னும் சிறிய பகுதியோடு நின்றுவிடுவதைக் காணலாம்.

## நோக்கம்

(1) தமிழக கிராம சமுதாயங்களில் நிலவிவந்த பாரம்பரிய அல்லது மரபுவழி குடும்ப அமைப்பு திருமண முறை, உறவுமுறை கட்டப்பாடுகள், உறவுமுறைச்சொற்கள் ஆகியவற்றை ஆராய்தல்.

(2) தற்போது நிலவிவரும் குடும்ப அமைப்பு, திருமண முறை, உறவுமுறைக் கட்டப்பாடுகள், உறவுமுறைச்சொற்கள் ஆகியவற்றை ஆராய்தல்.

(3) மரபுவழி உறவுமுறை அமைப்புக்கும் தற்போது நிலவிவரும் உறவுமுறை அமைப்புக்கும் இடையிலான வேறுபாடுகளையும் அதற்கான காரணங்களையும் ஆராய்தல்.

## ஆய்வுமுறை

கள ஆய்வுக்காகப் பல சாதி மக்கள் வாழும் நடுத்தர கிராமம் என்ற முறையில் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த கோவிலூர் என்ற கிராமம் தேர்ந்தெடுக்கப்பட்டது. இக்கிராமத்தோடு சேர்ந்த மேலமாகாணம் என்ற பகுதியும் சேர்த்துக் கொள்ளப்பட்டது. முதல் கட்டமாக ஒவ்வொரு குடும்பங்களிலிருந்தும் குடும்ப விவரங்கள் (Household Particulars) சேகரிக்கப்பட்டது. ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் ஒரு ஆண் நபரை சந்தித்து நேரடியாக செய்திக் கூறுகள் சேகரிக்கப்பட்டன.

இரண்டாவது கட்டமாக குடிவழி விவரங்கள் (Genealogical Particulars) சேகரிக்கப்பட்டன. இதன் மூலம் கல்வி, தொழில், பிறந்த ஊர் மற்றும் தூரம், திருமண வயது, திருமணத்துக்கு முன் மனைவி உறவினரா அது எந்த உறவு, மனைவியின் திருமண வயது, குடித்தனம், வரதட்சணை, பரிசம் ஆகியவை பற்றிய செய்திக் கூறுகள் மூன்று அல்லது நான்கு தலைமுறைகளுக்குச் சேகரிக்கப்பட்டன. இவை தலைமுறைகளுக்கு இடையிலான வேறுபாடுகளை அல்லது மாறுதல்களை ஆராய்வதற்கு மிகவும் துணையாக உள்ளன.

மூன்றாவது கட்டமாக வாழ்க்கைச் சடங்குகளில் உறவினர்களின் பங்கு குறித்த விவரங்கள் சேகரிக்கப்பட்டன. அதாவது பிறப்பு, பெயர் சூட்டுதல், காது குத்துதல், பூப்புச் சடங்கு, திருமணம், இறப்பு ஆகிய சடங்குகளின்போது எந்தெந்த உறவினர்களுக்கு என்னென்ன பங்குகள் காணப்படுகின்றன. எந்தெந்த உறவினர்கள் எத்தகைய உதவி முறைகள் மற்றும் அன்பளிப்புகள் ஆகியவற்றைச் செய்கிறார்கள் என்பவை சேகரிக்கப்பட்டன. இதன் மூலம் வெவ்வேறு நிலைகளில் உள்ள உறவினர்களின் கடப்பாடுகள் ஆராயப்பட்டன.

இறுதியாக உறவுமுறை அமைப்பு மற்றும் சொற்களில் ஏற்பட்டுவரும் மாறுதல்களை ஆராய்வதற்கு இனக்குழு வரலாற்று முறை (Ethno historic method) கையாளப் பட்டது. அதாவது தேர்ந்தெடுக்கப்பட்ட கிராம சமுதாயத்தி லிருந்து ஒவ்வொரு சாதியிலும் சில வயது சென்ற கல்வி அறிவில்லாத தகவலாளிகளைத் தேர்ந்தெடுத்து அவர்கள் மூலம் அச்சமுதாயத்தில் நிலவிய பாரம்பரிய உறவுமுறை அமைப்பு மற்றும் சொற்கள் பற்றிய விவரங்கள் சேகரிக்கப் பட்டன. புதிய தலைமுறையினரைத் தகவலாளிகளாகக் கொண்டு தற்போதைய உறவுமுறை குறித்த செய்திக் கூறுகள் சேகரிக்கப்பட்டன. சாதி, வயது ஆகியவற்றின் அடிப்படையில் உறவுமுறைச் சொற்களும் சேகரிக்கப் பட்டன.

இக்களப்பணியானது 1988-89-ஆம் ஆண்டுகளில் மேற் கொள்ளப்பட்டது. அச்சமயம் காதுகுத்துதல், திருமணம் போன்ற வாழ்க்கைச் சடங்குகளிலும், பொங்கல், ஆடிப் பெருக்குப் போன்ற விழாக்களிலும் நேரில் கண்டு கவனித்தல் (Participant observation) முறை மூலம் செய்திக்கூறுகள் சேகரிக்கப்பட்டன. அதோடு கிராமத்தின் சில முக்கியமான நபர்களாகிய பஞ்சாயத்து ஒன்றியத்தலைவர், கோயில் பூசாரிகள், கிராமசேவக், நாட்டாண்மைக்காரர் ஆகியோரிடமிருந்து அக்கிராமத்தைக்குறித்த பொதுவான செய்திக்கூறுகள் சேகரிக்கப்பட்டன.

சேகரிக்கப்பட்ட செய்திக்கூறுகள் மானிடவியல் மற்றும் சமூகவியல் உறவுமுறை கோட்பாடுகளின் அடிப்படையில் ஆராயப்பட்டன. பல்வேறு சாதியினரிடமிருந்து சேகரிக்கப் பட்ட உறவுமுறைச் சொற்கள் சமுதாயமொழியியல் மற்றும் மானிடவியல் கோட்பாடுகளின் அடிப்படையில் ஆராயப்பட்டன.

# கோட்பாட்டாய்வு

## Theoretical Discussion

பொதுவாக மனித சமுதாயத்தில் மூன்று விதமான உறவு முறைத் தொடர்புகள் காணப்படுகின்றன.

1) இரத்த உறவு (Consanguineal relation)
2) மண உறவு (Affinal relation)
3) உறவல் முறை (Fictive Kinship Relation)

இரத்த உறவு என்பது நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ உயிரியல் (Biological) அடிப்படையிலான உறவினர் என்று சமுதாயத்தால் ஒப்புக்கொள்ளப்பட்ட உறவினர்களாகும் குறிப்பாகத் தமிழகக் கிராமச் சமுதாயத்தில் பங்காளிகள் என்று குறிப்பிடும் ஒரே கால்வழியைச் சேர்ந்தவர்களைக் கூறலாம்.

மண உறவினர் என்பது சமுதாயத்தால் அங்கீகரிக்கப்பட்ட திருமணத்தின் மூலம் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ இணைக்கப்பட்டவர்களைக் கூறலாம்.

உறவல்முறை என்பது சமூக ரீதியில் அங்கீகரிக்கப்பட்டது. ஆனால் உறவல் நிலையில் காணப்படுகிறது. இதில் தத்து அடிப்படையிலான உறவினர்களைக் கூறலாம். சான்றாக ஒரு குலத்தை எடுத்துக்கொண்டால் அக்குலத்தைச் சேர்ந்த மக்கள் எல்லோருக்கும் பொதுவாக ஒரு மூதாதையர் இருந்ததாகக் கருதுகின்றனர். எனவே ஒரே வயது பிரிவில் உள்ள எல்லோரும்

சகோதர சகோதரிகள் என்று கருதுகின்றனர். இந்நிலையில் ஒருவர் தத்து எடுக்கும் நபரும் அதே வயது பிரிவில் உள்ளவர்களுக்கு சகோதரர் அல்லது சகோதரியாகக் கருதுகின்றனர், இங்குத் தத்தெடுக்கப்பட்டவர் உறைமுறைச் சொற்களால் குறிப்பிடப்பட்டாலும் குடிவழிப்பட்டியலில் அவரைத் தொடர்புபடுத்த இயலாது. எனவே உறவல் முறை எனக் குறிப்பிடுகின்றனர்.

மேலே குறிப்பிடப்பட்ட மூன்று விதமான உறவுகளும் சமூகக் குழுக்களின் அங்கத்தினர்களுக்கிடையிலான உறவுகளை வரையறுப்பதாகக் காணப்படுகின்றன. உறவல் முறையை விட இரத்த மற்றும் மண உறவு அதிகமாகக் காணப்படுகின்றன. இம்மூன்றுவித உறவுகளும் முற்றிலுமாக தனிப்பட்டவை என்று கூற இயலாது. ஒரே சமூகக்குழுவில் மூன்றுவித உறவுகளும் காணப்படுவதுண்டு. சான்றாக ஒரு தனிக்குடும்பத்தில் இரத்த மற்றும் மண உறவினர்களோடு ஒரு தத்துப்பிள்ளையும் காணப்படலாம்.

இரத்த உறவினர், மண உறவினர் என்ற வகைப்படுத்தலில் பல சிக்கல்கள் உள்ளன டுமாண்டின் இரத்த உறவு-மணஉறவு பாகுபாட்டில் காணப்படும் சிக்கல்களை சுப்பாரெட்டி (Subba Reddy 1984) சுட்டிக்காட்டியுள்ளார். அவற்றில் சில கருத்துக்களைக் காணலாம்.

தாயின் தகப்பனையும், தந்தையின் தகப்பனையும் குறிப்பிடுவதற்கு ஏன் ஒரு சொல் காணப்படுகிறது என்ற கேள்வி ஒரு சிக்கலான விளக்கத்தைக் கொடுக்க டுமாண்டைத் தூண்டுகிறது. தகப்பனின் தலைமுறையில் மாமன் முறை திருமணமானது இருதாத்தாக்களுக்குமிடையில் ஒரு மண உறவு இணைப்பு இருப்பதாகக் கருதத் தூண்டுகிறது. இதுதான் தகப்பனின் தகப்பனையும் தாயின் தகப்பனையும் வேறுபடுத்த இயலாமல் ஒரே சொல்லால் குறிப்பிடுவதற்குக் காரணமாகும். இங்கு ஒருவிதத்தில் இருவரும் மண உறவினராகவும் உள்ளனர்.

ஒருவரின் பெற்றோர் இரத்த உறவினராக இருப்பதால் பெற்றோரின் தகப்பன்மாரும் இரத்த உறவினராகும். இதே சமயம் அவர்கள் ஒரு திருமணத்தொடர்புடையவர்கள் என்றும் டுமாண்டு குறிப்பிட்டுள்ளார். இங்கு எந்த ஒரு உறவினர்களும் ஒரே வேளையில் இரத்த உறவினராகவும், மண உறவினராகவும் இருப்பது திராவிட உறவுமுறையின் போக்கிற்கு எதிராகக் காணப்படுகிறது.

தென்னிந்தியாவில் ஒரு கால்வழி பிரிவுகளின் பொதுவான நிலவுதலை டுமாண்டு குறிப்பிட்டாலும் இரத்த மற்றும் மண உறவின் ஆசார நடைமுறையைக் கணக்கில் கொள்வதில் கால்வழிக்கு எந்த ஒரு இடமும் கொடுக்க மறுக்கின்றார். டுமாண்டின் வகைப்படுத்தலில் தகப்பனின் பிள்ளைகளும், தாயின் சகோதரனின் பிள்ளைகளும் ஒருவருக்கொருவர் மணஉறவை மரபுரிமையாகப் பெறுகின்றனர். இதே போன்று தாயின் பிள்ளைகளும், தகப்பனின் சகோதரியின் பிள்ளைகளும் ஒருவருக்கொருவர் மணஉறவை மரபுரிமையாகப் பெறுகின்றனர். ஆனால் புறக்கணிக்கமுடியாத முக்கியமான ஒரு உண்மை யாதெனில் ஒருவரின் பிள்ளைகள் அவருடைய தாயின் சகோதரனின் மகளின் பிள்ளைகளோடோ அல்லது அவருடைய தகப்பனின் சகோதரியின் மகளின் பிள்ளைகளோடோ மண உறவு கொள்ளக்கூடாது. அவர்கள் அவருடைய தாயின் சகோதரனின் மகனின் பிள்ளைகளோடும் அவருடைய தகப்பனின் சகோதரியின்மகனின் பிள்ளைகளோடும் மட்டுமே திருமணத்தொடர்பு கொள்ளலாம் இதுபோன்ற ஒரு கால்வழி கணக்கிடல் தென்னிந்தியா முழுவதும் காணப்படுகிறது. இத்தகைய ஒரு கால்வழி கணக்கிடல்தான் ஒன்றுவிட்ட சகோதரர்கள் (Parallel Cousins) மற்றும் மாமன் முறை சகோதரர்களுக்கு (Cross Cousins) இடையிலான வேறுபாட்டிற்கும் ஒன்றுவிட்ட சகோதரர்களுக்கிடையிலான திருமணங்களைத் தடைசெய்து மாமன்முறை சகோதரர்களுக் கிடையிலான திருமணங்களை ஆதரிக்கும் விதிகளுக்கும் வழிகாட்டுவதாகும்.

ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தை எடுத்துக்கொண்டால் ஒருவரின் அந்தஸ்து அவருடைய பிள்ளைகளுக்கும் பின்னர் அவருடைய மகனின் பிள்ளைகளுக்கும் ஒப்படைக்கப்படுகிறது. (மகளின் பிள்ளைகளுக்கு அல்ல) இங்கு ஒருவரின் தகப்பனின் அந்தஸ்து முதலில் தகப்பனுக்கும் பின்னர் தனக்கும் ஒப்படைக் கப்படுகிறது என்பது புலனாகிறது. இதே போன்று தாயின் தகப்பனின் அந்தஸ்தும் முதலில் அவருடைய பிள்ளைகளுக்கும், அடுத்த தலைமுறையில் அவருடைய மகனின் பிள்ளைகளுக்கும் ஒப்படைக்கப்படுகிறது. (அவருடைய மகளின் பிள்ளைகளுக்கு அல்ல). இவ்வாறிருக்கும்போது டுமாண்டு தாயின் இரத்த உறவாக வகைப்படுத்தியிருப்பது சரியாக இருக்கமுடியாது.

அவ்வாறு கருதி தாயின் தகப்பனையும் தகப்பனின் தகப்பனையும் ஒத்தஇனமாகத் தொகுப்பதும் சரியாக இருக்க முடியாது வாதமுறைபின்படி (Logic) தாயின் தகப்பன் இரத்த உறவாக இருந்கால் ஒருவரின் மகளின் பிள்ளைகளும் சகோதரியின் பிள்ளைகளும் கூட இரத்த உறவினராகவே இருக்கவேண்டும்.

மேலும் டுமாண்டின் ஆய்வின் மிக முக்கியமான குறைபாடு அவர் தாயை இரத்த உறவுபிரிவிலும் தகப்பனின் சகோதரியை மணஉறவு பிரிவிலும் வகைப்படுத்தியிருப்பதிலிருந்து உருவா கிறது. ஒருவருடைய தாயும் தகப்பனும் இரத்த உறவினராக இருந்தால் அவர்களும் ஒருவருக்கொருவர் இரத்த உறவின ராகவே இருக்கவேண்டும்; மண உறவினராக இருக்க இயலாது. இத்தகைய முரண்பாடுகள் டுமாண்டின் விதிமுறைகளில் காணப்படுகின்றன. எனவே டுமாண்டின் விதிமுறையானது வாதமுறையானதும் (Logical) முரண்பாடற்றதுமா என்பது கேள்விக்குரியதாகும். டுமாண்டின் விதிமுறையில் ஒருவரின் தகப்பனின் சகோதரி ஒரு திருமணமான பெண் என்ற முறையில் இரத்த உறவினர் அல்ல என்று குறிப்பிடும்போது ஒரு திருமண மான சகோதரியோ அல்லது திருமணமான மகளோ எப்படி

இரத்த உறவு பிரிவில் இருக்கமுடியும்? திருமணமான பெண் என்ற நிலையில் ஒருவரின் தாய் ஒரு மணஉறவுப் பிரிவிலிருந்து இரத்த உறவினராக மாறினால் அவருடைய மனைவி, அல்லது மகனின் மனைவி அல்லது சகோதரனின் மனைவி ஆகியோரை எவ்வாறு மண உறவினராகக் கொள்ளமுடியும்?

தாயை இரத்த உறவில் வகைப்படுத்துகின்ற டுமாண்டின் விதிமுறையைத் திராவிட மொழிபேசும் 9 % மக்களால் கடைப் பிடிக்கப்பட்டுவரும் சகோதரியின் மகள் திருமணத்தோடு தொடர்புபடுத்தும்போது மேலும் பிரச்சனைகள் உருவாகின்றன. சகோதரனும் - சகோதரியும் இரத்த உறவினராக இருந்தால் தாயும்-மகளும் கூட இரத்த உறவினர்களாகும். (டுமாண்டின் படி) ''இரத்த உறவினரின் உறவினர் இரத்த உறவினர்'' என்ற விதியின்படி ஒருவர் சகோதரியின் மகளைத் திருமணம் செய்து கொள்ள இயலாது. ஆனால் டுமாண்டு இதனை ''நமது விதி முறைகளின் அடிப்படையைத் தாக்குகின்ற தொந்தரவு தரும் குறியீடுகள் (Variables) என குறிப்பிட்டு இவ்விவாதத்தை விட்டுவிடுகிறார். எனவே டுமாண்டின் விதிமுறைகள் தென்னிந்தியாவில் பரவலாக நிலவியிருக்கும் திருமணமுறையாகிய மூத்த சகோதரியின் மகள் திருமணமுறையை கணக்கில் கொள்ளாமல் காணப்படுகின்றன.

## உறவுகளின் நிலைகள் (Levels of Kinship Relations)

உறவுமுறைத் தொடர்புகள் உறவினரின் நெருக்கத்தைப் பொறுத்து வேறுபடுகிறது. நேரடித்தொடர்பு குடிவழிப் பட்டியலில் குறுகிய தூரத்தையும் மறைமுகமானத் தொடர்பு குடிவழிப் பட்டியலில் அதிக தூரத்தையும் உடையதாகக் காணப்படுகிறது. இத்தகைய உறவுகளின் படிநிலைகளை முர்டாக் (Murdock, 1949:94) நான்கு நிலைகளில் விளக்குகின்றார்.

1 முதல்நிலை உறவினர் (Primary Relations)
2 இரண்டாவது நிலை உறவினர் (Seccndary Relations)
3 மூன்றாவது நிலை உறவினர் (Tertiary Relatiots)
4 தூரத்து உறவினர் (Distant Relations)

மேலும் அவர் எந்த ஒரு சமுதாயத்திலும் ஒரு தனி நபருக்கு 7 வெவ்வேறு வித முதல்நிலை உறவினர்களும் 33 இரண்டாவது நிலை உறவினர்களும் 151 மூன்றாவது நிலை உறவினர்களும், வெவ்வேறு கோணங்களில் பல அளவுகளிலான ஏராளம் தூரத்து உறவினர்களும் காணப்படுவார்கள் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

ஒரு தனி நபரின் முதல்நிலை உறவினர்கள் அவருடைய பிறப்புக் குடும்பத்தைச் சேர்ந்த தந்தை, தாய், சகோதரி மற்றும் சகோதரன் ஆகியோரும் அவருடைய திருமணத்தின் மூலம் உருவாகிய குடும்ப அங்கத்தினர்களாகிய மனைவி, மகன் மற்றும் மகள் ஆகியோருமாவர். ஒருவரின் இரண்டாவது நிலை உறவினர்கள் அவருடைய தகப்பனின் தகப்பன், தகப்பனின் தாய், தகப்பனின் சகோதரன், தகப்பனின் சகோதரி முதலியோராவர். ஒருவரின் முதல்நிலை உறவினரின் முதல் நிலை உறவினர்கள் அவருடைய இரண்டாவது நிலை உறவினராகின்றனர். ஒருவரின் தகப்பனின் தகப்பனின் தகப்பன், தகப்பனின் சகோதரியின் தாய், தகப்பனின் சகோதரனின் பிள்ளைகள் முதலியோர் அவருடை" மூன்றாவது நிலை உறவினர்களாவார்கள். அவருடைய மூன்றாவது நிலை உறவினர்கள் அவருடைய இரண்டாவது நிலை உறவினர்களின் முதல்நிலை உறவினர்களாவார்கள். இவ்வகைப்படுத்தல் "உறவுமுறை விரிவாக்கக் கோட்பாட்டின்" (Extension Theory ot Kinship) அடிப்படையிலானது எனவும் கருதலாம். அதாவது உயிரியல் பிரிவின் (Biological grcup) அங்கத்தினர்களாகிய பெற்றோர் பிள்ளைகளிடையே தோன்றும் பற்றுறுதி (Loyalty) மற்றும் பாசம் ஆகிய உணர்வுகள் தூரத்துப் பிரிவைச்சார்ந்த உறவினர்

களுக்கும் விரிவாசகப்படுகிறது. இவ்வாறு விரிவாக்கப்படும் போது பற்றுறுதி மற்றும் பாசம் ஆகிய உணர்வுகளின் அளவு (Degree) வேறுபடுவதுண்டு. அதன் அடிப்படையில் தான் உறவினர்களை முதல்நிலை உறவினர்கள், இரண்டாவது நிலை உறவினர்கள், மூன்றாவதுநிலை உறவினர்கள் மற்றும் தூரத்து உறவினர்கள் எனப் பாகுபடுத்துகின்றனர்.

இத்தகைய பாகுபாட்டின் அடிய்படையில் உறவுமுறை கடப்பாடுகள், உதவிமுறை, போக்குவரத்து ஆகியவற்றிலும் வேறுபாடுகள் ஏற்படுவதுண்டு. சான்றாக ஒரு தனி நபரை எடுத்துக் கொண்டால் தன் முதல் நிலை உறவினர்களுக்குச் செய்யவேண்டிய கடப்பாடுகள், உதவிகள் ஆகியவற்றில் பெரும்பாலும் தவறுவதில்லை. ஆனால் இரண்டாவது மற்றும் மூன்றாவது நிலை உறவினர்களுக்கு உதவுதல் உறவு முறை கடப்பாடுகளை நிறைவேற்றுதல் ஆகியவற்றில் தவறி விடுவதுண்டு. எனவே முதல் நிலை உறவினரோடு உறவுமுறை அடிப்படையிலான நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதைக் காணலாம்.

இரண்டாவது நிலை உறவினர்களை முதல் நிலை உறவினர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது மக்களின் தோழமை அல்லது நெருக்கத்தில் இரண்டாவது நிலை உறவினர்கள் அதிக முக்கியத்துவம் அற்றவர்களாகக் காணப் படுகின்றனர். குறிப்பாக மேற்கத்திய சமுதாயங்களில் இரண்டாவது நிலை உறவினர்களோடுள்ள தொடர்பும் அவர்களைப் பற்றிய அறிவும் மிகக்குறைவாகக் காணப் படுகின்றன. இது உயிரியல் மற்றும் பல சமூகக் காரணிகளின் அடிப்படையில் வேறுபடுகிறது. தொழில் மயமாக்கப்பட்ட சமுதாயங்களில் ஒருவரின் உறவுமுறைத் தொடர்பானது ஒன்றுவிட்ட சகோதரர்கள் அல்லது அவர்களின் முதல் நிலை உறவினர்களோடு நின்றுவிடுவதுண்டு. வம்சாவழி அடிப்படையில் தூரத்து உறவினர்களோடு எந்தவித தொடர்பும் இருப்பதில்லை. சாவுச்சடங்கு அல்லது ஒரே பகுதியில் வாழ்தல் போன்ற குறிப்பிட்ட சிலசூழ்நிலைகளில் மட்டுமே தொடர்பு ஏற்படுகிறது.

இத்தகைய தொடர்புகளுக்கு மூன்று முக்கிய காரணங்கள் உள்ளன. முதலாவது மக்களிடையே காணப்படும் பல வாழ்க்கைச் சடங்குகள் உறவினர்களைப் பெரிதும ஈடுபடச் செய்கிறது. ஒருவர் அத்தகைய சடங்குகளுக்கு உறவினர்களை அழைக்கும்போது இயல்பாகவே உறவினர்களும் அவரை அழைப்பார்கள். அப்போது உறவினர்கள். ஒருவரையொருவர் சந்திப்பதற்குத் தருணம் கிடைக்கிறது. இரண்டாவது, உறவினர்கள் பொதுவான இடை நிலை முதல் நிலை மற்றும் இரண்டாவது நிலை உறவினர்களை உடையவர்களாகக் காணப்படுவதால் ஒருவருக்கொருவர் தொடர்பு ஏற்படுகிறது. குறிப்பாக மாமன், மாமி, மருமகன், மருமகள் போன்ற உறவுகளை எடுத்துக்கொண்டால் அத்தகைய உறவினர்களோடு அதிக தொடர்பு ஏற்படுவது முக்கியமாக இடைப்பட்ட உறவினர்கள் மூலமாகும். மேற்கத்திய சமுதாயத்தில் கிறிஸ்து பிறப்புப் பண்டிகையின்போது உறவினர்கள் ஒன்றாகச்சேர்வதையும் ஒருவரையொருவர் சந்திப்பதையும் காணலாம். மூன்றாவது காரணம் உறவினர்கள் அடிக்கடி சந்திப்பதற்கான வாய்ப்புடைய அமைப்பு இத்தகைய அமைப்பு நிரந்தர மாக ஒரே பகுதியில் வாழும் உறவினர்கள் மத்தியில் காணப்படுகிறது. இந்நிலையில் ஒரு தனிநபரை எடுத்துக்கொண்டால் அண்மையில் வாழும் ஏராளம் இரண்டாவது நிலை உறவினர்களை உடையவர்களாக இருப்பார்கள். இவர்கள் ஒரே இடத்தில் வாழ்வதால் அவர்களுக்கிடையிலான தொடர்புகள் மற்றும் சந்திப்பு ஆகியவை திட்டமிடப் பட்டதாக இருக்காது. ஆனால் அவ்வப்போது நடைபெறும்.

உறவினர்கள் வெளி ஊர்களில் ஒன்றாக வேலை பார்க்கும்போது இரண்டாவது நிலை அல்லது தூரத்து உறவினர்களாக இருந்தாலும் அதில் இணைப்பு அல்லது நெருக்கம் ஏற்படுகிறது. இங்கு ஒரே இடத்தில் வேலை பார்ப்பதன் மூலம் உறவினர் என்ற நிலையில் மட்டுமல்லாமல் நண்பர் என்ற முறையிலும் இணைக்கப்படுகின்றனர்.

தனித்து வாழ்பவர்கள் மற்றும் குழந்தைகள் இல்லாத விதவைகளாய் இருப்பவர்களைக் குறித்து அவர்களின் நெருங்கிய உறவினர்களுக்கு பொறுப்பு உண்டு. இத்தகைய பொறுப்பினை மனப்பூர்வமாக விரும்பாவிட்டாலும் தங்களின் கடமை என்று ஏற்றுக்கொள்கின்றனர். உறவினர்களுக்கிடையிலான இணைப்புகள் அல்லது கடப்பாடுகள் ஏனைய உறவினர்களால் வரையறுக்கப்படும்போது தனிப்பட்ட விருப்பமானது முக்கியத்துவம் இழப்பதைக் காணமுடிகிறது

## உறவுமுறை அமைப்பு :

ஒரு சமூக அமைப்பின் பெரும்பகுதியும் உறவுமுறை அமைப்போடு தொடர்புடையதாகக் காணப்படுகிறது. எந்த ஒரு சமுதாயத்திலும் தனி நபர்களுக்கிடையிலான உறவுகள் வரையறுக்கப்படுவது திட்டவட்டமான பண்பாட்டு விதிமுறைகளின் அடிப்படையிலாகும். இத்தகைய உறவுகளை வரையறுப்பதற்கு ஒவ்வொரு பண்பாடும் அதற்கென தனி விதிமுறைகளை உடையதாகக் காணப்படுகிறது. இம்முறையில் எந்த இரு பண்பாடுகளும் ஒத்ததாக இருப்பதில்லை, இன்னொரு புறத்தில் பார்க்கும்போது எந்த ஒரு பண்பாடும் அதன் உறவுமுறை அமைப்பில் முற்றிலுமாகத் தனித்தன்மை வாய்ந்ததாகக் காணப்படுவதில்லை. இந்நிலையில் உறவினர்களைப் பாகுபடுத்துவதில் ஒரு சமுதாயத்தில் அல்லது பண்பாட்டில் கையாளப்படும் அதே விதிமுறைகளை இன்னொரு சமுதாயத்தைப் பற்றிய ஆய்வில் கையாளுவது அவ்வளவு பொருத்தமாக அமைவதில்லை. சான்றாக இரத்த உறவினர், மண உறவினர், என்ற பாகுபாட்டில் திருமண முறையின் அடிப்படையில் பல்வேறு வேறுபாடுகள் இருப்பதைக் காணலாம். எனவே குறிப்பிட்ட சமுதாயத்தினர் உறவினர்களை எவ்வாறு பாகுபடுத்துகிறார்கள் என்பதன் அடிப்படையில் ஆராயவேண்டும். சான்றாக தமிழகத்தின் தென் பகுதியில் வாழும் வேளாளர்கள் உறவினர்களை பங்காளி

தாயாதி, ஒறமுறையார் (மண உறவினர்) என பாகுபடுத்து கின்றனர். இவ்வகைப்படுத்தல் சொத்துரிமை மற்றும் திருமண முறையை அடிப்படையாகக் கொண்டதாகும். அதாவது பங்காளி என்பவர்கள் சொத்துரிமை உடையவர்கள். தாயாதி என்பவர்கள் சொத்துரிமை அற்றவர்கள். ஒற முறையார் என்பவர்கள் திருமணத்தின் மூலம் இணைக்கப் பட்டவர்கள். இத்தகைய பாகுபாடு ஏனைய சமுதாயங்களில் காணப்படுவதில்லை. எனவே, ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் உறவுமுறைப் பிரிவுகளை ஆராயும்போது அச்சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் உறவினர்களை எவ்வாறு வகைப்படுத்து கிறார்களோ அந்த அடிப்படையில் ஆராய்வது சிறந்ததாகும்.

பொதுவாக உறவுமுறை அமைப்பானது ஒரு சமூகக் குழுவிலிருந்து வேறுபடுகிறது. காரணம் உறவுமுறையானது எப்போதும் குழு எல்லையையும் தாண்டிச் செல்வதாக உள்ளது. ஆனால் சில வேளைகளில் உறவுமுறையும் ஒரு குழுவில் அல்லது குழுக்களுக்கிடையில் காணப்படும் உறவு களை வரையறுப்பதாகவும் குறிப்பிடுவதாகவும் உள்ளது. சான்றாக சில உறவுமுறை அமைப்புகள் ஒரு தனிநபரின் தலைமுறையைச் சேர்ந்த மக்களோடுள்ள உறவை ஒரு குறிப்பிட்ட விதத்தில் சுட்டிக் காட்டுகிறது. அத்தகைய உறவுமுறையை மானிடவியலார் கசின் முறையமைப்பு (Cousin Systems) என்று குறிப்பிடுகின்றனர். வேறு சில உறவுமுறை அமைப்புகள் ஒருவரின் உறவை அவருடைய முதல் முன் தலைமுறையைச் சேர்ந்த நபர்களோடு தொடர்புபடுத்தி வரையறுக்கின்றன. இதனை அவங்குலார் (Uncle) அமைப்பு என குறிப்பிடுகின்றனர். ஆனால் எல்லா உறவுமுறை அமைப்புகளும் கீழே கொடுக்கப்பட்டுள்ள சில தன்மைகளை உடையதாகக் காணப்படுகின்றன.

(1) உறவுமுறையானது மக்களை ஒரு தனிநபரோடு தொடர்புபடுத்தி குறிப்பிட்ட தன்மை உடையவர்களை பெயர் சூட்டப்பட்ட ஒரு பிரிவாகப் பிரிக்கிறது.

(2) ஒரு தனி நபரை மையமாகக் கொண்டு வெவ்வேறு விதமான நபர்களை வெவ்வேறு பெயர் சூட்டப் பட்ட வெவ்வேறு பிரிவுகளாகப் பிரிக்கிறது.

இதன் விளைவாக இரத்த, மண மற்றும் தத்து ஆகிய உறவுகளின் மூலம் ஒருவரோடு இணைக்கபபட்ட அனைவருமே பெயரிடப்பட்டு வரையறுக்கப்பட்ட ஏதாவது ஒரு பிரிவில் சேர்க்கப்படுகின்றனர் இத்தகைய வகைப்படுத்தல் தற்செயலாகஏற்பட்டவை அல்ல: வரையறுக்கப்பட்ட விதிமுறைகளுக்குட்பட்டவையாகும்

ஒரு வியாபார அமைப்பில் வேலைபார்க்கும் இருவரிடையே காணப்படும் தொடர்பு அல்லது வேலைபார்ப்பவர் வேலையில் அமர்த்துவோர் ஆகியவர்களிடையே காணப்படும் உறவுகள் பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்டதாகும் ஆனால் உறவுமுறை அடிப்படையில் இணைக்கப்பட்ட குழுக்கள் அதிக சமூகப் பொருளாதார இணைப்புகளால் இணைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். சான்றாக ஒருவரின் தகப்பன் அவருடைய அடுத்த மூதாதையர் மட்டுமல்லாமல் அவருடைய பொருளாதார உதவியாளர். அவரைக் கட்டுப் படுத்துவோர், மதவழிகாட்டி ஆகியோருமாவர்.

உறவுமுறை அமைப்பு ஆய்வில் குடும்ப அமைப்பு மிக முக்கிய இடத்தை வகிக்கிறது. பொதுவாகத் தாய்வழி மற்றும் தந்தைவழி கூட்டுக்குடும்பம் மற்றும் தனிக்குடும்பம் இவற்றிற்கு இடைப்பட்ட சிறு கூட்டுக்குடும்பம் ஆகியவை இந்திய உறவுமுறை அமைப்பில் காணப்படும் குடும்பங்களாகும். சமூகக்காரணங்களான (Social factors) பொருளாதாரம் கல்வி, தொழில்மயம் மேலும் சுற்றுப்புறச் சூழ்நிலைகள்

ஆகியவை குடும்ப அமைப்பில் பல மாறுதல்களை ஏற்படுத்தியுள்ளது. பெரும்பாலும் கூட்டுக்குடும்பங்கள் பொருளாதாரத்தையே அடிப்படையாகக் கொண்டவை. போதுமான பொருளாதார வசதியில்லாத நிலையில் கூட்டுக்குடும்பங்கள் தனிக்குடும்பங்களாக மாறுவதைக் காணலாம். கல்வி மற்றும் வேலை காரணமும் கூட்டுக்குடும்பங்கள் தனிக்குடும்பங்களாகப் பிரிவதுண்டு. தற்போதைய தொழில் மயமாக்கப்பட்ட நகர்ப்புறங்களை எடுத்துக்கொண்டால் பெரும்பாலும் தனிக்குடும்பங்களாகவே காணப்படும். இத்தகைய மாறுதல்களினால் தூரத்து உதவினர்களைக் குறிப்பிடும் சொற்களையும் இழந்துவிடுவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது. ஆனால் ஒரு கிராமப்புறத்தை எடுத்துக் கொண்டால் மக்களிடையே உறவுமுறை அடிப்படையிலான பல இணைப்புகள் இருப்பதைக் காணலாம். இத்தகைய இணைப்புகள் தங்கள் தொழில்களோடும், நிலத்தோடும், சமூக அமைப்புகளோடும் தொடர்புடையதாகவும் அமைகிறது. சமூகப் பொருளாதார அடிப்படையில் முழுவளர்ச்சியடையாத மக்கள் தங்கள ஒற்றுமைக்கும், வளர்ச்சிக்கும் தங்கள் உறவுமுறை அமைப்பையும் உறவினர்களையும் அதிகமாகச் சார்ந்திருப்பதைக் காணலாம். சான்றாக நம நாட்டில் வாழும் பழங்குடி மக்களும் பின்தங்கிய வகுப்பைச் சார்ந்தவர்களும் பெரும்பாலும் தங்கள் சமூகக் கட்டுப்பாடுகளையும் உறவுமுறை அமைப்டையும் சார்ந்து வாழ்வதைக் காணலாம்.

## உறவுமுறை அமைப்பும் சமூக அமைப்பும் :

லலிதா பிரபு (Lalitha Prabhoo, 1934) உறவுமுறை அமைப்புக்கும் பெரும் சமூக அமைப்புக்குமிடையிலான வேறுபாடுகளை விளக்கும்போது பெரும் சமூக அமைப்பின் முக்கிய பண்புக்கூறுகளின் பாகுபாட்டிற்கு உறவுமுறை அமைப்பு பெருமளவில் அடிப்படையாக அமைகிறது என்றும் சில குறிப்பிட்ட பண்புக் கூறுகளில் சமூக அமைப்பும் உறவுமுறை அமைப்பும் முற்றிலுமாக வேறுபடுகின்றன என்றும் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய வேறுபாடுகளில் சில கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1) உறவுமுறை அமைப்பில் காணப்படும் இரு பிரிவு அதாவது பிறப்புக்குடும்பம் (Family of Orientation) மற்றும் திருமணத்தின் மூலம் உருவாகிய குடும்பம் (Family of Procreation) ஆகியவை முற்றுலுமாக உயிரியல் அடிப்படையிலானதாகும். இது பெரும் சமூக அமைப்புகளில் காணப்படுவதில்லை.

2) உறவுமுறை அமைப்பில் தகப்பனிடமிருந்து மகன் பெற்றுக்கொள்ளும் கடமைகள், தொடர்புகள் முதலியன பல தலைமுறைகளுக்குப் பாதுகாக்கப்பட்டு வருவதுண்டு. இது பெரும் சமூக அமைப்புகளில் காணப்படுவதில்லை.

3) உறவுமுறை அமைப்பில் காணப்படும் கூறுகளின் நிரந்தரத் தன்மையை சமூக அமைப்புக் கூறுகளோடு தொடர்புபடுத்திப் பார்க்கும்போது உறவுமுறைக் கூறுகளின் தன்மை மிகவும் வலுவானது.

4) பெரும் சமூக அமைப்புகளில் மக்கள் பிரிவின் சீரான தன்மை அல்லது உறவுகள் ஒருவருடைய வாழ்க்கையின் ஒருபகுதி அல்லது அவருடைய வாழ்நாள் முழுவதும் மட்டுமே நிலை நிற்கும். ஆனால் உறவுமுறை அடிப்படையிலான தலைமைப்பதவி தொழில்கள் முதலியன பாரம்பரியமாக அல்லது கால்வழி மூலம் பெறப்படுகிறது.

5) குறிப்பிட்ட உறவுகளைக் குறிப்பிடும் முறையான சொற்கள் ஒவ்வொன்றும் ஒரு தனி நபரை மையமாகக் கொண்டதாகும். பல உறவுமுறை இணைப்புகளோடு ஒவ்வொரு சொல்லும் அண்மையில் அல்லது தூரத்தில் ஒன்றுக்கொன்று தொடர்புபட்டிருப்பதைக் காணலாம். பல தலைமுறைகளுக்கு விரிவாக்கப்பட்டுள்ள இத்தகைய அமைப்பு பெரும் சமூக அமைப்புகளில் காணப்படுவதில்லை.

உறவுமுறை அமைப்பு - சமூக அமைப்பு என்ற பாகுபாட்டைப்போன்று மக்களிடையே காணப்படும் உறவுகளையும் இரு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1) உறவுமுறை அடிப்படையிலானது

2) உறவுமுறையற்றது.

உறவுமுறை அடிப்படையிலான பிரிவுகள் திருமணத்தின் மூலமும் கால்வழியின மூலமும் அல்லது தத்து எடுத்தல் மூலமும் உருவாகிறது. உறவுமுறையற்ற பிரிவுகள் பொருளாதார அல்லது மத அடிப்படையிலானதாகும் இவ்வாறான உறவு முறை மற்றும் உறவுமுறையற்ற தன்மையானது குழு அங்கத்தினர்கள் எவ்வாறு தொடர்புடையவர்களாகின்றனர் என்பதன் அடிப்படையைக் குறிப்பிடுகிறது. ஒரு தனிக்குடும்பத்திலுள்ள சகோதரரர்களை எடுத்துக்கொண்டால் அவர்களின் பெற்றோராகிய பொதுவான முன்தலைமுறையினரின் கால்வழியின் மூலம் இணைக்கப்பட்டவர்களாகும்.

ஒரு வியாபார நிறுவனத்தில் பணிபுரியும் உடன் பணியாளர்களுக்கு இடையிலான உறவு; மற்றும் வேலைபார்க்கும் இடத்தில் வேலைப்பார்ப்பவர் - வேலையில் அமர்த்துவோர் ஆகியோர்களுக்கிடையிலான உறவு பொருளாதார அடிப்படையிலானதும் உறவுமுறையற்றதுமாகும். சிலவேளைகளில் மேலே குறிப்பிட்ட இரு பிரிவுகளும் முற்றிலுமாக வேறுபட்டவை எனக் கூற இயலாது. பெருமபான்மையான உறவுமுறை அடிப்படையிலான குழுக்களும் சமூக, பொருளாதார மற்றும் மத கட்டுக்களால் மேலும் இணைக்கப்பட்டிருப்பதைக் காணலாம். உண்மையிலேயே சமூகப் பொருளாதார இணைப்புகளின் அடிப்படையில்தான் உறவுமுறை அந்தஸ்துகள் வரையறுக்கப்படுகின்றன. ஒருவரின் தகப்பன் அவருடைய முதல் முன் தலைமுறையினர் மட்டுமல்ல; அவருடைய பொருளாதார உதவியாளர், தன்னைக் கட்டுப்படுத்துபவர், மதவழி காட்டி போன்ற பலவற்றைக் கூறலாம்.

உறவுமுறையற்ற பிரிவுகளிலும் ஒருவரையொருவர் உறவு முறைச்சொற்களால் அழைப்பதைக் காணலாம். சான்றாக ஒரு தொழிற்சங்கத்தின் உறுப்பினர்கள் அல்லது ஒரு மத கூட்டமைப்பின் அங்கத்தினர்கள் ஒருவரையொருவர் சகோதரன் அல்லது சகோதரியைக் குறிப்பிடும் சொற்களால் அழைப்பதைக் காணலாம். மதப்போதகரை 'Father' என்று தகப்பனைக் குறிப்பிடும் சொல்லால் அழைப்பதைக் காணலாம்.

பொதுவாக மனித சமுதாயத்தில் உறவுமுறையற்ற குழுக்கள் மற்றும் உறவுகள் அதிகமாக இருப்பதைக் காணலாம். சமூகம் மற்றும் தொழில் மயம் ஆகியவற்றின் அடிப்படையில் எளியநிலையில் காணப்படும் சமுதாயங்களில் குழு அமைப்புக்கு உறவுமுறையானது முதல்நிலை அடிப்படையாகக் காணப்படுகிறது. சமூகம் மற்றும் தொழில்மயம் விரிவுடையும்போது உறவுமுறையற்ற தொடர்புகள் பன்மடங்காக அதிகரிப்பதைக் காணலாம். சான்றாக தொழில் மயமாக்கப்பட்ட நகர்ப்புறங்களில் வாழும் தனிக்குடும்பங்களை எடுத்துக்கொண்டால் உறவு முறை அடிப்படையிலான தொடர்புகள் மிகக்குறைவாகவே காணப்படுகின்றன. ஆனால் உறவுமுறையற்ற தொடர்புகள் அல்லது உறவுகள் அதிகமாக இருப்பதையும் சாதி எல்லைகளையும் தாண்டிச் செல்வதையும் காணலாம்.

உலகளவில் பல்வேறு சமூகங்களில் காணப்படும் உறவுமுறை அமைப்புகளை விளக்குவதற்கு ஒரே தலைமுறையைச் சேர்ந்த நபர்களுக்கிடையே காணப்படும் வேறுபட்ட உறவுமுறைப் பிரிவுகள் சான்றாகக் காணப்படுகின்றன. இதனை ஆங்கிலத்தில் (Cousin Systems) என குறிப்பிடுகின்றனர். அதாவது பெற்றோரின் உடன்பிறந்தாரின் பிள்ளைகளை வகைப் படுத்துதல். இதனை சற்று விளக்கமாகக் காணலாம்.

**பெற்றோரின் உடன்பிறந்தாரின் பிள்ளைகளை வகைப்படுத்தல்:**

ஒருவரின் பெற்றோரின் உடன்பிறந்தவர்களின் பிள்ளைகளை வகைப்படுத்துவதில் உலகின் பல சமுதாயங்களும் ஒன்றுக்

கொன்று வேறுபடுகின்றன. அமெரிக்க ஐக்கிய நாட்டை எடுத்துக்கொண்டால் ஒருவரின் தகப்பனின் சகோதரனின் பிள்ளைகள், தகப்பனின் சகோதரியின் பிள்ளைகள், தாயின் சகோதரனின் பிள்ளைகள், மற்றும் தாயின் சகோதரியின் பிள்ளைகள் ஆகிய எல்லோரும் ஒரே உறவுமுறைப் பிரிவில் வகைப்படுத்தப்பட்டு 'கசின்' என்ற ஒரே சொல்லால் குறிப்பிடுகின்றனர். இவர்கள் நான்கு வெவ்வேறு பெற்றோர் களின் பின்காமியராகும். இதில் சிலர் ஆண்களாகவும் சிலர் பெண்களாகவும் இன்னும் சிலர் வயதில் மூத்தவர்களாகவும் சிலர் வயதில் இளையவர்களாகவும் இருப்பார்கள். ஆனால் அவர்களை வேறுபடுத்தி குறிப்பிடுவதற்கான சொற்கள் எதுவும் இல்லை. இத்தகைய பாகுபாடு எல்லா சமுதாயத்துக்கும் ஒத்ததல்ல. இதில் பல தத்துவரீதியிலான (Logical) வேறு பாடுகளைக் காணலாம். சான்றாக ஒரு சமுதாயத்தில் பால் வேறுபாட்டைக் குறிப்பிடுவதாக இருந்தால் ஆண் 'கசின்' பெண் 'கசின்' என்ற பாகுபாடு ஏற்படுகிறது. இன்னும் அவர்கள் எந்த பெற்றோரின் சந்ததியினர் என்பதை வேறு படுத்தினால் இரண்டுவித ,பிரிவானது எட்டுவித உறவுகளாகப் பிரிக்கப்படுகின்றனர்.

அவை யாவன :

1) தாயின் சகோதரனின் ஆண் பிள்ளைகள்
2) தாயின் சகோதரனின் பெண் பிள்ளைகள்
3) தாயின் சகோதரியின் ஆண் பிள்ளைகள்
4) தாயின் சகோதரியின் பெண் பிள்ளைகள்
5) தகப்பனின் சகோதரனின் ஆண் பிள்ளைகள்
6) தகப்பனின் சகோதரனின் பெண் பிள்ளைகள்
7) தகப்பனின் சகோதரியின் ஆண் பிள்ளைகள்
8) தகப்பனின் சகோதரியின் பெண் பிள்ளைகள்.

மேலும் தொடர்புபடுத்தும் உறவினரின் (Linking Relation) பாலின் அடிப்படையில் உலகின் பல சமுதாயங்களும் மாமன்

முறை உறவு (Cross - Cousin) பங்காளி உறவு (Parallel Cousins) என்று வேறுபடுத்துகின்றனர். ஒருவரின் மாமன் முறை உறவு என்பது அவருடைய பெற்றோரின் உடன் பிறந்தவர்களின் பெற்றோரின் எதிர்பாலைச் சேர்ந்தவர்களின் பிள்ளைகளாகும். அதாவது அவருடைய தகப்பனின் சகோதரியின் பிள்ளைகள் மற்றும் தாயின் சகோதரனின் பிள்ளைகள் ஆகியோராவர். ஒருவரின் பங்காளி உறவு என்பது அவருடைய பெற்றோரின் உடன்பிறந்தவர்களில் பெற்றோரின் பாலைச் சேர்ந்தவர்களின் பிள்ளைகளாகும். அதாவது தாயின் சகோதரியின் பிள்ளைகள் மற்றும் தகப்பனின் சகோதரனின் பிள்ளைகள் ஆகியோராவர். இவ்வாறான இருவகைப்பிரிவுகள் ஒருவரின் பெற்றோரின் உடன்பிறந்தவர்களின் பாலின் அடிப்படையில் வேறுபடுத்தப்படுகிறது. இவ்வகைப்படுத்தல் முற்றிலுமாக ஒரு மனப்போங்கானது (Arbitrary) என கூற இயலாது. அச்சமுதாயத்தில் காணப்படும் வேறு பல பண்பாட்டு அடிப்படையிலான விதிமுறைகளையும் அடிப்படையாகக் கொண்டதாகும்.

இத்தகைய இரு பிரிவினை கீழே கொடுக்கப்பட்டுள்ள படத்தில் காணலாம்.




சில சமுதாயங்களில் மாமன்முறை உறவினரோடு திருமண உறவை ஆதரிப்பதையும் பங்காளி உறவினர்களோடு திருமண உறவைத் தடைசெய்வதையும் காணலாம். இத்தகைய வேறுபாடுகள் வேறுபட்ட பண்பாட்டு விதிமுறைகளைப் பிரதிபலிப்பதாகும். இவ்விதமான வகைப்படுத்தலை முர்டாக் (Murdock, 1949) ஆறு வகைகளாகப் பிரித்துள்ளார்.

**முர்டாக்கின் கசின் முறையமைப்பு வகைப்படுத்தல்**
(Murdocks classification of cousin system)

1) ஹவாயன் கசின் முறையமைப்பு (Hawaiian cousin system)

2) சுடேனிஸ் கசின் முறையமைப்பு (Sudanese cousin system)

3) எஸ்கிமோ கசின் முறையமைப்பு (Eskimo cousin system)

4) ஈறாக்கியஸ் கசின் முறையமைப்பு (Ironquois cousin system)

5) குறோ கசின் முறையமைப்பு (Crow cousin system)

6) ஒமேகா கசின் முறையமைப்பு (Omaha cousin system)

இவற்றைச் சற்றுச் சுருக்கமாகக் காணலாம்.

**உறவாயன் கசின் முறையமைப்பு:**

உறவாயன் கசின் அமைப்பில் ஒருவருடைய பெற்றோரின் எல்லாப் பிள்ளைகளையும் அப்பெற்றோரின் சகோதர சகோதரிகளின் பிள்ளைகளையும் ஒரு குறிப்பிட்ட பிரிவின் கீழ் வகைப் படுத்தலாம். இவர்களிடையே உறவுமுறைச் சொற்களில் குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் இல்லை. ஒரே உறவைக் குறிப்பிடும் ஒரே சொல்லால் எல்லோரையும் அழைக்கின்றனர். ஆனால் இவர்கள் பாலின் அடிப்படையில் வேறுபடுத்தப் படுகிறார்கள். படத்தில் A-ம் A¹ ம் ஆணையும் பெண்ணையும் வேறுபடுத்தப் பயன்படுத்தப்பட்டுள்ளது. இத்தகைய வகைப் படுத்தலின் மூலம் ஒரே ஒரு விதமான உறவுமுறையே ஏற்படுகிறது. இதனை படத்தில் காணலாம்.




### சுடேனிஸ் கசின் முறையமைப்பு

சுடேனிஸ் கசின் அமைப்பு மேற்கூறிய அமைப்பிற்கு மாறானது. அதாவது ஒருவரின் பெற்றோரின் சகோதர சகோதரிகளின் பிள்ளைகள் ஒருவருக்கொருவர் வேறுபடுத்தப் படுவதோடு அவரின் உடன் பிறப்புக்களிலி ந்தும் வேறுபடுத்தப் படுகிறார்கள். இவ்வகைப்படுத்தலின் மூலம் ஐந்து விதமான உறவுகள் ஏற்படுகின்றன. இதனைக் கீழ்க்கண்ட படத்தில் காணலாம்.



**எஸ்கிமோ கசின் முறையமைப்பு:**

எஸ்கிமோ கசின் அமைப்பில் ஒருவரின் (ego's) பெற்றோரின் எல்லா சகோதர சகோதரிகளின் பிள்ளைகளும் ஒன்றாக வகைப்படுத்தப்படுகின்றனர். இவர்கள் வேறொரு உறவுமுறைப் பிரிவில் வைக்கப்பட்டிருக்கும் அவருடைய சகோதர சகோதரிகளிடமிருந்து (படத்தில் A, A¹ என்று குறிப்பிடப்பட்டிருக்கும்) வேறுபடுத்தப்படுகிறார்கள். இங்கு இரண்டு விதமான உறவு முறைப் பிரிவுகளே ஏற்படுகின்றன. இதனைக் கீழ்க்கண்ட படத்தில் காணலாம். (Schwarty and Ewald 1968) இந்த அமைப்பு அமெரிக்க ஐக்கிய நாட்டின் சிறப்புப் பண்பு என்பதையும் அமெரிக்க ஐக்கிய நாட்டின் கசின் என்ற சொல்லின் பால் புறக்கணிக்கப்படுவதையும் குறிப்பிட்டுள்ளார்.



**ஈறாக்கியஸ் கசின் முறையமைப்பு:**

ஈறாக்கியஸ் கசின் முறையமைப்பில் ஒருவருடைய தகப்பனின் சகோதரியின் பிள்ளைகள் மற்றும் தாயின் சகோதரனின் பிள்ளைகள் (படத்தில் B, B¹ என்ற குறிப்பிடப்பட்டுள்ளது) ஆகியோர் (Cross cousin) ஒரு உறவுமுறைப் பிரிவினராகச் சேர்க்கப்படுகின்றனர். தகப்பனின் சகோதரனின் பிள்ளைகள், தாயின் சகோதரியின் பிள்ளைகள் (Parallel cousins) மற்றும் சகோதர சகோதரிகள் ஆகியோர் (படத்தில் A, A¹ என்று குறிப்பிடப்பட்டுள்ளது) ஒன்றாக வகைப்படுத்தப் பட்டு வேறுபட்ட ஒரு பிரிவில் அமைக்கின்றனர். இவ்வாறு இரண்டுவிதமான உறவுமுறைப்பிரிவுகள் ஏற்படுகின்றன. இதனைக் கீழ்க்கண்ட படத்தில் காணலாம்.



## குறோ கசின் முறையமைப்பு:

குறோ கசின் முறையமைப்பில் ஒருவரின் (ego's) தகப்பனின் சகோதரர்களின் பிள்ளைகள், தாயின் சகோதரிகளின் பிள்ளைகள் (Parallel cousins) மற்றும் அவரது சகோதர சகோதரிகள் ஆகியோர் (படத்தில் A, A¹ என்று குறிப்பிடப்பட்டுள்ளது) ஒரு பிரிவாகப் பிரிக்கப்படுகின்றனர். அவருடைய (ego's) தகப்பனின் சகோதரிகளின் பிள்ளைகள் மற்றும் தாயின் சகோதரர்களின் பிள்ளைகள் (Cross cousins) மேற்கூறியப் பிரிவிலிருந்து தனித்தனியாக வேறுபடுத்தப்படு கிறார்கள். இவ்வாறு ஒருவரின் தகப்பனின் சகோதரியின் பிள்ளைகள் (படத்தில் B, B¹ என்று குறிப்பிடப்பட்டுள்ளது) அவரது தாயின் சகோதரனின் பிள்ளைகளிடமிருந்து (படத்தில் C, C¹ என்று குறிப்பிடப்பட்டுள்ளது) வேறுபட்ட ஒரு உறவுமுறைப் பிரிவில் வைக்கப்பட்டுள்ளனர். ஒருவரின தகப்பனின் சகோதரியின் பிள்ளைகளைக் குறிப்பிடப் பயன்படுத்தப்படும் உறவுமுறைச் சொல் "என் தகப்பனின் வம்சாவழியைச்சேர்ந்த ஆண் (அல்லது பெண்)" என்பவற்றைக் குறிப்பிடுகிறது. ஒருவர் இதே சொல்லை படத்தில் B, B¹ என்று குறிப்பிட்டுள்ள எல்லா உறவினர்களைக் குறிப்பிடும்போதும் பயன்படுத்து கிறார். அதாவது அச்சொல் தகப்பன்' தகப்பனின் சகோதரன், தகப்பனின் சகோதரியின் மகளின் பிள்ளைகள் மற்றும் தகப்பனின் வம்சாவழியைச் சேர்ந்த எல்லோரையும் குறிப்பிடும் போதும் பயன்படுத்தப் படுகிறது. இத்தகைய உறவுமுறை சொல்லாட்சியின் முக்கியத்துவம் யாதெனில் மேற்கூறிய எல்லா நபர்களும் ஒருவருக்கு (ego) ஒரேவிதமான உறவில் காணப்படுகின்றனர். அவர்கள் முர்டாக்கின் குறோ கசின் அமைப்புடைய சமுதாயங்களில் மிக முக்கிய பகுதியாகிய ஒருவரின் தகப்பனின் வம்சாவழி உறுப்பினர்களாகும். அவர்கள் எல்லோரும் ஒரே உறவுமுறைப் பிரிவில் வகைப்படுத்தப் படுகிறார்கள். இவர்கள் எல்லோரையும் ஒருவர் (ego) அவரது தகப்பனின் வம்சாவழியைச் சேர்ந்த ஆண் (அல்லது பெண்) என்பதைக் குறிக்கும் சொல்லால் அழைக்கின்றார்.

இதே அமைப்பில் ஒருவரின் தாயின் சகோதரனின் பிள்ளைகளைத் தன் சொந்தப் பிள்ளைகளோடு சமப்படுத்தி 'மகன்' அல்லது 'மகள்' என்ற பொருளைத் தரும் சொற்களாலே அழைக்கின்றனர் (படத்தில் C, C[1] என்று குறிப்பிடப் பட்டுள்ளது). காரணம் ஒருவருக்கு அவரது தாயின் சகோதரனின் மனைவியின் உறவும் அவரது மனைவியின் உறவும் ஒன்றாகும் (படத்தில் இரண்டும் D[1] என்று குறிப்பிடப் பட்டுள்ளன). இந்த உறவுமுறை அமைப்பைக் கையாளுவதால் மூன்று முக்கிய உறவுமுறைப் பிரிவுகள் ஏற்படுகின்றன. 1) ஒருவர் (ego) அவரது சகோதர சகோதரிகள் தகப்பனின் சகோதரரின்குழந்தைகள் மற்றும் தாயின் சகோதரியின் பிள்ளைகள் (Parallel Cousins) ஆகியோர் அடங்கிய பிரிவு (படத்தில் A, A[1] என்று குறிப்பிடப்பட்டுள்ளது). 2) ஒருவரின் தகப்பனின் வம்சாவழி அங்கத்தினர்கள் அடங்கிய பிரிவு (படத்தில் B, B[1] என்று குறிப்பிடப்பட்டுள்ளது). 3) ஒருவரின் சொந்தப் பிள்ளைகள் மற்றும் அவரது தாயின் சகோதரனின் பிள்ளைகள் அடங்கிய பிரிவு (படத்தில் C, C[1] என்று குறிப்பிடப்பட்டுள்ளது) இதனைக் கீழ்க்கண்ட படத்தில் காணலாம்.



ஓமேகா கசின் முறையமைப்பு குறோ கசின் முறையமைப்பைப் போன்று சில இடங்களில் தலைமுறை வேறுபாட்டைப் புறக்கணிக்கிறது. ஒருவரின் தகப்பனின் சகோதரர்களின் பிள்ளைகளும், தாயின் சகோதரிகளின் பிள்ளைகளும் (Parallel cousins) அவருடைய சகோதர சகோதரிகளோடு ஒரு தனிப்பிரிவில் சேர்க்கப்படுகிறார்கள் (படத்தில் A, A[1] என்று குறிப்பிடப்பட்டுள்ளது). தாயின் சகோதரனின் பிள்ளைகள், தாய், தாயின் சகோதரி, தாயின் சகோதரன் ஆகியோர் ஒரு வேறுபட்ட பிரிவாக்கப்பட்டு "என் தாயின் வம்சாவழியைச் சேர்ந்த ஆண் (அல்லது பெண்)" என்ற பொருளைத் தரும் சொல்லால் அழைக்கின்றனர். (படத்தில் B, B[1] என்று குறிப்பிடப்பட்டுள்ளது). குறோ அமைப்பின் பண்பாட்டு அடிப்படையில் தகப்பனின் வம்சாவழி முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைவது போன்று இந்த அமைப்பில் தாயின் வம்சாவழி முக்கியத்துவம் வாய்ந்த பிரிவாக அமைகிறது. ஒருவர் அவருடைய தாயின் வம்சாவழி அங்கத்தினர்களுக்கு ஒரு தனி உறவில் காணப்படுகிறார். இது அவரது பார்வையில் தலைமுறை வேறுபாடில்லாமல் எல்லோரும் சமம் என்ற எண்ணத்தை உருவாக்குகிறது. இந்த அமைப்பின் இறுதிப்பிரிவு ஒருவரின் தகப்பனின் சகோதரி''ின் பிள்ளைகளையும் அவருடைய சகோதரியின் பிள்ளைகளையும் ஒன்றாக இணைக்கிறது. அவர்கள் எல்லோரும் "என் தகப்பனின் வம்சாவழியைச் சேர்ந்த ஒரு பெண்ணின் மகன் (அல்லது மகள்)" என்ற பொருளைத்தரும் சொல்லால் குறிப்பிடப்படுகின்றனர் (படத்தில் C, C[1] என்று குறிப்பிடப்பட்டுள்ளது). இவ்வாறு இந்த அமைப்பிலும் மூன்று முக்கிய உறவுமுறைப் பிரிவுகள் ஏற்படுகின்றன. இதனைக் கீழ்க்கண்டப் படத்தில் காணலாம்.

**ஒமேகா கசின் முறையமைப்பு :**




இத்தகைய வகைப்படுத்தல்கள் பொருளற்றதும் விருப்பப் படியானதும் என்று கூற இயலாது. இவை சமுதாயங்களில் சமூகப்பொருளாதார மற்றும் பல்வேறு காரணங்களால் ஏற்படும் மாறுதல்களின் அடிப்படையில் ஏற்படுவதாகவும் கருதலாம். மேற்கூறிய கசின் முறையமைப்புகள் எந்த சமூதா யத்தில் காணப்படுகிறதோ அச்சமுதாயத்தின் சமூகஅமைப்பைப் பிரதிபலிப்பதாகும். மேற்கூறிய எல்லா வகைப்படுத்தல்களும் உறவினர்களைச் ''சேர்த்தல் மற்றும் பிரித்தல்'' விதிமுறை களையே பயன்படுத்துகின்றன. இறுதியாகக் கூறப்பட்டுள்ள இரண்டு அமைப்புகளிலும் சில உறவினர்களின் வெவ்வேறு தலைமுறைகளுக்கிடையே காணப்படும் வேறுபாடுகள் புறக் கணிக்கப்படுகின்றன. மேலும் மேற்கூறிய ஆறுவிதமான அமைப்புகளிலும் எடுத்துக்கொண்டால் படிப்படியான மாறுதல்களைக் காணமுடிகிறது. முதலாவது அமைப்பாகிய

உறவாயன் கசின் முறையமைப்பை எடுத்துக் கொண்டால், பெற்றோரின் உடன்பிறந்தவர்களின் பிள்ளைகள் சொந்த சகோதர சகோதரிகளிடமிருந்து. வேறுபடுத்தப்படாமல் எல்லோரையும் ஒரேவித உறவாகவே கருதுவதைக் காண முடிகிறது. பின்னால் கூறப்பட்டுள்ள அமைப்புகளில் பெற்றோரின் உடன்பிறந்தவர்களின் பிள்ளைகள் பலதரப்பட்ட உறவினர்களாகப் பிரிக்கப்படுகின்றனர். இந்த இரண்டு அமைப்புகளாகிய குறோ மற்றும் ஒமேகா அமைப்புகளில் தந்தையின் வம்சாவழியினர், தாயின் வம்சாவழியினர், என்ற பாகுபாடு ஏற்பட்டிருப்பதையும் குறிப்பிட்ட சில உறவினர்களிடேயே உள்ள தலைமுறை வேறுபாட்டைப் புறக்கணிப்பதையும் காணமுடிகிறது.

முர்டாக்கின் கசின் முறையமைப்பின் அடிப்படையில் பார்க்கும்போது திராவிட உறவுமுறை அமைப்பானது சேர்த்தல் மற்றும் பிரித்தல் விதிமுறைகளை உடைய ஈறாக்கியஸ் கசின் முறையமைப்புக்கு ஒத்ததாகக் காணப்படுகிறது. ஆனால் லவுண்ஸ்பரி (Lounsbury-19 4) பொதுவாக திராவிட அமைப்பில் குலம் அல்லது மாயிற்றி (Moiety) கணக்கிடல் அல்லாமல் இருபிரிவாகப் பிரித்து கணக்கிடுவது ஈறாக்கிய அமைப்பைப் போல் அல்லாமல் தொடர்புபடுத்தும் எல்லா உறவினர்களின் பாலின் அடிப்படையில் அமைவதைக் குறிப்பிட்டுள்ளார். மேலும் திராவிட மொழி பேசும் 90 விழுக்காடு மக்களால் கடைப்பிடிக்கப்பட்டுவரும் சகோதரியின் மகள் திருமண முறையானது குரோ மற்றும் ஒமேகா அமைப்புகளில் காணப்படுவது போன்று குறிப்பிட்ட உறவினர்களிடையே காணப்படும் தலைமுறை வேறுபாட்டை ஓரளவுக்கு புறக்கணிப்பதாகவும் உள்ளது. மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்துகொள்ளும் ஒருவர் அவருடைய தலைமுறைக்குப் பின் தலைமுறையைச் சேர்ந்த ஒரு பெண்ணைத் திருமணம் செய்கிறார். எனவே அவருடைய 'மூத்த சகோதரியும்' 'மாமியாரும்' ஓரே வித உறவாக அமைகின்றனர். இவ்வாறு மேற்கூறிய இரு உறவினர்களுக்குமிடையிலான தலைமுறை வேறுபாடு புறக்கணிக்கப்படுகிறது.

**அவங்குலார் அமைப்பு (Avuncular System) :**

உறவுமுறைத் தொடர்புகளின் பிரித்தல் மற்றும் சேர்த்தல் விதிமுறைகள் ஒருவரின் தலைமுறையினரோடு மட்டும் நின்று விடுவதில்லை. அவ்விதிமுறைகளை எந்த தலைமுறைக்கும் பயன்படுத்தலாம். அத்தகைய விதிமுறைகளை முதல் முன் தலைமுறைக்கு குறிப்பாக ஒருவரின் தாயின் சகோதரன் மற்றும் தகப்பனின் சகோதரன் ஆகியோருக்கு பயன்படுத்துவதன் விளைவால் ஏற்படும் அமைப்புகளை அவங்குலார் (Uncle) அமைப்புகள் என குறிப்பிடுவர்.

முதல் அவங்குலார் அமைப்பு சேர்த்கல் விதிமுறையைப் பயன்படுத்துகிறது அதாவது ஒருவரின் தகப்பன், தகப்பனின் சகோதரன் மற்றும் தாயின் சகோதரன் ஆகியோர் ஒரேவித உறவினராகின்றனர். எனவே அவர்கள் ஒரே பெயர் சூட்டப் பட்டபிரிவில் சேர்க்கப்படுகின்றனர். இத்தகைய உறவினர்கள் எல்லோரும் ஒரே தலைமுறையைச் சேர்ந்தவர்கள் ஆதலால் இவ்வமைப்பை 'தலைமுறை அவங்குலார் அமைப்பு' என குறிப் பிடுகின்றனர் அதாவது ஒரே தலைமுறையைச் சேர்ந்தவர் களை ஒன்றாக வகைப்படுத்துவதற்கு முக்கியத்துவம் அளித்தல். ஒரு உறவுமுறைப்பிரிவை உருவாக்குவதற்கு ஒரே தலை முறையைச் சேர்ந்தவர்களை ஒன்றாக இணைக்கும் இவ்விதி முறையானது முதல் கசின் முறையமைப்பில் (உறவாயன் கசின் முறையமைப்பில்) காணப்படும் விதிமுறைக்கு ஒத்ததாகக் காணப்படுகிறது இதனை கொடுக்கப்பட்டுள்ள படத்தில் காணலாம்.

**தலைமுறை அவங்குலார் அமைப்பு :**




இரண்டாவது அவங்குலார் அமைப்பு முதல் அமைப்பிலிருந்து வேறுபடுகிறது. இதில் ஒருவரின் தகப்பன் ஒரு பிரிவிலும் தகப்பனின் சகோதரன் இரண்டாவது பிரிவிலும் தாயின் சகோதரன் மூன்றாவது பிரிவிலும் வகைப்படுத்தப்படுகிறார்கள். இங்கு முற்றிலுமாக பிரித்தல் விதிமுறையே பயன்படுத்தப்படுகிறது. இது இரண்டாவது கசின் முறையமைப்பில் (சுடேனிஸ்) பயன்படுத்தப்படும் விதிமுறைக்கு ஒத்ததாகக் காணப்படுகிறது. இதனை ஒரு தலை முறைக்கு அப்பாற்பட்ட இருபிரிவு அவங்குலார் அமைப்பு (Bifurcate Collateral Avuncular System) என்பர். இதனை கொடுக்கப்பட்டுள்ள படத்தில் காணலாம்.



இங்கு இணையான நிலையில் அல்லது ஒரே தலைமுறையில் உள்ள உறவினர்களை ஒருவருக்கொருவர் வேறுபடுத்து கின்றனர். தகப்பன், தகப்பனின் சகோதரன் மற்றும் தாயின் சகோதரன் ஆகியோர் ஒருவருக்கொருவர் இணையான நிலையை உடையவர்கள்.

மூன்றாவது அவங்குலார் அமைப்பு சேர்த்தல் மற்றும் பிரித்தல் ஆகிய இரு விதிமுறைகளையும் கையாளுகிறது. இது மூன்றாவது கின் முறையமைப்புக்கு (எஸ்கிமோ) ஒத்ததாக உள்ளது. அதாவது ஒருவரின் உடன்பிறந்தவர்கள் அவருடைய ஒன்றுவிட்ட சகோதரர்களிடமிருந்து வேறுபடுத்தப்பட்டு எல்லா ஒன்றுவிட்ட சகோதரர்களும் ஒன்றாக வகைப்படுத்தப் படுகின்றனர். இந்த அவங்குலார் அமைப்பும் அதையேச் செய்கிறது. ஆனால் இது முதல் முன் தலைமுறையில் காணப் படுகிறது. ஒருவரின் தகப்பன் ஒரு பிரிவிலும் தகப்பனின் சகோதரன் மற்றும் தாயின் சகோதரன் ஆகியோர் இன்னொரு பிரிவிலும் வகைப்படுத்தப்படுகின்றனர். இதனை கால்வழி அவங்குலார் அமைப்பு (Lineal Avuncular System) என குறிப்பிடுவர். காரணம் இது கால்வழி உறவைப் பிரிக்கிறது. அதாவது ஒருவரின் தகப்பனை அவருடைய கால்வழி உறவினர் மற்றும் அதே தலைமுறையினர்களாகிய தகப்பனின் சகோதரன் தாயின் சகோதரன் ஆகியோரிடமிருந்து பிரிக்கிறது. இது அமெரிக்க ஐக்கிய நாட்டு சமுதாயத்தின் குணாதிசயமாகும். இதில் ஒருவர் தன் கால்வழி (Lineal) உறவினரை தகப்பன் (Father) என்றும் தகப்பனின் தலைமுறையைச் சேர்ந்தவர் களை 'மாமா' (Uncle) என்றும் குறிப்பிடுகின்றனர். தாய்வழி மாமா தந்தை வழி மாமாக்களை வேறுபடுத்துவதில்லை. ஒருவரின் தகப்பனின் சகோதரன் மற்றும் தாயின் சகோதரன் ஆகிய இருதரத்தாரையும் 'மாமா' (Uncle) என்றே குறிப் பிடுகின்றனர். இதனை கீழே கொடுக்கப்பட்டுள்ள படத்தில் காணலாம்.

**கால்வழி அவங்குலார் அமைப்பு: (Lineal Avuncular System)**




இறுதியான அவங்குலார் அமைப்பும் சேர்த்தல் மற்றும் பிரித்தல் விதிமுறைகளையே பயன்படுத்துகிறது. ஆனால் சற்று வித்தியாசமான முறையில் காணப்படுகிறது. இணைத்தல் விதிமுக்கியமாக தகப்பனின் உறவினர்களுக்கும் பிரித்தல் விதி தாயின் உறவினர்களுக்கும் கையாளப்படுகிறது, தகப்பனும் தகப்பனின் சகோதரர்களும் ஒரு தனி பிரிவில் சேர்க்கப் படுகின்றனர். ஒருவரின் தாயின் சகோதரன் தனியாக ஒரு இரண்டாவது பிரிவில் வைக்கப்படுகிறார். இந்த அமைப்பை இருபிரிவு சேர்த்தல் அவங்குலார் அமைப்பு (Bifurcate merging Avuncular System) என அழைக்கின்றனர். பிரித்தல் என்பதற்குக் காரணம் ஒருவரின் தகப்பனின் பகுதியிலுள்ள உறவினர்களை தாயின் பகுதியிலுள்ள இணையான உறவினர்களிடமிருந்து பிரிக்கப்படுகிறார்கள். இணைத்தல் என்பதற்குக் காரணம் ஒருவரின் வம்சாவழி உறவினர் (தகப்பன்) இணையான உறவினர்களாகிய தகப்பனின் சகோதரர்களோடு இணைக்கப் படுகிறார். இதேப்போன்ற பிரித்தல் மற்றும் இணைத்தல்

விதிகள் ஈறாக்கிய, குறோ மற்றும் ஒமேகா கசின் முறையமைப்புகளிலும் காணப்படுகின்றன. இதனைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள படத்தில் காணலாம்.




**உறவுமுறைச் சொற்கள்:**

ஒருவரின் இரத்த, மண மற்றும் தத்து உறவினர்கள் எல்லோரும் சில வரையறுக்கப்பட்ட சொற்களின் கீழ் கொண்டு வரப்படுகின்றனர். இவ்வகைப்படுத்தல்கள் தொடர்புடையதும் திட்டவட்டமான விதிமுறைகளுடைய இயக்கத்தின் அல்லது செயல் முறையின் விளைவுமாகும். உறவுமுறைச் சொற்களில் பால், வயது போன்ற வேறுபாடுகளோடு ஒரே தலைமுறையைச் சேர்ந்த நபர்களையும் வேறுபடுத்திக் குறிப்பிடுவது இதற்கு சான்றாக அமைகிறது. மேலும் உறவுமுறைச் சொல் ஒருவரை குறிப்பிடுவது மட்டுமின்றி குறிப்பிட்ட சமுதாயத்தில் அச்சொல்லால் அழைக்கப்படுவதன் பொருள் என்ன என்பதையும் வெளிப்படுத்துகிறது. எனவே உறவுமுறைச் சொற்கள் உறவுமுறை அமைப்பையும் அது இயங்குகிற முறையையும் பிரதிபலிக்கின்றன எனவும் கூறலாம்.

உறவுமுறைச் சொல்லமைப்புக்கும் சமூக ஒழுங்கிற்கும் நேருக்கு நேர் தொடர்பு இல்லாவிட்டாலும் அவை ஒன்றோடொன்று தொடர்புடையவை. சான்றாக ஒரு சமுதாயத்தில் உறவு முறைச் சொற்கள் அச்சமுதாயத்தின் திருமண முறையைப் பிரதிபலிப்பதைக் காணலாம். எனவே ஒருமொழியில் காணப் படும் உறவுமுறைச் சொற்களை ஆராயும்போது அது எப்படிப் பட்ட சமூக அடிப்படையில் பயன்படுத்தப்படுகிறது என்பதை முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். ஒருமொழியில் காணப் படும் ஏனைய சொற்களைவிட உறவுமுறைச் சொற்கள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் காணப்படுகிறது. திருமணமுறை குடும்ப அமைப்பின் தன்மை மற்றும் குடிவழிப்பட்டியலை ஆராய்ந்து முடிவுசெய்தல் ஆகியவை உறவுமுறைச் சொற்களின் ஆழமான பொருளை அறிந்துகொள்வதற்கு உதவியாகக் காணப்படுகிறது. சான்றாக 'மாமா' என்னும் சொல், சில சமூக அமைப்பில் தாயின் சகோதரர்களையும் தகப்பனின் சகோதரியின் கணவனையும், மனைவியின் தகப்பனையும் குறிப்பிடுகிறது. ஆனால் மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கத்தை உடைய சமூக அமைப்பில் 'மாமா' என்றசொல் மூத்த சகோதரியின் கணவ னையும் குறிப்பிடுவதாகக் காணப்படுகிறது. சில சமுதாயங் களில் மனைவியின் தகப்பனையும் கணவனின் தகப்பனையும் குறிப்பிடும்போது 'மாமனார்' என்று வேறுப்படுத்திக் கூறுவதையும் காணலாம்.

ஒரு மொழியில் பிறமொழித்தாக்கம் ஏற்படும்போது ஏனைய சொற்களில் ஏற்படும் மாறுதல்களைப் போன்று உறவு முறைச் சொற்களில் குறிப்பாக முதல்நிலை உறவினர்களைக் குறிப்பிடும் சொற்களில் மாறுதல்கள் ஏற்படுவதில்லை. எனவே ஒரு மொழி ஆய்வுக்கும் உறவுமுறைச் சொற்கள் துணையாக அமைகிறது. ஒரு சமுதாயத்தில் பிற மக்களோடுள்ள தொடர் பாலும் கல்வி வளர்ச்சியாலும் ஏற்படும் கலாச்சாரப் பண்பாட்டு மாற்றங்களிலும் உறவுமுறை அமைப்பில் மாறுதல்கள் குறை வாகவே ஏற்படுகிறது. ஆனால் ஏனைய மக்களின் பண்பாட்டுத்

தாக்கம் அதிகமாக ஏற்பட்டு திருமணமுறை போன்ற முக்கிய கூறுகளில் மாறுதல் ஏற்படும்போது உறவுமுறைச் சொற்களிலும் மாறுதல்கள் ஏற்படுகிறது. இவ்வாறு ஒரு சாதி அல்லது சமுதாயத்தின் மொழி, பண்பாடு, கலாச்சாரம் ஆகியவற்றின் ஆய்வில் உறவுமுறை ஆய்வு மிக முக்கிய இடத்தை வகிக்கிறது

ஒரு சமுதாயத்தின் உறவுமுறைச் சொற்களின் பொருளை மொழியியல் கோட்பாடுகளின் அடிப்படையில் மட்டும் வரையறுக்க முடியாத நிலை ஏற்படுவதைக் காணலாம். ஒரு உறவுமுறைச் சொல்லின் பொருளை மொழியியல் கோட்பாடுகளின் அடிப்படையில் விளக்க முற்படும்போது அது எந்த மொழியியல் அல்லாத கூறுகளோடு தொடர்புடையது என்பதைக் குறிப்பிட வேண்டும. ஒரு சமுதாயத்தில் அல்லது ஒரு மொழியில் காணப்படும் உறவுமுறைச் சொற்களை ஆராயும்போது ஒரு குறிப்பிட்ட சொல் என்ன உறவைக் குறிக்கிறது (குருதி உறவா அல்லது மண உறவா) எந்த பாலைக்குறிக்கிறது, எந்த தலைமுறையைக் குறிக்கிறது போன்றவற்றை வேறுபடுத்தி எல்லா உறவுமுறைச் சொற்களோடும் தொடர்புபடுத்தி ஆராய வேண்டும். எனவே உறவுமுறைச் சொற்களை உறவுமுறை அமைப்போடு தொடர்புபடுத்தி ஆராய்வது சிறப்பாக அமையும்.

## குறிப்பிடத்தக்க சில உறவுமுறை ஆய்வுகள் :

இந்திய உறவுமுறை ஆய்வில் அய்ராவதி கர்வே [1965) குறிப்பிடத்தக்க பணிபுரிந்துள்ளார்கள். அவர்கள் பல்வேறு மொழிப்பிரிவினர்களிடமிருந்தும் பழந்தமிழ் இலக்கியங்களிலிருந்தும் செய்திக் கூறுகளைச் சேகரித்து வரலாறு மற்றும் இனமரபியல் (Ethnolorical) அடிப்படையில் ஆராய்ந்துள்ளார்கள். மேலும், அவர்கள் இந்தோ-ஆரிய மற்றும் திராவிட உறவுமுறை அமைப்புகளிடையே காணப்படும் வேறுபாடுகளையும் குறிப்பிட்டுள்ளார்கள். இந்தியாவின் மத்திய பகுதியில்

தென்னகத்தோடு ஏற்பட்டுள்ள பண்பாட்டு அடிப்படையிலான தொடர்பினால் உறவுமுறை அமைப்பில் ஏற்பட்டுள்ள குறிப்பிடத்தக்க வேறுபாடுகளையும் ஆராய்ந்துள்ளார்.

காத்தலின் காப் (1979: 268) திராவிட உறவு முறையும் உற்பத்தி முறையும் (Dravidian Kinship and modes of Production) என்றகட்டுரையில் தஞ்சாவூர் உறவுமுறை அமைப்புக்கும் விவசாய உற்பத்தி உறவுகளுக்கும் இடையே உள்ள தொடர்புகளை விளக்கியுள்ளார். தஞ்சாவூர் விவசாயிகளிடையே காணப்படும் உறவுகள் அல்லது இணைப்புகள் விவசாய உற்பத்தியோடு தொடர்புடையதாக இருப்பதாகவும் குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர்கள் கீழ்க்கண்ட சில கருத்துக்களையும் கூறியுள்ளார்கள்.

1. தொல் - இந்திய - ஐரோப்பிய மொழிக் குடும்பம் (Proto - Indu - European) தொல் - அதபாஸ்கான் (Proto - Athapaskan) மற்றும் வேறுபல மொழி குடும்பங்களிலும் ஆராயப்பட்டுள்ளவண்ணம் நம் தொல்-திராவிடர் உறவுமுறை சொற்களை மீட்டு உருவாக்கம் செய்தலால் தொல்-திராவிடர் மத்தியில் மாயிற்றி (Moiety) அமைப்பு இருந்ததா என்று நாம் கண்டுகொள்ளலாம் என கருதுவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

2. இவ்விதமான மீட்டுருவாக்கத்தினால், சகோதரியின் மகளை திருமணம் செய்து கொள்வது தொல் திராவிடக் கூறா பிற்கால கூறா என்பதையும் தொல் திராவிடர் தாய்வழி உறவை உடையவர்களா தந்தை வழி உறவை உடையவர்களா என்பதையும் அறிந்து கொள்ளமுடியும்.

3. தற்போதைய எல்லா அல்லது பெரும்பான்மையான திராவிட உறவுமுறை அமைப்புகளுக்கும் அடி

ஆதாரமாக ஒரு தனி அமைப்பு இருந்தது. ஆனால் சமூக உருவாக்கம், ஆரியர்மற்றும வேறுகுடியேற்றம், வேறுபட்ட வாழ்க்கைச் சூழல்களில் தனியிடங்களுக்கு மாற்றிச் செல்லுதல், தொழில்கள், வகுப்பு பாகு பாட்டின் நிலைகள், வேறுபட்ட உற்பத்தி முறைகளின் மறுமலர்ச்சி, தொல் மற்றும் பின்-திராவிட அமைப்பு களின் நீடு நிலவல் அல்லது கலப்பு ஆகியவற்றின் விளைவால் புத்தமைப்புகள் ஏற்பட்டுள்ளது.

4. இத்தகைய புத்தமைப்புகளிடையே மிகுந்த வேறுபாடு கள் காணப்பட்டாலும் சில அடிப்படை ஒற்றுமைகள் இருப்பதைக் காணலாம் எனவும் குறிப்பிட்டுள்ளார்.

ரவுட்மேன் (Trautman - 1981) திராவிட உறவுமுறையை விரிவாக ஆராய்ந்துள்ளார். திராவிட உறவுமுறைச் சொற்கள் இதுவரை உறவுமுறைபற்றி நடைபெற்றுள்ள ஆய்வுகள் அவ் வாய்வுகளின் சிறப்பியல்புகள் ஆகியவற்றை சிறப்பாக ஆராய்ந் துள்ளார். மாமன்முறை உறவு (Cross cousin relation) திராவிட உறவுமுறையில் பெற்றுள்ள சிறப்பு, இந்தோ ஆரிய உறவுமுறைக் கலப்புகள், இந்தோஆரிய உறவுமுறை அமைப்பு கள் போன்ற பல்வேறு தலைப்புகளில் உறவுமுறையின் அகல ஆழங்களை வரலாற்று கண்ணோட்டத்தில் மிகச் சிறப்பாக ஆராய்ந்துள்ளார்.

இந்தியாவின் பல்வேறு மொழிக்குடும் பங்களிலிருந்தும் விரிவான தரவுகள் சேகரித்தள்ளார். இந்தியமொழிகள் பற்றியும் திராவிட ஆரியமொழிக்கூறுகள் பற்றியும் இந்து சமவெளி நாகரீகத்துடன் திராவிட நாகரீகத்திற்குள்ள தொடர்பு பற்றியும் தம்முடைய நீண்ட அறிமுகவுரையில் விளக்கியுள்ளார்.

திராவிட உறவுமுறை ஆய்விற்குத் தமிழில் காணப்படும் உறவுமுறை அமைப்பினை முக்கிய ஆதாரமாகக் கொண்டு

ஆராய்ந்துள்ளார். அதோடு சில மலைவாழ் மக்களிடையே காணப்படும் உறவுமுறை அமைப்புகளையும் விளக்கியுள்ளார். ஆரிய உறவுமுறை ஆய்விற்கு இந்தி உறவுமுறை அமைப்பைச் சான்றாகக் கையாண்டுள்ளார்.

இந்தே-ஆரிய மற்றும் திராவிட உறவுமுறைகளின் கலப்பால் இந்தியாவின் மத்திய பகுதியில் காணப்படும் மராத்தி போன்ற சில உறவுமுறை அமைப்புகள் உருவாகியிருப்பது போல் காணப்படுகிறது என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

மராத்திய உறவுமுறைச் சொற்கள் இந்தோ-ஆரிய சொற்களாகவும் ஆனால் அவற்றின் பொருள் அமைப்பு (Semantic Structure) திராவிட உறவுமுறைச் சொற்களை ஒத்ததாகவும் இருப்பதையும் ரவுட்மேன் குறிப்பிட்டுள்ளார்.

முகர்ஜி (Mnkherjee, 1981) சுமார் 68 பிரிவுகளைச் சேர்ந்த இந்திய பழங்குடி மக்களிடையே காணப்படும் உறவுமுறை அமைப்பை முர்டாக்கின் சுசின்முறை வகைப்படுத்தலின் அடிப் படையில் ஆராய்ந்துள்ளார்.

# திராவிட உறவுமுறை

திராவிட உறவுமுறையானது பல தனித்தன்மைகளை உடையதாகக் காணப்படுகிறது. அவற்றில் உறவினர்களை இரு பிரிவுகளாகப் பிரித்து ஒரு பிரிவினரோடு திருமணத் தொடர்பு கொள்வதும் இன்னொரு பிரிவினரோடு திருமணத் தொடர்பைத் தடைசெய்வதும் மிக முக்கியமான கூறாகும். அதாவது தகப்பனின் சகோதரியின் பிள்ளைகள் மற்றும் தாயின் சகோதரனின் பிள்ளைகள் ஆகியோர் ஒரு உறவு முறைப் பிரிவினராக வகைப்படுத்தப்பட்டு அவர்களோடு திருமணத்தொடர்பு கொள்ளுகின்றனர். தகப்பனின் சகோதரனின் பிள்ளைகள், தாயின் சகோதரியின் பிள்ளைகள் ஆகியோர் மற்றும் சகோதர சகோதரிகள் ஒன்றாக வகைப்படுத்தப்பட்டு அவர்களோடு திருமணத்தொடர்பைத் தடைசெய்கின்றனர். இது திராவிட உறவுமுறை அமைப்பின் தனித்தன்மையாகும் மேலும் பால், வயது, தலைமுறை ஆகியவையும் திராவிட உறவுமுறை அமைப்பின் முக்கிய கூறுகளாகும். மேலே குறிப்பிடப்பட்டுள்ள இருவகைப்பிரிவுதான் உறவினர்களை இரத்த

உறவு, மணஉறவு என பிரிப்பதற்கு அடிப்படையாகக் காணப் படுகிறது. இப்பாகுபாட்டில் மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கத்தை உடைய சமுதாயங்களில் பல சிக்கல்கள் ஏற்படுகின்றன. இத்தகைய இரு தலை முறைகளுக்கிடையிலான திருமண முறையும் உறவுமுறைச் சொற்கள் ஏற்றுக்கொள்வதைக் காணலாம்.

கேத்தலின் காப் (1979) தஞ்சாவூர் உறவுமுறை அமைப்பை விளக்கும்போது "பிராமணர்களைப்போல் அல்லாமல் கீழ்சாதியினர் தாயின் இளைய சகோதரியோ அல்லது ஒன்றுவிட்ட சகோதரியோ மணமகளைவிட வயதில் குறைவாக இருந்தால் திருமணம் செய்துகொள்ளும் முறையையும் ஆதரித்தனர்" என்று குறிப்பிட்டுள்ளார். திராவிட உறவுமுறை அமைப்பில் தாயின் இளைய சகோதரியைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம் இருந்ததாக எந்தவித ஆதாரமும் கிடையாது. ஆனால் கீழே கொடுக்கப்பட்டுள்ள படத்தில் குறிப்பிடப் பட்டுள்ளவண்ணம் மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்தல் மற்றும் தகப்பனின் சகோதரியின் மகளைத் திருமணம் செய்தல் ஆகிய திருமணங்கள் ஒரே குடும்பத்தில் நிகழும்போது ஏற்படும் சிக்கல்களினால் கேத்தலின்காப் குறிப்பிட்டுள்ளது போன்ற திருமணங்கள் நடைபெறவும் வாய்ப்புகள் உள்ளன.




படத்தில் கொடுக்கப்பட்டுள்ளவண்ணம் ஒழிவரின் (ego's) இளைய சகோதரன் (படத்தில் A என்று குறிப்பிடப்பட்டுள்ளது) மூத்த சகோதரியின் மூத்த மகளைத் திருமணம் செய்து கொள்கிறார். அவருடைய (ego's) மூத்த மகன் (படத்தில் A1 என்று குறிப்பிடப்பட்டுள்ளது) தன் அத்தைமகள் என்ற நிலையில் தகப்பனின் மூத்த சகோதுரியின் இளைய மகளைத் (படத்தில் B1 என்று குறிப்பிடப்பட்டுள்ளது.) திருமணம் செய்துக்கொள்கிறார். இங்கு ஒரு நிலையில் B1, A1 - க்கு அத்தை மகளாகக் காணப்பட்டாலும் இன்னொரு நிலையில் தன் தகப்பனின் இளைய சகோதரனின் மனைவியின் தங்கை (சித்தி)யாகக் காணப்படுகிறாள்.

திராவிட உறவுமுறை அமைப்பிற்கும் இந்தோ - ஆரிய உறவுமுறை அமைப்பிற்குமிடையே சில முக்கிய வேறுபாடுகள் காணப்படுகின்றன.

**திராவிட உறவுமுறையும் இந்தோ - ஆரிய உறவுமுறையும் :**

1. திராவிட உறவுமுறையில் வாழும் பகுதியின் உட்பிரிவு மணமுறை (territorial endogamy) பின்பற்றப்படுகிறது இம்முறைப்படி பெரும்பான்மையான திருமணங்களில் பெண் எடுப்பது அல்லது கொடுப்பது ஒரே ஊரிலோ அண்மையிலுள்ள ஊர்களிலோ நிகழும். இந்தோ ஆரிய உறவுமுறை அமைப்பில் வாழும் பகுதியின் அயல் மணமுறை (territorial exodamy) பின்பற்றப்படுகிறது.

2 திராவிட உறவுமுறையில் திருமணத்தின் மூலம் இணைக்கப்படும் குடுபதங்கள் குறைவாகவே காணப் படுகின்றன. இதற்குக்காரணம் ஒரே குடும்பத்தில் பெண் எடுப்பதும் கொடுப்பதும் வழக்கமாகக் காணப் படுவதேயாகும். ஆனால் இந்தோ - ஆரிய உறவு முறையில் திருமணத்தின்மூலம் இணைக்கப்படும் குடும்பங்களின் எண்ணிக்கை மிகவும் அதிகமாகக் காணப்படும். இதனால் உறவினர்களின் பரப்பு (dispersal of kin) மிகவும் அதிகமாகக் காணப் படுகிறது.

3. திராவிட உறவுமுறையில் ஒருவரின் பிறப்புக்குடும்ப அங்கத்தினர் அவருடைய மண உறவினராகவும் இருப் பதுண்டு. சான்றாக மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்துகொள்ளும்போது இரத்த உறவு மண உறவாகவும் இருப்பதைக் காணலாம். இந்தோ ஆரிய உறவுமுறை அமைப்பில் ஒருவரின் பிறப்புக் குடும்பத்தைச் சேர்ந்தவர் அவருக்கு மண உறவினராக இயலாது.

4. திராவிட உறவுமுறையில் மண உறவினர்களைத் தெளிவாக வேறுபடுத்திக் குறிப்பிடுவதற்கான

சொற்கள் இல்லை. ஆனால் இந்தோ - ஆரிய உறவுமுறையில் இரத்த உறவினர்களையும் மண உறவினர்களையும் வேறுபடுத்திக்குறிப்பிடுவதற்கான தனிச்சொற்கள் காணப்படுகின்றன.

5. திராவிட உறவுமுறை அமைப்பில் ஒருவரின் பிறப்புக் குடும்பத்தின் விரிவாக்கக்குடும்பத்தினரோடும்* அவர் திருமணம்செய்து கொண்ட குடும்பத்தின் விரிவாக்கக் குடும்பத்தினரோடும் அவருடைய பிள்ளைகளுக்குத் திருமணத்தொடர்பு கொள்வதைக் காணலாம். இந்தோ - ஆரிய உறவுமுறை அமைப்பில் ஒருவரின் பிறப்புக்குடும்பத்தின் விரிவாக்கக் குடும்பத்தினரையும் அவர் திருமணம் செய்து கொண்ட குடும்பத்தின் விரிவாக்கக் குடும்பத்தினரையும் அவருடைய இரத்த உறவினராகவே கருதுகின்றனர். அவருடைய எந்த ஒரு உறவினரும் அவருடைய பிள்ளைகளின் மண உறவினர் ஆக இயலாது.

6. திராவிட உறவுமுறைச்சொற்களில் மூத்த - இளைய பாகுபாடு மிகவும் தெளிவாகக காணப்படுகிறது. இந்தோ - ஆரிய உறவுமுறைச் சொற்களில் மூத்த- இளைய பாகுபாடு புறக்கணிக்கப்படுகிறது.

7 திராவிட உறவுமுறையில் பெரும்பாலும் வகைபடு உறவுமுறைச் சொற்களாகவும் (Classificatory terms) இந்தோ ஆரிய உறவுமுறையில் பெரும்பாலும் விளக்க உறவுமுறைச் சொற்களாகவும் (Descriptive terms) காணப்படுகிறது.

சமகாலத் தமிழர்களின் உறவுமுறை ஆய்வின் முதல் கட்டமாக தமிழ்நாட்டில் தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்த பல சாதி மக்கள் வாழும் கிராமப்புறப் பகுதி ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்டு ஆய்வு மேற்கொள்ளப்பட்டது.

---

* ஒரே வம்சாவழியினால் இணைக்கப்பட்ட இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட தனிக்குடும்பங்கள் அடங்கிய பெரிய பிரிவை விரிவாக்க குடும்பம் என்பர்.

# கோவிலூர் கிராமமும் அங்கு வாழும் மக்களும்

தற்போதைய ஆய்வுக்குத் தமிழ்நாட்டில் தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்த கோவிலூர் கிராமமும் அதோடு சேர்ந்த மேலமாகாணம் பகுதியும் தேர்ந்தெடுக்கப்பட்டது. கோவிலூர், மேலமாகாணம் எனக் குறிப்பிடும் பகுதிகளின் சமூக அமைப்பு, வழிபாடு, தெருக்களின் அமைப்பு ஆகியவற்றைப் பார்க்கும் போது இருபகுதிகளும் ஒரு கிராமமாகவே செயல்பட்டு வருகிறது. இவ்விரு பகுதிகளுக்குமிடையே 'வடலாறு' என்ற ஆறு உள்ளது. இரு பகுதிகளையும் இணைக்கும் பாலம் சுமார் 20 வருடங்களுக்கு முன் கட்டப்பட்டதாகவும் அதற்குமுன் மரப்பாலம் இருந்ததாகவும் தெரியவருகிறது.

கோவிலூர் கிராமம் தஞ்சாவூர் - நாகப்பட்டினம் சாலையில் தஞ்சாவூரிலிருந்து சுமார் 12 கி.மீ. தூரத்தில் உள்ளது. கோவிலூர் மற்றும் மேலமாகாணத்தில் சில பகுதிகள் புலவர் நத்தம் பஞ்சாயத்து ஒன்றியத்தையும் ஏனைய பகுதிகள்

குமுலக்குடி பஞ்சாயத்து ஒன்றியத்தையும் சேர்ந்தவையாகும். இக்கிராமம் சிறந்த போக்குவரத்து வசதியுடையது. நகர்ப்புற மற்றும் நாட்டுப்புற பேருந்துகள் இக்கிராமத்தின் வழியாகச் செல்லுகின்றன தஞ்சாவூர் - நாகூர் இருப்புப்பாதையிலுள்ள குடிகாடு என்ற இரயில் நிலையம் சுமார் ஒரு கி.மீ. தூரத்தில் உள்ளது. அதோடு பூண்டிபுஷ்பம் கல்லூரியும் அண்மையில் உள்ளது. ஒரு கிளை தபால் நிலையமும் இக்கிராமத்தில் காணப்படுகிறது. கோவிலூர் கிராமத்தில் காணப்படும் சிவன் கோயில் மிகப் பழமையானதாகும். இது எப்போது கட்டப் பட்டது என்பதற்கான சான்றுகள் கிடைக்கவில்லை. இக்கோவில் கோவிலூர் கிராமத்தின் தனிச்சிறப்பாகக் காணப்படுகிறது தஞ்சாவூர் சமவெளிப் பகுதியில் காணப்படும் பல கிராமங்களைப் போன்று கோவிலூர் மேலமாகாணம் பகுதியும் ஏராளம் விவசாயக் கூலிகளும் குறிப்பிட்ட சில சாதிகளைச் சேர்ந்த நிலச்சுவாந்தார்களும் வாழும் ஒரு கிராமமாகும்.

**மக்களின் குடியேற்ற வரலாறு:**

கோவிலூர் கிராமத்தில் வாழும் மக்களின் குடியேற்றம் குறித்த எழுத்து வடிவிலான ஆதாரங்கள் எதுவும் கிடைக்கவில்லை. ஆனால் குடிவழிப்பட்டியல் மற்றும் வாய்மொழிச் செய்திகளின் மூலம் மக்களின் குடியேற்றம் குறித்த வரலாற்றை ஓரளவு தெரிந்து கொள்ள முடிகிறது கோவிலூர் பகுதியில் பாரம்பரியமாக வாழ்ந்துவருபவர்கள், குருக்கள், வெள்ளாளர், அகமுடையார், கோனார், ஆசாரி இசை வெள்ளாளர் அல்லது அம்பளக்காரர் ஆகியோரும் வண்ணார், நாவிதர் ஆகிய சேவை சாதி மக்களுமாவார். இவர்களைத் தவிர கோவிலூர் பகுதியில் பல்வேறு கால கட்டங்களில் வியாபாரம், பிற தொழில்கள் மற்றும் திருமணம் ஆகியவற்றிற்காக வந்து குடியேறிய பல சாதிகளைச் சேர்ந்த மக்களும் காணப்படுகின்றனர்: அவ்வாறு குடியேறியவர்களில் சாலியர் சாதியைச் சேர்ந்த ஒரு குடும்பத்தினர் சுமார் 15 வருடங்களுக்கு முன் சுமார் 5 கி. மீ. தூரத்திலுள்ள அம்மாப்பேட்டை என்ற

கிராமத்திலிருந்து வந்து குடியேறி உள்ளார்கள். குடும்பத் தலைவர் ஊராட்சி ஒன்றிய அலுவலகத்தில் உதவியாளராகப் பணிபுரிவதால் இங்கு குடியேறியுள்ளார். வாடகை வீட்டில் (கூரை வீடு) வாழ்ந்து வருகிறார்கள்- சுமார் 20 கி. மீ. தூரத்திலுள்ள ஒரத்த நாடு பகுதியைச் சேர்ந்த இசை வெள்ளாளர் சாதியைச் சார்ந்த ஒருவர் கோவிலூர் சிவன் கோயில் மெய்க்காவலர் ஒருவரின் மகளைத் திருமணம் செய்துள்ளார். அக்குடும்பத்தினர் சுமார் மூன்று ஆண்டுக ளுக்கு முன் இங்கு வந்து குடியேறியுள்ளனர். இவர்கள் கோவில் பூமியில் கூரைவீடு கட்டி வாழ்கின்றனர். சொந்த நிலம் இல்லை. தேவர் சாதியைச் சேர்ந்த ஒருகுடும்பத்தினர் சுமார் 42 வருடங்களுக்கு முன் வேலை தேடி வந்து இங்கு குடியேறியுள்ளனர். அதாவது திருமணம் ஆகி 1 வருடத்துக் குள் கணவன் இறந்துவிடவே தன் ஒரு வயது மகளோடு இங்கு வந்து குடியேறியுள்ளார். மகளை மதுரையில் திருமணம் செய்து கொடுத்து விவாகரத்து ஆகிவிட்டது. தற்போது தாயும் மகளும் இங்கு வாழ்ந்து வருகின்றனர். கோவிலூரில் சொந்த கூரை வீடு மட்டும் உள்ளது. விதவை மறுமணம் தடைசெய்யப்பட்ட அல்லது விரும்பாத காரணத்தினால் அல்லது விதவைகள் சமுதாயத்தில் இழிவாகக் கருதப்படுவ தால் வெளி ஊர் சென்று வாழ முற்படுகின்றனர். மதுரையைச் சேர்ந்த இன்னொரு தேவர் குடும்பத்தினர் சுமார் 5 வருடங் களுக்கு முன் இங்கு வந்து குடியேறியுள்ளனர். மதுரையைச் சேர்ந்த குடும்பத்தலைவர் கோவிலூரில் கொத்தனாராகப் பணிப்புரிகிறார். இராமநாதபுரத்தைச் சேர்ந்த மனைவி கோவிலூர் பாலவாடியில் ஆசிரியையாகப் பணிபுரிகிறார். இராமநாதபுரத்தைச் சேர்ந்த மனைவியின் பெற்றோரும் இவர்களோடு சேர்ந்து வாழ்கின்றனர். இவர்களுக்கு கோவிலூரில் சொந்த கூரைவீடு மட்டும் உள்ளது. இவர்கள் தொழில்நிமித்தம் இடம்பெயர்ந்துள்ளனர். கோனார் சாதியை சேர்ந்த ஒரு குடும்பத்தினர் சுமார் 15 வருடங்களுக்கு முன்

இங்கு வந்து குடியேறியுள்ளார்கள். கள்ளர் சாதியைச் சேர்ந்த மிராசுதார் பூமியில் கூரைவீடு கட்டி வாழ்கிறார்கள். சொந்த நிலம் இல்லை.

கோவிலூர் பகுதியில் வாழும் இரண்டு அய்யர் குடும்பங் களும் பிற்காலத்தில் வந்து குடியேறியவர்களாகும். ஒரு குடும்பத்தினர் சுமார் 28 வருடங்களுக்கு முன் கொடை வாசல் பகுதியிலிருந்து இங்கு வந்தவர்கள். இவர்களுக்குச் சொந்த நிலம் ஒரு ஏக்கரும், சொத்த வீடும் உள்ளன. ஒரு குடும்பத்தலைவரின் சொந்த ஊர் பூண்டி. குடும்பத் தலைவியின் சொந்த ஊர் திருவனந்தபுரம். கோவிலூாரில் சொந்த வீடும் சுமார் 6 ஏக்கர் நஞ்செய் நிலமும் உள்ளன. கோவிலூாரில் தெலுங்கு மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட பிராமணர் குடும்பம் ஒன்று கணப்படுகிறது. இவர்களும் பிற்காலத்தில் குடியேறியவர்கள் என்பது தெளிவாகிறது. குடும்பத்தலைவர் சாத்தூர் பகுதியையும் குடும்பத்தலைவி மதுரை பகுதியையும் சேர்ந்தவர்கள் குடும்பத்தலைவர் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார். சொந்த வீடும் சுமார் 20 ஏக்கர் சொந்த நஞ்செய் நிலமும் உள்ளது. செட்டியார் சாதி யைச் சேர்ந்த ஒரு குடும்பத்தினர் சுமார் 9 கி. மீ தூரத்திலுள்ள அம்மாப்பேட்டை என்ற ஊரிலிருந்து வந்து குடியேறியுள்ளனர். இவர்கள் வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளார்கள் (பெட்டிக்கடை). வாடகை வீட்டில் வாழ்ந்து வருகிறார்கள்.

ஆசாரி சாதியைச் சேர்ந்த ஒரு குடும்பம் திருவையாறு பகுதியிலிருந்து சுமார் 25 வருடங்களுக்கு முன் வந்து குடியேறியுள்ளார்கள். பாரம்பரியமாக மரச்சிற்பங்கள் செய் பவர்கள். தற்போது அத்தொழிலில் ஈடுபடுவதில்லை. குடும் பத்தலைவர் பூண்டி கல்லூாரியில் சோதனைக்கூட உதவியாள ராக வேலைபார்க்கிறார். கோவிலூாரில் இவருக்கு சுமார் 200 குழி சொந்த நிலமும் 200 குழி குத்தகை நிலமும் உள்ளன

சோவிலூரர் பகுதியில் வாழும் மூன்று நாடார் சாதியைச் சேர்ந்த குடும்பத்தினர்களும் வேறு ஊர்களிலிருந்து வந்து குடியேறியவர்களாகும். ஒரு குடும்பத்தினர் சுமார் 15 வருடங்களுக்கு முன் சுமார் 15 கி. மீ. தூரத்திலுள்ள நாஞ்சிக்கோட்டை என்ற ஊரிலிருந்து வந்தவர்கள். கள்ளர் சாதியைச் சேர்ந்த மிராசுதாரின் பூமியில் கூரை வீடு கட்டி வாழ்கிறார்கள். சுமார் ஒரு ஏக்கர் சொந்த நஞ்செய் நிலம் உள்ளது. இன்னொரு குடும்பத்தினர் சுமார் 4 கி.மீ. தூரத்தில் உள்ள கோவிலூரார் என்ற ஊரைச் சேர்ந்தவர்கள். குடும்பத்தலைவர் காவல் துறையில் பல இடங்களில் வேலை பார்த்துவிட்டு ஓய்வுபெற்று அண்மையில் கோவிலூரில் குடியேறியுள்ளார். கோவிலூரில் சொந்த வீடும் சுமார் மூன்று ஏக்கர் நஞ்செய் நிலமும் உள்ளன. இன்னொரு குடும்பத்தினர் சுமார் நான்கு வருடங்களுக்கு முன் பழனியிலிருந்து வந்து குடியேறியுள்ளனர். குடும்பத்தலைவர் புலவர் நத்த வட்டத்தில் விவசாய விரிவாக்கப்பணியாளராகப் பணிப்புரிந்து வருகிறார். எனவே இங்கு வாழ்ந்து வருகிறார்கள். கோவிலூரில் முகமதியர் ஒருவரின் வாடகை வீட்டில் வாழ்ந்து வருகிறார்கள்.

அகமுடையார் சாதியைச் சேர்ந்தவர்களில் சுமார் 45 கி.மீ தூரத்திலுள்ள கொடைவாசல் பகுதியைச் சேர்ந்த ஒருவர் கோவிலூரில் தன் மனைவியின் வீட்டில் வாழ்ந்து வருகின்றார். அவருக்குச் சொந்த நிலம், வீடு எதுவும் இல்லாததாலும் மனைவிக்கு உடன்பிறப்புக்கள் இல்லாததாலும் இங்கு வாழ்ந்து வருகிறார். இன்னொரு குடும்பத்தினர் இராமநாதபுரம் மாவட்டத்தில் சிவகங்கை பகுதியைச் சேர்ந்தவர்கள். 1972-ல் இலங்கையிலிருந்து வந்தவர்கள். கோவிலூரில் முகமதியர் ஒருவரின் பூமியில் கூரைவீடு கட்டி வாழ்ந்து வருகிறார்கள். குடும்பத்தலைவரும் தலைவியும் ஒரு மகளும் கூலிவேலை செய்து வாழ்கிறார்கள். அகமுடையார் சாதியில் வேறு அனைத்துக் குடும்பத்தினரும் பாரம்பரியமாகக் கோவிலூரிலேயே வாழ்பவர்களாகும்.

கோவிலூர் பகுதியில் வாழும் முகமதியர்களில் பெரும்பாலானோர் புதுக்கோட்டை, கல்லாக்கோட்டை, உடையார் கோயில், நாகப்பட்டினம், மதுரை, பட்டுக்கோட்டை கந்தர்வக்கோட்டை, அண்டனூர் ஆகிய பகுதிகளிலிருந்து பல்வேறு கால கட்டங்களில் வந்து குடியேறியவர்களாகும். குறிப்பாக வியாபாரம் மற்றும் திருமணத்தின் மூலம் குடியேறியவர்களாகும். சில குடும்பத்தினர் விவசாயத்திலும் ஈடுபட்டுள்ளனர். சுமார் 30 அல்லது 40 வருடங்களுக்கு முன் குடியேறியவர்கள் தங்கள் சொந்த ஊர் கோவிலூர் என்று குறிப்பிடுகின்றனர். ஆனால் குடிவழிப்பட்டியல் மற்றும் வாய்மொழிச் செய்திகளின் அடிப்படையில் பார்க்கும்போது அனைத்து முகமதியர்களும் பிற்காலத்தில் குடியேறியவர்கள் என்பது தெளிவாகிறது. சுமார் 15 அல்லது 20 வருடங்களுக்கு முன் குடியேறியவர்கள். சொந்த வீடும் சிறிதளவு நிலமும் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். அண்மையில் குடியேறியவர்களில் பெரும்பாலானோர் புறம்போக்கு அல்லது பிறர் பூமியில் கூரைவீடுகட்டி வாழ்கின்றார்கள்.

கோவிலூர் பகுதியில் வாழும் கள்ளர் சாதியைச் சேர்ந்த ஒன்பது குடும்பத்தினரும் வெளியூர்களிலிருந்து வந்து குடியேறியவர்களாகும். இவர்கள் வியாபாரம் மற்றும் பிற தொழில்கள் காரணம் இங்கு வந்து குடியேறியவர்கள். ஒரு குடும்பம் தவிர ஏனைய எட்டு குடும்பத்தினரும் சொந்த நிலமற்றவர்கள். ஆறு குடும்பத்தினர் வாடகை வீட்டில் வாழ்ந்து வருகிறார்கள். நாலு குடும்பத்தினர் 2 கி.மீ தூரத்திலுள்ள ருடிகாடு மற்றும் புலவர் நத்தம் பகுதிகளில் இருந்து குடியேறியுள்ளார்கள். ஒரு குடும்பத்தினர் பட்டுக்கோட்டையில் இருந்தும் ஒரு குடும்பத்தினர் சுமார் 20 கி.மீ தூரத்திலுள்ள வளையமான் பகுதியிலிருந்தும் இரண்டு குடும்பத்தினர் சுமார் 7 கி.மீ தூரத்திலுள்ள குளியக்கோட்டை மற்றும் ஜம்புகம் பகுதியிலிருந்தும் குடியேறியவர்களாகும்.

மேலமாகாணம் பகுதியில் கள்ளர், பறையர், பள்ளர் ஆகிய சாதியைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். பறையர்களில் கிறித்தவ பறையர் தெரு தனியாகக் காணப்படுகிறது. இங்கு வாழும் கள்ளர் சாதியினர் பெரும் நிலச்சுதாந்தார்களாகும். இவர்களும் சுமார் ஐந்து அல்லது ஆறு தலைமுறைகளுக்கு முன் காஞ்சிபுரத்திலிருந்து இடம்பெயர்ந்து வந்தவர்கள் என்ற வாய்மொழிச்சொற்கள் காணப்படுகின்றன. இவர்களின் நெருங்கிய இரத்த உறவினர்கள் அண்மையிலுள்ள குடிகாடு, புலவர் நத்தம் கிராமங்களில் வாழ்ந்து வருகின்றனர். அவர்களும் காஞ்சிபுரத்திலிருந்து வந்ததாகவே குறிப்பிடுகின்றனர்.

மேலமாகாணம் பகுதியில் வள்ளிநகர் என்ற தெருவில் வாழும் பள்ளர் சாதியைச் சேர்ந்த சுமார் 30 குடும்பத்தினர் 1.5 கி.மீ தூரத்திலுள்ள குடிதாங்கி என்ற ஊரிலிருந்து 21 வருடங்களுக்கு முன் இடம் பெயர்ந்து வந்தவர்களாகும். குடிதாங்கியின் பூர்வீகப்பெயர் 'நாகல் கொட்டாரம்' என்பதாகும். குடிதாங்கி நான்கு புறமும் சுமார் ஒரு மைல் தூரத்துக்கு வயலால் சூழப்பட்டிருந்ததால் போக்குவரத்து வசதியின்றி மக்கள் பெரிதும் இன்னலுள்ளனர். இரவு நேரங்களில் வயலைக் கடந்து செல்லும்போது பாம்பு கடித்து பலர் உயிர் இழந்தனர். மகப்பேறின்போது போதிய மருத்துவ வசதி கிடைக்காமல் பலர் இறந்துவிட்டனர். இந்நிலையில் அங்கு வாழ்ந்த அனைத்து குடும்பத்தினரும் ஒன்றுசேர்ந்து இடம் பெயர்ந்துள்ளார்கள். இவர்கள் குடியேறியுள்ள வள்ளிநகர் பகுதியானது மேலமாகாணம், கோவிலூர் ஆகிய பகுதிகளில் வாழும் மக்களுக்குப் பொது இடமாக இருந்ததாகும். (அத்து புறம் போக்கு). பொங்கல் விழாவின் போது ஜல்லிக்கட்டு போன்ற நிகழ்ச்சிகள் அங்கு தான் நடைபெறும். அவ்வாறு குடியேறும் போது பூர்வீகமாக மேலமாகாணம் பகுதியில் வாழ்ந்துவரும் கள்ளர் சாதியினரின் எதிர்ப்பையும் மீறி இரவில் எல்லோரும் ஒன்றாக புறப்பட்டு வந்து கூரைவீடுகட்டி குடியேறியுள்ளனர். குடிதாங்கியில் இப்போது ஒரே ஒரு குடும்பத்தினர் மட்டும் வாழ்ந்து வருகிறார்கள்.

மேலமாகாணம் பகுதியில் எம்.ஜி.ஆர். நகரில் வாழ்ந்து வரும் பறையர் சாதியைச் சேர்ந்த 21 குடும்பத்தினரும் சுமார் ஒரு கி.மீ. தூரத்திலுள்ள நெல்லித்தோப்பு என்ற ஊரிலிருந்து ஆறு வருடங்களுக்கு முன் இடம் பெயர்ந்தவர்கள். முக்கிய மாக போக்குவரத்து வசதிக்காக இங்கு வந்தவர்கள்.

கோவிலூர் மற்றும் மேலமாகாணம் பகுதிகளில் மக்களின் குடியேற்றம் குறித்து பார்க்கும்போது பல்வேறு காரணங்களால் பல்வேறு தரப்பட்ட மக்கள் பல்வேறு காலகட்டங்களில் குடி யேறியிருப்பதைக் காணமுடிகிறது. கோவிலூர் சாலை ஓரமாக இருப்பதால் வியாபாரம் மற்றும் பிற தொழில்கள் காரணம் குடியேறியிருக்கும் பல ஜாதி மக்கள் காணப்படுகின்றனர். மேல மாகாணம் பகுதிக்கு அண்மையில் வாழ்ந்து வந்தவர்கள். போக்குவரத்து வசதிக்காக இடம்பெயர்ந்து வந்துள்ளனர். இவர்கள் முன்னால் வாழ்ந்து வந்த ஊர்களில் இருக்கும்போதே மேலமாகாணம் பகுதியிலுள்ள கள்ளர் சாதியைச்சேர்ந்த மிராசுதார்களுக்கு விவசாயக் கூலிகளாக இருந்தவர்கள். எனவே அவர்கள் இடப்பெயர்வின் மூலம் வாழ்க்கை முறையில் எந்தவித மாறுதல்களும் ஏற்படவில்லை.

**ஊர் பெயர் வரலாறு :**

கோவிலூர் ஊர் பெயர்குறித்த வாய்மொழிச் செய்தி யொன்று உள்ளது. அதாவது நித்தவினோத ராஜவள நாடா கிய பதிநாலு கிராமங்களுக்குத் தலைமை கிராமமாகிய தஞ்சை நெல்லித்தோப்பு என்கிற கோவிலூர் என்று குறிப்பிடுகின்றனர். கோவிலூரிலிருந்து சுமார் ஒரு கிலோ மீட்டர் தூரத்தில் வயலால் சூழப்பட்ட ஒரு சிறிய ஊர் காணப்படுகிறது. இதனை நெல்லித் தோப்பு என்றே குறிப்பிடுகின்றனர். அங்கு வாழ்பவர்கள் பறையர் சாதியைச் சேர்ந்தவர்களாகும். மேலமாகாணம் பகுதியை முற்காலத்தில் வானமாதேவி என்று குறிப்பிட்ட தாகவும் கூறுகின்றனர்.

**மக்கள் :**

கோவிலூர், மேலமாகாணம் பகுதிகள் பல ஜாதி மதத்தைச் சேர்ந்த மக்கள் வாழும் ஊராகும். இங்கு இந்துக்கள் முகமதியர், கிறித்தவர் ஆகிய மூன்று மதத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்துவருகின்றனர். இப்பகுதியில் வாழும் மக்களின் மொத்த எண்ணிக்கை 1053 ஆகும். எண்ணிக்கை அடிப்படையில் பள்ளர் சாதியைச் சேர்ந்தவர்கள் முதல் இடத்தையும் பறையர் இரண்டாவது இடத்தையும் முகமதியர் மூன்றாவது இடத்தையும் கள்ளர் சாதியினர் நான்காவது இடத்தையும் வகிக்கின்றனர்.

மொழி அடிப்படையில் பார்க்கும்போது முகமதியர்களில் பட்டாணி பிரிவைச் சேர்ந்த ஒரு குடும்பத்தினர் உருது மொழியையும் பிராமணர் சாதியைச் சேர்ந்த ஒரு குடும்பத்தினர் தெலுங்கு மொழியையும் தாய்மொழியாக கொண்டவர்கள் ஏனைய அனைத்து சாதிமதத்தினரும் தமிழ்மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களாகும். தெ ங்கு மொழி பேசும் ஒருகுடும்பத்தினரும் தங்கள் குடும்ப அங்கத்தினர்களோடு உறவாடும்போது மட்டுமே தெலுங்கில் பேசுகின்றனர். குழந்தைகள் தமிழ் பள்ளிகளிலேயே பயில்கின்றனர். உருது மொழி பேசும் ஒரு குடும்பத்தினரும் அவ்வாறே காணப் படுகின்றனர்.

எண்ணிக்கையில் அதிகமாகக் காணப்படும் பள்ளர் சாதியினர் அரசியலிலும் ஆதிக்கம் செலுத்துவதைக் காணமுடிகிறது. சென்ற 1986-ல் நடைபெற்ற பஞ்சாயத்து தேர்தலுக்கு முன் பல ஆண்டுகளாக கள்ளர் சமுதாயத்தைச் சேர்ந்த நிலச் சுவாந்தார் பஞ்சாயத்து ஒன்றியத் தலைவராக இருந்தார். சென்ற தேர்தலில் பள்ளர் சாதியைச் சேர்ந்த ஒருவர் அவரை எதிர்த்து போட்டியிட்டு வெற்றி பெற்றுள்ளார். இங்கு பொருளாதார அடிப்படையில் ஆதிக்கம் செலுத்தி வந்த கிராம அரசியலானது மக்களின் எண்ணிக்கை அடிப்படையில் மாறு வதைக் காணமுடிகிறது.

## சாதி மற்றும் குடும்ப அடிப்படையிலான மக்கள் தொகை

| சாதி பெயர் | பாரம்பரிய தொழில் | குடும்பங்களின் எண்ணிக்கை | ஆண்கள் | பெண்கள் | மொத்தம் | விழுக்காடு |
|---|---|---|---|---|---|---|
| பிராமணர் | பூஜை நடத்துதல் | 8 | 30 | 26 | 56 | 5.31 |
| வெள்ளாளர் | விவசாயம் | 9 | 24 | 17 | 41 | 3.89 |
| அகமுடையார் | விவசாயம் | 17 | 50 | 42 | 92 | 8.73 |
| செட்டியார் | வியாபாரம் | 4 | 10 | 5 | 15 | 1.42 |
| கள்ளர் | விவசாயம் | 18 | 46 | 37 | 83 | 7.97 |
| தேவர் | விவசாயம் | 6 | 11 | 15 | 26 | 2.46 |
| ஆசாரி | தச்சு/இரும்புவேலை | 11 | 38 | 28 | 66 | 6.26 |
| கோனார் | மேய்ச்சல் | 4 | 10 | 13 | 23 | 2.18 |
| நாடார் | மரம் ஏறுதல்/ விவசாயம் | 3 | 12 | 10 | 22 | 2.08 |
| வண்ணான் | சலவை செய்தல் | 4 | 7 | 7 | 14 | 1.33 |
| முகமதியர் | வியாபாரம்/ விவசாயம் | 21 | 89 | 61 | 150 | 14.24 |
| நாவிதர் | சவரம் செய்தல் | 2 | 5 | 6 | 11 | 1.04 |
| பள்ளர் | விவசாய கூலி | 56 | 120 | 125 | 245 | 23.26 |
| பறையர் | விவசாய கூலி | 46 | 106 | 94 | 200 | 18.99 |
| கவுண்டர் | விவசாயம் | 1 | 2 | 2 | 4 | .37 |
| சாலியர் | விவசாயம் | 1 | 4 | 1 | 5 | .47 |
| மொத்தம் | | 210 | 564 | 489 | 1053 | 100.00 |

**கல்வி**

கோவிலூர், மேலமாகாணம் பகுதியில் வாழும் மக்களின் கல்வியானது சமூக மற்றும் பொருளாதார அடிப்படையில் வேறுபடுகிறது. வெள்ளாளர் சாதியில் குழந்தைகள் உள்பட 40 நபர்களில் கல்வி அறிவற்றவர்கள் 5 நபர்கள் மட்டுமே உள்ளனர். மூன்று அல்லது நான்கு வயதுக்கு மேற்பட்ட குழந்தைகள் அனைத்தும் பால்வாடி அல்லது பள்ளிக்கூடங்களுக்குச் செல்லுகின்றன. ஆனால் கல்லூரி படிப்பிற்குச் சென்றவர்கள் அல்லது கல்லூரியில் படிப்பவர்கள் எவரும இல்லை. ஒருவர் மட்டும் +2 படித்துக்கொண்டிருக்கிறார் முதல்நிலைக் கல்வியோடு படிப்பை முடித்துவிட்டவர்களின் எண்ணிக்கை அதிகமாகக் காணப்படுகிறது.

பிராமணர் சாதியில் எஸ்எஸ். எல் சி. மற்றும் பட்டப்படிப்பு படித்தவர்கள் பலர் உள்ளனர். அதிலும் கோவில்களில் அர்ச்சகர்களாகப் பணிபுரியும் குருக்கள் பிரிவைச் சேர்ந்த குடும்பங்களில் பெரும்பாலும் முதல்நிலைக் கல்வியோடு படிப்பை முடித்துவிடுவதைக் காணமுடிகிறது.

கோனார் சாதியில் குழந்தைகள் உட்பட 23 நபர்களில் எட்டுபேர் கல்வி அறிவற்றவர்களாகும். 10ம் வகுப்புக்கு மேல் படித்தவர்கள் எவரும் இல்லை. தேவர் சாதியில் ஒருவர் எம் ஏ பட்டம் பெற்றுள்ளார். பெரும்பாலானோர் முதல்நிலைக் கல்வியோடு படிப்பை முடித்தவர்களாகும். மொத்தம் 25 நபர்களில் மூன்று பேர் கல்வி அறிவற்றவர்கள். செட்டியார் சாதியில் வயது சென்ற ஒரு தாயைத் தவிர அனைவரும் கல்வி அறிவுடையவர்கள் ஆசாரி சாதியில் குழந்தைகள் உட்பட மொத்தம் 64 நபர்களில் 8 பேர் தான் படிப்பறிவற்றவர்கள். ஆனால் எஸ்எஸ். எல். சிக்கு மேல் படித்தவர்கள் எவரும் இல்லை. நாடார் சாதியில் மொத்தம் 18 நபர்கவில் 3 பேர் படிப்பு அறிவற்றவர்கள். ஆனால் இவர்களில் எம். எஸ்சி

மற்றும் பி. காம். பட்டம் பெற்றவர்கள் உள்ளனர். அகமுடை யார் சாதியில் படிப்பறிவற்றவர்களின் எண்ணிக்கை குறைவா கவே காணப்படுகின்றது. மொத்தம் 79 நபர்களில் 8 பேர் மட்டுமே படிப்பறிவற்றவர்கள். இவர்களில் பி.ஏ. பட்டம் பெற்றவர்கள் உள்ளனர். கள்ளர் சாதியில் மொத்தம் 81 நபர்களில் 5 பேர் மட்டுமே படிப்பறிவற்றவர்கள். இவர்களி டையே குறிப்பாக மேலமாகாணம் பகுதியில் வாழ்பவர் களிடையே எம்,ஏ,, எம்.எஸ்சி., பி.இ. போன்ற பட்டதாரிகள் பலர் உள்ளனர்.

முகமதியர்களில் மொத்தம் 143 நபர்களில் 11 பேர் மட்டுமே படிப்பறிவற்றவர்கள். ஆனால் பெரும்பாலோர் 10வது வகுப்புக்குக் கீழ் படித்தவர்களாகும். பி. ஏ., பி. எஸ்சி. பட்டம் பெற்றவர்கள் ஒரு சிலர் உள்ளனர்.

வண்ணார் சாதியில் மொத்தம் 14 நபர்களில் 4 பேர் படிப்பறிவற்றவர்களாகும். நாவிதர்களில் மொத்தம் 12 நபர்களில் இரண்டு பேர் படிப்பறிவற்றவர்கள். தமிழகக் கிராமங்களில் பொதுவாக அரிசனர்கள் கல்வியில் மிகவும் பின் தங்கியவர்களாகக் காணப்படுவதுண்டு. ஆனால் மேலமாகாணம் பகுதியில் பூர்வீகமாக வாழ்ந்துவரும் பள்ளர்கள் ஓரளவு கல்வி அறிவு உடையவர்களாகக் காணப்படுகின்றனர். மொத்தம் 156 நபர்களில் 33 பேர் மட்டுமே படிப்பறிவற்றவர்கள் பி ஏ., பி.எஸ்சி., பட்டம் பெற்றவர்கள் பலர் காணப்படுகின்றனர். இவர்கள் கல்வியில் சற்று முன்னேறுவதற்குக் காரணம் அவர் களின் பொருளாதார நிலை முக்கிய காரணமாகும். பெரும் பாலோர் சிறிதளவு சொந்த அல்லது குத்தகை நிலமுடையவர் களாகக் காணப்படுகின்றனர். அதோடு படித்தவர்களில் சிலர் அரசு அலுவலகங்களிலும் பிற துறைகளிலும் பணியாற்றி வருகின்றனர். ஆனால் மேலமாகாணத்தில் வள்ளிநகர் பகுதி யில வாழ்ந்துவரும் பள்ளர்கள் கல்வியில் மிகவும் பின்தங்கியவர் களாகக் காணப்படுகின்றனர். முன்னர் குறிப்பிட்டுள்ள வண்ணம்

இவர்கள் சுமார் 1.5 கி.மீ தூரத்திலுள்ள குடிதாங்கி என்ற ஊரிலிருந்து இடம் பெயர்ந்து வந்தவர்கள். மொத்தம் 94 நபர்களில் 40பேர் படிப்பறிவற்றவர்களாகும். 10வது வகுப்புக்கு மேல் படித்தவர்கள் எவரும் இல்லை. இவர்கள் கல்வியில் பின்தங்கி இருப்பதற்குக் காரணம் பொருளாதாரம் முக்கிய காரணமாக உள்ளது. அனைவரும் சொந்த நிலமற்றவர்கள். ஆண்களும் பெண்களும் விவசாயக் கூலிகளாகும். பல குடும்பங்களில் பிள்ளைகளை பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பாமல் இருப்பதைக் காணமுடிகிறது. காரணம் தாய்தகப்பன் கூலி வேலைக்குச் செல்லும்போது 5 அல்லது 6 வயது பிள்ளைகளை சிறு குழந்தைகளை கவனிப்பதில் ஈடுபடச் செய்கின்றனர். மேலும் முன்னால் இவர்கள் வாழ்ந்து வந்த குடிதாங்கி என்ற ஊர் 1.5 கி.மீ தூரம் வயலால் சூழப்பட்டிருந்ததால் போக்குவரத்து வசதி மற்றும் பள்ளிக்கூட வசதி இல்லாது காணப்பட்டுள்ளது. இதன் விளைவாக சுமார் 20 வயதுக்கு மேற்பட்டவர்கள் அனைவரும் படிப்பறிவற்றவர்களாக காணப்படுகின்றனர்.

பறையர்களில் இந்து மதத்தைச் சேர்ந்தவர்களும் கிறித்தவமதத்தைச் சேர்ந்தவர்களும் கல்வியில் மிகவும் பின்தங்கிய நிலையில் காணப்படுகின்றனர். இந்து மதத்தைச் சேர்ந்தவர்களில் மொத்தம் 70 நபர்களில் 46 பேர் படிப்பறிவற்றவர்களாகும். எஸ்.எஸ்.எல்.சி-க்கு மேல் படித்தவர்கள் எவரும் இல்லை. 5வது வகுப்புக்கு மேல் படித்தவர்கள் மிகக்குறைவு. இவர்கள் சுமார் ஒரு கி.மீ தூரத்திலுள்ள போக்குவரத்து வசதிக்காக சுமார் 6 வருடங்களுக்கு முன் இங்கு எம்.ஜி.ஆர் நகரில் குடியேறியவர்களாகும். அதோடு அனைவரும் சொந்த நிலமற்றவர்கள். சுமார் 20 வயதுக்கு மேற்பட்டவர்கள் அனைவரும் படிப்பறிவற்றவர்களாகவே காணப்படுகின்றனர். போக்குவரத்து வசதியற்று வயலால் சூழப்பட்ட பகுதிகளில் வாழும் குறிப்பாக அரிசனர்களின் வாழ்வு வயல்நிலத்தோடு ஒன்றிப் போவதால் கல்வியில் மிகவும் பின்தங்கிவிடுகின்றனர். அதோடு பொருளாதார நிலையிலும் பின்தங்கிவிடுகின்றனர்.

கிறித்தவ பறையர்களில் மொத்தம் 111 நபர்களில் 47 பேர் படிப்பறிவற்றவர்களாகும். இவர்களிடையேயும் எஸ்.எஸ்.எல்.சி-க்கு மேல் படித்தவர்கள் எவரும் இல்லை.

**வழிபாடு:**

தமிழக கிராமங்களில் காணப்படும் பொதுவான வழிபாட்டு முறையே கோவிலூர் மேலமாகாணம் பகுதிகளிலும் காணப்படுகிறது. இங்கு இந்து, கிறித்தவ மற்றும் முகமதிய மதத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இந்து மதத்தைச் சேர்ந்த மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இந்து மதத்தைச் சேர்ந்தவர்களிடையே சிறு தெய்வ மற்றும் பெரும் தெய்வ வழிபாடும் காணப்படுகிறது. ஒவ்வொரு குடும்பத்திற்கும் குடும்ப தெய்வம் காணப்படுகிறது. சமுதாயத்தில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகள் குறிப்பாக சாதி வேறுபாடு வழிபாட்டிலும் காணப்படுகின்றன. கிராம வழிபாட்டு அமைப்பில் வெவ்வேறு சாதி மக்களின் பங்கு குறித்த சில ஒழுங்குகள் காணப்படுகின்றன. பல அந்தஸ்து நிலைகள், பாரம்பரியம் ஆகிய வற்றின் பங்கு வழிபாட்டு உரிமைகளில் அதிகமாகக் காணப்படுகின்றன.

கோவிலூர் பகுதியில் காணப்படும் சிவன்கோயில் மிகப் பழமையானதாகும். இங்கு வெள்ளாளர், அகமுடையார், கள்ளர் ஆகிய சாதி மக்கள் வழிபடுவார்கள் பறையர், பள்ளர் ஆகிய சாதியினர் கோயிலின் உள்ளே செல்லக்கூடாது. இங்கு பூசை நடத்துபவர்கள் பிராமணர்களில் குருக்கள் பிரிவைச் சேர்ந்தவர்களாகும். சமஸ்கிருத மொழியில் பூசை நடைபெறும் இசை வேளாளர் சாதியைச் சேர்ந்த மூன்று குடும்பத்தினர் கோவில் மெய்க்காவலர்களாகப் பணி புரிகின்றனர் கோவிலைச் சேர்ந்த நிலங்களும் குருக்கள் மற்றும் மெய்க்காவலர் வசமே காணப்படுகின்றன. கள்ளர் சாதியைச் சேர்ந்த நிலச்சுவந்தார் ஒருவர் கோவில் நிர்வாகத்தில் முக்கிய பொறுப்பு வகிக்கிறார்

மேலமாகாணம் பகுதியில் பாரம்பரியமாக அங்கு வாழ்ந்து வரும் பள்ளர் தெருவில் ஒரு மிகப்பழைய சிறிய கோவில் உள்ளது. இதில் எந்த ஒரு தெய்வத்தின் சிலையும் காணப்படவில்லை "ஆனால் அவர்களின் குலதெய்வம் அங்கு வாழ்வதாக கருதுகின்றனர். அங்கு வழிபாடு நடத்துவதும் இல்லை. இது ஒரு முற்பட்ட காலக்கட்டத்தைய மதத்தைச் சுட்டுவதாகக் காணப்படுகிறது மேலமாகாணம் பகுதியில் முனியாண்டவர் கோவில் என்ற ஒரு கோவில் உள்ளது, இது பொது கோவிலாக காணப்படுகிறது, எனினும் இக்கோவில் மேல்சாதி மக்களின் பொறுப்பில்தான் உள்ளது. அதோடு காத்தாயி, மதுரைவீரன் ஆகிய தெய்வங்களின் சிலைகளும் உள்ளன. இங்கு ஆடு· கோழி ஆகியவை பலி செலுத்தப்படுவதால் பிராமணர்கள் வருவதில்லை. இக்கோயிலுக்கு நான்கு பூசாரிகள் இருக்கின்றனர் இவர்கள் அகமுடையார் சாதியைச் சேர்ந்தவர்கள். பூசை தமிழ் மொழியிலேயே நடத்துகின்றனர். கோவில் வருமானத்தை நான்கு பேரும் பங்கிட்டுக் கொள்வது வழக்கம். இக்கோவிலில் ஆடி மாதம் 28-ம் தேதி சிறப்பான திருவிழா ஒன்று நடைபெறும். அதில் பெரும்பாலும் எல்லா சாதியினரும்· கலந்துகொள்வார்கள். சுமார் 10 வருடங்களுக்கு முன் வரையிலும் கோவிலின் உள் அதாவது காத்தாயி அம்மன் சிலை இருக்கும் இடத்துக்கு அரிசனர்கள் 'செல்லக்கூடாது என்ற கட்டுப்பாடு இருந்தது. ஆனால் தற்போது மேற்கூறிய திருவிழா அன்று மட்டும் அரிசனர்களை உள்ளே அனுமதிக்கிறார்கள்.

பறையர் சாதியில் 25 "குடும்பங்களும் ஆசாரி சாதியில் ஆறு குடும்பங்களும் அகமுடையாரில் ஒரு குடும்பமும் நாடாரில் ஒரு குடும்பமும் கிறித்தவர்களாகக் காணப்படுகின்றனர். அனைவரும் ரோமன் கத்தோலிக்க பிரிவைச் சேர்ந்தவர்கள். கோவிலூர் பகுதியில் ஆலயம் இல்லாததால் தஞ்சைக்கு வந்து ஆராதிக்கின்றனர். முகமதியர்கள் அண்மையிலுள்ள பள்ளிவாசலுக்குச் சென்று தொழுகை நடத்துகின்றனர்.

**பொருளாதார நிலை:**

விவசாயமே கிராமப் பொருளாதாரத்துக்கு அடிப்படையாகக் காணப்படுகிறது. கோவிலூர் மேலமாகாணம் பகுதிகள் காவேரி நீர்பாசனப் பகுதியைச் சேர்ந்ததால் இங்கு முற்றிலும் நஞ்செய் நிலங்களாகவே காணப்படுகின்றன. விவசாயம் பெரும் நிலச்சுவாந்தார்களுக்கு முக்கிய வருமானமாகவும் நிலமற்ற மக்களுக்கு முக்கிய வேலை வாய்ப்பாகவும் காணப்படுகிறது. கிராமப்பொருளாதாரமானது மேட்டூர் அணைக் கட்டிலிருந்து வரும் நீர்பாசன வசதியைப் பொறுத்து வேறுபடுவதுண்டு. மக்களின் பொருளாதாரம் மற்றும் சமூக அந்தஸ்து ஆகியவற்றிற்கு நில உடைமையானது மிகமுக்கிய காரணக் கூறாகக் காணப்படுகிறது. விவசாய அடிமைகளாகப் பணி புரிந்து வந்த அரிசனர்கள் மீது பெரும் நிலச்சுவாந்தார்கள் அதிக ஆதிக்கம் செலுத்தி வந்தனர். ஆனால் தற்போது இந்நிலையில் சில மாறுதல்கள் ஏற்பட்டுவருவதும் குறிப்பிடத் தக்கதாகும். முகமதியர்கள் பெரும்பாலும் வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளனர். அரசு ஊழியர்கள் மிகக்குறைவாகவே காணப்படுகின்றனர். ஏ.வி.வி.எம். பூண்டி புஷ்பம் கல்லூரி அண்மையில் காணப்படுவது ஒரு சிலருக்கு மேல்நிலை கல்வி கற்பதற்கும் வேலை வாய்ப்பிற்கும் காரணமாகக் காணப்படுகிறது.

**நில உடைமை:**

கோவிலூர் மேலமாகாணம் பகுதிகளில் மக்கள் குடியிருக்கும் பகுதி மற்றும் அத்துப்புறம்போக்கு ஆகிய இடங்களைத் தவிர அனைத்து நிலங்களும் நஞ்செய் நிலங்களாகும். இப்பகுதியில் சுமார் 300 ஏக்கர் நஞ்செய் நிலம் காணப்படுகிறது. சுமார் 25 அல்லது 25 வருடங்களுக்கு முன் வரையிலும் இப்பகுதியின் நிலங்களை அனைத்தும் பிராமணர், பிள்ளை, கள்ளர் போன்ற சில குறிப்பிட்ட சாதி மக்களின் வசம் காணப்பட்டது

ஆனால் தற்போது ஏனைய சாதியினரும் குறிப்பாக முகமதியர்கள், அரிசனர்கள், கோனார், செட்டியார் போன்ற சாதி மக்களும் நில உடைமையில் ஆர்வம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

**வீட்டு விலங்குகள்;**

பசு, எருமை போன்ற வீட்டு விலங்குகள் காணப்படுகின்றன ஆனால் போதுமான மேய்ச்சல் நிலங்கள் இல்லாத காரணத்தால் ஆடு மற்றும் விலங்குகள் குறைவாகவே காணப்படுகின்றன. பெரும்பாலும் புதுரக ஆடுமாடுகளை வளர்ப்பவர்கள் மிகக் குறைவு. முக்கியமாக மாடுகளை நிலங்களை உழுவதற்காகவே வளர்க்கின்றனர். அவற்றில் கிடைக்கும் சிறிதளவு பாலை அண்மையிலுள்ள தேநீா கடைகளுக்கு எடுத்துச் செல்கின்றனர். பெரும் விவசாயிகள் டிராக்டர் மூலம் நிலங்களை உழுவதால் உழவு மாடுகள் அதிகமாக வைத்துக்கொள்வதில்லை.

**வருவாய் நிலை :**

பெரும்பாலானோரும் குறிப்பாக நிலமற்றவர்கள் பொருளாதார நிலையில் மிகவும் பின்தங்கிய நிலையிலேயே காணப்படுகின்றனர். சுமார் 50 விழுக்காட்டுக்கும் அதிகமானோர் வருமையில் வாடுகின்றனர். இவர்களில் பெரும்பாலானோர் அரிசனர்களாகும். பிராமணர், கள்ளர், முகமதியர் ஆகிய பிரிவைச் சேர்ந்தவர்களில் சில குடும்பத்தினர் மட்டுமே பொருளாதார வசதி படைத்தவர்களாகக் காணப்படுகின்றனர். தற்போது அரசு ஊழியர்களாக அல்லது தனியார் நிறுவனங்களில் வேலை பார்த்துவருபவரின் பொருளாதார நிலை சற்று மேம்பட்டு வருவதையும் காணமுடிகிறது. அதோடு வெளி நாடுகளில் வேலைபார்த்து வரும் முகமதியர் மற்றும் ஆசாரி சாதிகளைச் சேர்ந்த ஒரு சிலரின் குடும்ப பொருளாதாரம் மேம்பட்டு வருவதையும் காணலாம்.

குறைந்த வருவாயை உடைய பிரிவினரிடையே சிறுவர் முதல் அனைவரும் கூலி வேலை செய்து வருகின்றனர். அவர் களின் மோசமான பொருளாதார நிலையும், கல்வி அறிவின் மையும், வேலைவாய்ப்பு குறைவாகக் காணப்படுவதும் அவர் களின் குறைந்த வருவாய்க்கு காரணங்களாக உள்ளன. வருடம் 10000 ரூபாய்க்கு அதிகமான வருவாயையுடைய குடும்பங்களை எடுத்துக் கொண்டால் பிராமணர்களிடையே அரசு ஊழியர் களாகவும், கள்ளர் சாதியில் பெரும் நிலச்சுவாந்தார்களாகவும் முகமதியர் மற்றும் ஆசாரி சாதியில் வெளிநாடுகளில் வேலை பார்ப்பவர்களாகவும் காணப்படுகின்றனர். பெரும் நிலச்சுவாந் தார்கள் அப்பகுதியில் வாழும் ஏராளமான விவசாயக்கூலி களுக்கு வேலைவாய்பளிப்பவர்களாகக் காணப்படுகின்றனர் சில நிலைகளில் பெரும் நிலச்சுவாந்தார்கள் விவசாயக்கூலி களாகக் காணப்படும் மக்களின் பொருளாதார நிலையைக் கட்டுப்படுத்துகிறவர்களாக இருப்பதையும் காணலாம். ஆனால் கல்வி மற்றும் ஏனைய மக்களோடுள்ள தொடர்பு ஆகியவற்றின் காரணம் விவசாயக்கூலிகளிடையேயும் ஒருவித விழிப்புணர்ச்சி ஏற்பட்டிருப்பதைக் காண முடிகிறது.

## கிராம சுற்றுப்புற சூழல்

**கிராம நிலம் :**

மேட்டூர் நீர்த்தேக்கத்திலிருந்து வரும் தண்ணீர் மூலம் இக்கிராமம் செழிப்படைந்துள்ளது. வடவாறு என்ற ஆறு கோவிலூர் மேலமாகாணம் பகுதிகளின் நடுவாகச் செல்கிறது. சாலை, குடியிருப்பு பகுதி மற்றும் ஆத்துப் புறம்போக்குப்பகுதி களைத் தவிர மற்ற அனைத்து நிலப்பகுதியும் நஞ்செய் நிலங்களாகும்.

**நிலஉடைமையும் பயன்பாடும் :**

உடைமையின் அடிப்படையில் இப்பகுதியை மூன்று பிரிவு களாகப் பிரிக்கலாம். தனி நபர்களுக்குச் சொந்தமான கடை கள், வீடுகள், பயிரிடும் நிலங்கள் ஆகியவற்றை ஒரு பிரிவாகவும்

கிராம சமுதாயத்துக்குச் சொந்தமான கோவில்களும், அவற்றைச் சேர்ந்த பகுதிகளையும் ஒரு பிரிவாகவும். அரசுக்குச் சொந்தமான சாலை மற்றும் ஆத்துப்புறம்போக்கு பள்ளிக் கூடங்கள் ஆகியவற்றை ஒரு பிரிவாகவும் பிரிக்கலாம்,

பயன்பாட்டு அடிப்படையிலும் கிராம நிலப்பகுதியை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று உற்பத்திக்காகப் பயன்படுத்தப்படும் பயிரிடும் நிலங்கள்; இன்னொன்று பொது நலனுக்காகப் பயன்படுத்தப்படும் மேய்ச்சல் நிலங்கள் (முக்கியமாக ஆத்துப்புறம்போக்கு), கோவிலை சேர்ந்த பகுதி, வெவ்வேறு சாதியினருக்கான சுடுகாடு அல்லது இடுகாடு ஆகியவற்றைக் கூறலாம். இன்னொன்று வீடுகள், கட்டிடங்கள் ஆகியவை கட்டுவதற்காக பயன்படுத்தப்படும் பகுதி.

3. முற்காலத்தில் பெருமளவில் காணப்பட்ட ஆத்துப்புறம் போக்கு பகுதி பொது இடமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. தற்போது அப்பகுதிகளில் மக்கள் குடியேறியுள்ளனர்.

**குடியிருப்பமைப்பு :**

கிராமம் சமூக அமைப்பின் ஒரு ஒருமம் என்ற அடிப்படையில் சாதி, உறவு ஆகிய எல்லைகளைத் தாண்டி பல குடும்பங்கள் ஒன்றுபட்டு செயல்படுவதைக் காணமுடிகிறது. அனைத்து சாதியினரும் ஒரே ஊரில் வாழ்ந்து வந்தாலும் வாழும் பகுதியை அடிப்படையாகக் கொண்டு கிராமத்தை இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஒன்று அரிசனங்கள் வாழும் பகுதி; இன்னொன்று அரிசனர் அல்லாதோர் வாழுமிடம். ஒவ்வொரு பகுதியிலும் வெவ்வேறு சாதி மக்கள் ஒவ்வொரு தொகுதியாக (Clusters) வாழ்ந்து வருகின்றனர். தற்போது கிராம விரிவாக்கத்தின் காரணம் இத்தொகுதியில் குறிப்பாக அரிசனர் அல்லாதோர் வாழும் பகுதியில் உள்ள அமைப்பில் சில மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன.

பறையர், பள்ளர், கிறித்தவ பறையர் ஆகியோருக்கு தனிப்படுத்தப்பட்ட குடியிருப்புப் பகுதிகள் காணப்படுகின்றன. இவர்கள் ஊரின் வெளிப்பகுதியில் தனித்தனியாக வாழ்ந்து வருகின்றனர். கிராமத்தின் முக்கிய பகுதிகளில் அரிசனர் அல்லாதோர் வாழ்ந்து வருகின்றனர், கோவிலூர், மேலமாகாணம் பகுதிகள் அங்கு காணப்படும் மிகப்பழமையான சிவன் கோவிலை மையமாகக் கொண்டதாகும். பாரம்பரிய அமைப்பை எடுத்துக்கொண்டால் குருக்கள் மற்றும் இசை வேளாளர் ஆகியோர், கோவிலுக்கு மிக அருகாமையிலும் அதன்பின் வெள்ளாளர், அகமுடையார், செட்டியார் ஆகிய உயர்சாதி மக்களும் அவர்களுக்குப்பின் கள்ளர், தேவர், நாடார் போன்ற சாதியினரும் வாழ்ந்து வந்தனர். சுமார் 20 அல்லது 30 வருடங்களுக்குப்பின் வெளி ஊர்களிலிருந்து வந்த பிராமணர், முகமதியர், கோனார், நாடார், கள்ளர் ஆகியோர் அரிசனர் அல்லாதோர் வாழும் பகுதியில்பரவலாகக் குடியேறியுள்ளனர் குறிப்பாக முகமதியர்கள் வியாபாரத்தில் ஈடுபடுவதால் சாலை ஓரப் பகுதிகளில் குடியேறியுள்ளனர். வெளி ஊர்களிலிருந்து வந்த கள்ளர், கோனார் போன்ற சாதியினர் கோவிலைச் சேர்ந்த பகுதிகளிலும் கள்ளர் சாதியைச் சேர்ந்த பாரம்பரிய நிலச்சுவாந்தார்களின் நிலங்களிலும் குடியேறியுள்ளனர். இவ்வாறு வெளி ஊர் மக்களின் குடியேற்றத்தினால் பாரம்பரிய குடியிருப்பு அமைப்பில் மாறுதல்கள் ஏற்பட்டுவருகின்றன.

பாரம்பரியமாக இங்கு வாழ்ந்து வரும் அரிசனர்கள், பள்ளர் மற்றும் கிறித்துவ பறையர் ஆகியோராகும். இவர்கள் வெவ்வேறு பகுதிகளில் வாழ்ந்து வருகின்றனர். அதோடு போக்குவரத்து வசதிக்காக சுமார் ஒரு மைல் தூரத்திலுள்ள குடிதாங்கி என்ற ஊரிலிருந்து பள்ளர் சாதியைச் சேர்ந்த சுமார் 30 குடும்பத்தினர் வள்ளிநகர் என்ற பகுதியில் குடியேறியுள்ளனர். இதேப்போன்று சுமார் ஒரு கிலோமீட்டர் தூரத்திலுள்ள நெல்லித்தோப்பு என்ற ஊரிலிருந்து வந்த

பறையர்கள் எம். ஜி. ஆர். நகர் என்ற இடத்தில் குடியேறி யுள்ளனர். இவ்விரு பகுதிகளும் கீழ்சாதி மக்கள் வழிபடும் காத்தாயி அம்மன் கோவிலோடு சேர்ந்த ஆத்தோரப் பகுதியாகும். இப்பகுதி முற்காலத்தில் பொது இடமாகப் பயன்படுத்தப்பட்டு வந்தது. இவ்வாறு மக்களின் குடியேற்றம் குடியிருப்புப் பகுதியின் அமைப்பில் பல மாறுதல்களை ஏற்படுத்தியுள்ளது. ஆனால் தனித்தனி தொகுதிகளாகப் பிரிந்து வாழும் தன்மையானது அரிசனர்களிடையே அதிகமாகக் காணப்படுகிறது. சான்றாக அரிசனர்கள் வாழும் பகுதியை நான்கு பிரிவுகளாகத் தெளிவாகப் பிரிக்கலாம். (1) பாரம்ப யமாக வாழும் கிறித்துவ பறையர்கள் வாழும் பகுதி (2 பாரம்பரியமாக இங்கு வாழும் பள்ளர்கள் வாழும் பகுதி (3) குடிதாங்கியிலிருந்து வந்து குடியேறிய வள்ளிநகர் என்று பெயர் சூட்டிக்கொண்ட பள்ளர்கள் வாழும் பகுதி (4) நெல்லித்தோப்பிலிருந்து வந்த குடியேறிய எம். ஜி. ஆர். நகர் என்று பெயர் சூட்டிக்கொண்ட பறையர்கள் வாழும் பகுதி

பாரம்பரியமாக இங்கு வாழும் கள்ளர் சாதியினர் தனியாக ஒரு தெருவில் வாழ்ந்து வருகின்றனர். அத்தெருவிற்கு குடியானவர் தெரு என்று பெயர். இவர்கள் இங்கு வாழும் பெரும் நிலச்சுவாந்தார்களாகும். இவர்களும் சுமார் ஐந்து அல்லது ஆறு தலைமுறைகளுக்கு முன் காஞ்சீபுரத்திலிருந்து வந்து குடியேறியவர்களெனக் கூறுகின்றனர். இவர்களின் குடியேற்றம் குறித்து அங்கு வாழ்ந்துவரும் சுமார் 70 வயதுடைய இரு தகவலாளிகள் கொடுக்கும் செய்திகள் கீழே கொடுக்கப் பட்டுள்ளன.

மேலமாகாணம், புலவர் நத்தம்[1] ஆகிய ஊர்களில் பூர்வீக மாக வாழ்ந்து வரும் கள்ளர் சாதியினர் காஞ்சிபுரத்திலிருந்து வந்தவர்கள். அங்கிருந்து வரும் போது வண்ணான், பர்காரி

1. புலதர்நத்தம் என்ற ஊர் கோவிலூர் மேலமாகாணம் பகுதியிலிருந்து சுமார் 2. கி.மீ. தூரத்தில் உள்ளது.

(நாவிதர்), கொல்லன், ஆசாரி ஆகியோரையும் கொண்டு வந்தார்கள். அவர்களின் சந்ததியினர்தான் தற்போது கோவி லூரில் வாழ்ந்து வரும் வண்ணான், பரிகாரி, ஆசாரி, கொல்லன் ஆகிய சாதியினர் என்று கூறுகின்றனர். அதோடு தங்கள் குலதெய்வமாகிய காமாட்சியம்மன் பொற்சிலையையும் திருடிக்கொண்டு வந்துவிட்டனர். இங்கு வந்தபின் இருபிரிவி னராகப் பிரிந்து ஒரு பிரிவினர் புலவர்நத்தம் பகுதியிலும், ஒரு பிரிவினர் மேலமாகாணம் பகுதியிலும் வாழ்ந்து வந்தனர். அப்போது திருடிக்கொண்டு வந்த சிலையை வழிபடுவதில் இருபிரிவினர்களுக்கும் இடையே தகராறு ஏற்பட்டது. அப் போது சிலையை மண்ணுக்குள் புதைத்து வைத்துவிட்டு வருடம் ஒருமுறை வெளியே எடுத்து இருபிரிவினரும் வழிபட்டு வந்தனர். அப்போது தஞ்சையில் மராத்திய மன்னர்களின் முற்பட்ட காலமாகும். அவ்வாறு அவர்கள் வழிபடுவது அப் பகுதியில் வாழ்ந்துவந்த அரசனின் பிரதிநிதியாகிய இராஜேன் என்ற அகமுடையாருக்கு தெரியவந்தது. அவர் அரசனிடம் கூறிவிட்டார் அரசன் உடனடியாக சிலையைக் கொண்டு வருமாறு கட்டளை இட்டார். அப்போது கள்ளர் சாதியினர் சிலையை அரசனிடம் ஒப்படைத்து விவரங்களைக் கூறினர். உடனே அரசன் அச்சிலையை வழிபடுவதற்கென தனிக்கோவில் கட்டுவதாக கூறி தற்போது தஞ்சையில் மேலவீதியில் காணப் படும் பங்காரு காமாட்சியம்மன் கோவிலைக் கட்டினார். அண்மை காலம் வரையிலும் மேலமாகாணம் புலவர்நத்தம் பகுதிகளில் வாழும் கள்ளர் சாதியினர் தஞ்சையிலுள்ள காமாட்சியம்மன் கோவிலுக்கு வழிபாட்டிற்காகச் செல்வதுண்டு என்றும் அவ்வாறு சென்றால் கோவில் வழிபாட்டில் அவர்க ளுக்கு முக்கியத்துவம் கொடுப்பதுண்டு என்றும் கூறுகின்றனர் இப்போது கள்ளர் சமுதாயத்தினருக்குச் சொந்தமாகக் காணப்படும் நிலங்கள் அரசன் அவர்களுக்கு வழங்கியது என்றும் கூறுகின்றனர்.

மக்கள் குடியேறிய காலம் மற்றும் தொழில் ஆகியவையும் குடியிருப்பு அமைப்பில் முக்கிய காரணங்களாகக் காணப்படு

கின்றன. முகமதியர்கள் பிற்காலத்தில் குடியேறியவர்களாகக் காணப்பட்டாலும் அவர்கள் வியாபாரத்தில் ஈடுபடுவதால் முக்கியமாக சாலை ஓரங்களில் குடியேறி உள்ளனர். முற்காலத்தில் குடியேறியவர்களில் ஆசாரி சாதியினர் சாலை ஓரததில் வாழ்ந்து வருகின்றனர், இவர்களின் முக்கிய தொழில் மாட்டு வண்டிகள் மற்றும் ஏர் செய்தலாகும். பாரம்பரியமாக அங்கு வாழ்ந்து வரும் குருக்கள், இசைவெள்ளாளர் ஆகியோர் கோவிலில் பூசை செய்தல், இசை வாசித்தல் போன்ற தொழில்களில் ஈடுபடுவதால் அவர்கள் கோவிலுக்கு அருகாமையில் வாழ்ந்து வருகின்றனர். இங்கு வாழும் கள்ளர் சமுதாயத்தினர் பல தலைமுறைகளுக்கு முன் குடியேறியவர்களாகக் காணப்பட்டாலும் அவர்கள் சாலை, ஆறு ஆகியவற்றைத் தாண்டிச்சென்று வயல் நிலங்களுக்கு அருகாமையில் குடியேறியுள்ளனர், காரணம் அவர்கள் முற்றிலுமாக விவசாயத்தில் ஈடுபடுவதே ஆகும். இவ்வாறு வெவ்வேறு சாதி மக்களின் குடியிருப்பு அமைப்பானது அவர்களின் சமூக வாழ்வைப் பிரதிபலிக்கிறது ஆனால் மக்களின் 'குடியிருப்பமைப்பானது தெளிவாக வரையறுக்கப்பட்ட அமைப்பு எனக் கூற இயலாது. அரிசனர் அல்லாதோர் வாழும் பகுதியில் அனைத்து சாதியினரும் பரவலாகக் குடியேறியுள்ளனர்.

பொருளாதார மற்றும் உறவுமுறைத் தொடர்புகள் மூலம் வெளி ஊர்களிலிருந்து வந்து குடியேறிய மக்களும் பலர் உள்ளனர். இதற்கு இப்பகுதியின் நீர் மற்றும் நில வளமே காரணமாகும். இக்கிராமப் பகுதியானது நஞ்செய் நிலப் பகுதியால் சூழப்பட்டுள்ளதால் கிராம விரிவாக்கத்துக்கான வசதிகள் மிகவும் குறைவாகும். புதிதாக குடியேறுகிறவர்கள் பெரும்பாலும் சாலை ஓரம், ஆத்துப்புறம்போக்கு மற்றும் கோயில் நிலம் ஆகியவற்றில் வீடு கட்டுகின்றனர்.

இப்பகுதியின் பாரம்பரிய அமைப்பு மற்றும் கிராமத்தினுள் காணப்படும் தொடர்புகளைப் பார்க்கும்போது நான்கு தெளிவான தெருக்கள் காணப்படுகின்றன. (1) சிவன்

கோவில் தெரு (2) குடியானவர் தெரு (3) பள்ளர் தெரு (4) பறையர் தெரு, இத்தெருக்கள் நான்கும் தஞ்சை-நாகப்பட்டினம் சாலையின் ஓரத்தில் இல்லாமல் சற்று உள்ளாக காணப்படுகிறது. ஆனால் தெளிவான மண் ரோடுகளால் இணைக்கப்பட்டுள்ளன. வள்ளி நகர், எம். ஜி. ஆர் நகர், மற்றும் சாலை ஓரத்தில் காணப்படும் பெரும்பாலான வீடுகள் பிற்காலத்தில் கட்டப் பட்டவையாகும்.

**வீடுகளின் தன்மை:**

குடும்ப பொருளாதார நிலையைப் பொறுத்து வீடுகளின் தன்மையும் காணப்படுகின்றது. பெரும் விவசாயிகள் ஓட்டுக் கூரையும் நான்கு, ஐந்து அறைகளுடைய ஓட்டு வீடுகள் கட்டியுள்ளனர். அதோடு வியாபாரத்தில் ஈடுபடும் அல்லது வெளிநாடுகளில் வேலைபார்க்கும் வசதி படைத்த ஒருசில முகமதியக் குடும்பத்தினர் ஓட்டுவீடுகளும் கட்டியுள்ளனர். குருக்கள், கள்ளர், முகமதியர், பிள்ளை ஆகியோரின் வீடுகளின் தன்மையைப் பார்க்கும் போது சாதி அடிப்படையிலும், சில வேறுபாடுகள் இருப்பதைக் காணமுடிகிறது. விவசாயக் கூலிகளாகிய அரிசனர்கள் பெரும்பாலும் கூரை வீடுகளிலும், குடிசைகளிலுமே வாழ்ந்து வருகின்றனர். கிறித்துவ பறையர்கள் வாழும் தெருவில் இரண்டு வீடுகளாகும். இவர்கள் தங்கள் வீடுகளைத்தவிர அனைத்து வீடுகளும் ஓட்டு வீடுகளாகும் பாதிரியாரின் உதவியோடு அரசு மற்றும் வங்கியிலிருந்து கடன் உதவி பெற்று ஓட்டு வீடு கட்டியுள்ளார்கள். இதேப் போன்று எம்.ஜி.ஆர் நகரில் வாழும் அரிசனர்களுக்கு அரசு வீட்டுவசதி திட்டத்தின்கீழ் சுமார் 20 ஓட்டு வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டுள்ளது. இவைகளும் ஒரு அறை உடைய வீடுகளாகும். பெரும்பான்மையான விவசாயக்கூலிகளும் ஒரு அறை வீட்டிலேயே வாழ்ந்து வருகின்றனர். பெரும் நிலச்சுவாந் தார்களின் வீடுகளில் சிலவற்றில் இரண்டு அல்லது மூன்று குடும்பத்தினர் (சகோதரர்கள்) ஒரே வீட்டில் வாழ்ந்து வருகின்றனர். பல வீடுகளில் மின்சார வசதி உள்ளது. ஆனால் அரிசனர்களின் வீடுகளில் ஒரு வீட்டில் மட்டுமே மின்சார வசதி

உள்ளது. குழாய் கிணறுகள் மற்றும் குழாய்கள் மூலம் கிராமத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் தண்ணீர் வசதி செய்து தரத்பட்டுள்ளது.

## சமூக அமைப்பு (SOCIAL STRUCTURE)

குடும்பம், கால்வழி (Lineage), சாதி, மதம், அரசியல் மற்றும் பொருளாதார அமைப்புகள் இவற்றிற்கிடையிலான தொடர்புகள் ஆகியவை கிராம சமூக அமைப்பின் முக்கிய பகுதிகளாக அமைகின்றன. இவைதான் தனி நபர்கள் மற்றும் வெவ்வேறு பிரிவுகளுக்கிடையிலான சமூகத் தொடர்புகளுக்கு அடிப்படை காரணமாகக் காணப்படுகின்றது. இதில் உறவு முறை அமைப்பும் மிக முக்கிய இடத்தை வகிக்கிறது:

## சாதி அமைப்பு:

தமிழக கிராம சமூக அமைப்பில் சாதி அமைப்பு மிக முக்கிய இடத்தை வகிக்கிறது. சாதி அமைப்பானது எவ்வாறு இயங்குகிறது. என்பதற்கு கிராமங்களில் காணப்படும் பாரம் பரிய மற்றும் தற்போதைய அரசியல் அமைப்புகள் சான்றாகக் காணப்படுகின்றன. கிராமங்களில் ஏற்படும் அரசியல் பிரிவுகள் பெரும்பாலும் சாதியை மையமாகக் கொண்டவையாகும். தமிழகத்தின் பல பாரம்பரிய கிராமங்களில் பெரும்நிலச் சுவாந்தார்கள் அல்லது பண வசதி படைத்தவர்களிடையே அரசியல் செல்வாக்கு வலுவிழந்து சாதி அடிப்படையிலான அரசியல் செல்வாக்கு உருவாகின்றதைக் காணலாம். அதாவது பொருளாதார அடிப்படையில் காணப்பட்ட அரசியல் செல்வாக்கு சாதி அடிப்படையில் மாறிவருகிறது. குறிப்பாக பஞ்சாயத்து தேர்தல்களில் இதனைத் தெளிவாகக் காணலாம். பொதுவாக சாதிப் பிரிவுகள் ஒன்றை ஒன்று சார்ந்து வாழ்பவையாகும். சில சாதிகளுக்கென்று குறிப்பிட்ட வேலைகள் உள்ளன. சில சமூகச் சூழல்களில் சாதி அங்கத்தினர்களுக்கிடையேயும் ஏற்றத்தாழ்வுகள் காணப்படுகின்றன.

## கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் சாதி அமைப்பு:

இது பல சாதி மக்கள் வாழும் பகுதியாகும். குருக்கள், பிராமணர், வெள்ளாளர், செட்டியார், கோனார், தேவர், கள்ளர், அகமுடையார், ஆசாரி, நாடார், முகமதியர், வண்ணான், நாவிதர், பள்ளர், பறையர் ஆகிய 15 முக்கிய சாதிகளைச் சேர்ந்தவர்கள் வாழ்ந்து வருகின்றனர். இதில் வெள்ளாளர்களிடையே சோழிய வெள்ளாளர், துருவ வெள்ளாளர், இசை வெள்ளாளர் போன்ற பிரிவுகளும், பறையர்களில் கிறித்தவ பறையர். இந்து பறையர் போன்ற பிரிவுகளும் காணப்படுகின்றன. பணிவிடை சாதியினரில் குயவர்கள் இங்கு இல்லை. இப்பகுதியில் சாதிகளை மூன்று முக்கிய பிரிவுகளாகப் பிரிக்கலாம். (1) பிராமணர் (2) அரிசனர் (3) அரிசனர் அல்லாத பிற சாதியினர். இங்கு வாழும் சாதியினரை மொழி அடிப்படையில் பிரிக்க இயலாத நிலை காணப்படுகிறது. காரணம் பிராமணர்களில் தெலுங்கு பேசும் ஒரு குடும்பத்தினரையும் முகமதியர்களில் உருது பேசும் ஒரு குடும்பத்தினரையும் தவிர வேறு அனைத்து மக்களும் தமிழ் மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களாகும்.

### பிராமணர்

இப்பகுதியில் வாழும் பிராமணர்களிடையே குருக்கள் அய்யர் மற்றும் தெலுங்கு பிராமணர் ஆகிய மூன்று பிரிவுகள் காணப்படுகின்றன. அதோடு குருக்கள் பிரிவைச் சேர்ந்த ஒரு பெண்ணை மணந்துகொண்ட கிராம சேவகராக வேலைப் பார்க்கும் சோதிடரின் குடும்பமும் காணப்படுகிறது. இங்கு வாழும் குருக்கள் பிரிவினர் பூர்வீகமாக இங்கு வாழ்ந்துவரும் அர்ச்சகர்களாகும். இங்கு காணப்படும் மிகப்பழமையான சிவன் கோவிலுக்குச் சொந்தமான நிலத்தில் சில பகுதிகள் இவர்கள் வசம் உள்ளன. ஒரு குடும்பத்தினரைத் தவிர ஒனையோர் கல்வியில் மிகவும் பின்தங்கிய நிலையில் காணப்

படுகின்றனர். இவர்கள் அனைவரும் லோகித கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள். சிவாச்சாரியார் என்ற குடும்ப வகையறா பெயரை உடையவர்கள், தாய்மொழி தமிழ். இங்கு வாழும் இரண்டு அய்யர் குடும்பத்தினரும் தெலுங்குமொழி பேசும் ஒரு பிராமண குடும்பத்தினரும் சுமார் 20 அல்லது 25 வருடங்களுக்கு முன் இங்கு வந்து குடியேறியவர்களாகும்.

**அரிசனர்**

இப்பகுதியின் விவசாய உற்பத்திக்கு முக்கிய காரணமாக இருப்பவர்கள் அரிசனர்களாகும். சுமார் 90 விழுக்காட்டுக்கும் அதிகமானோர் விவசாயக்கூலிகளாகும். இவர்களிடையே பள்ளர், பறையர் என்ற முக்கிய பிரிவு காணப்படுகிறது. பறையர்களிடையே இந்து பறையர், கிறித்துவ பறையர் என்ற பிரிவும் காணப்படுகிறது. பறையர்கள் இறந்த மாட்டை எடுத்துச்செல்லுதல், தப்புக் கொட்டுதல், மாட்டுக்கறி சாப்பிடுதல் போன்ற இழிவாகக் கருதப்படும் செயல்களைச் செய்து வருவதால் பள்ளர்களைவிட தாழ்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். பூர்வீகமாக இங்கு வாழ்ந்து வரும் பள்ளர்களில் ஒரு சிலரைத்தவிர அனைத்து அரிசனர்களும் நிலமற்ற விவசாயிகளாகும். கிராமத்தில் பொதுவாகப் பணிபுரியும் வண்ணான், நாவிதர் அரிசனர்களுக்கு பணியுரிவதில்லை. இவர்களுக்கென்று தனி வண்ணார் நாவிதர்கள் காணப்படுகின்றனர். அதேப் போன்று இவர்களுக்கென்று தனி பூசாரிகளும் காணப்படுகின்றனர். பூர்வீகமாக இங்கு வாழ்ந்து வரும் பள்ளர்களுக்கென்று அவர்கள் தெருவில் தனியாக கோயில் காணப்படுகிறது, ஆனால் அதில் சிலைகள் ஒன்றும் இல்லை, வழிபடுவதும் இல்லை. அரிசனர்கள் பிராமணர் அல்லாத பிற சாதி மக்களுக்கும் சொந்தமான காத்தாயி அம்மன் கோயிலுக்குச் சென்று வழிபட்டு வருகின்றனர். இவர்கள் அய்யனார், நல்லப்பிறவி, வடக்கிமலையான், கருப்பு, ரெங்கநாதர் போன்ற பல தெய்வங்களை வழிபட்டு வருகின்றனர். கிறித்துவ பறையர்களுக்கு அங்கு தனியாக ஆலையம் கட்டப்படாததால் தஞ்சைக்கு சென்று வழிப்பட்டு வருகின்றனர்.

இப்பகுதியில் வாழும் அரிசனர்களுக்கிடையே குறிப்பாக கிறித்தவர் அல்லாதவர்களிடையே தந்தை பெரியாரின் போதனையின் தாக்கம் குறிப்பிடத்தக்க அளவு இருப்பதைக் காணலாம் அரிசனர்களில் பலர் கடவுள் இல்லை என்ற கருத்தை உடையவர்களாகவும், மதச்சடங்குகளில் கலந்து கொள்ளாதவர்களாகவும் இருப்பதையும் இதன் விளைவாக வாழ்க்கைச் சடங்குகளில் சில மாறுதல்கள் ஏற்பட்டிருப்பதையும் காணமுடிகிறது

**அரிசனர் அல்லாத பிற சாதியினர்:**

வெள்ளாளர், செட்டியார், அகமுடையார், கோனார், தேவர், கள்ளர்: ஆசாரி, நாடார், முகமதியர், வண்ணான் நாவிதர் ஆகியோர் இப்பிரிவில் காணப்படுகின்றனர். இதில் நாடார் மூன்று குடும்பத்தினர் மட்டுமே உள்ளனர். அவர்களும் பிற்காலத்தில் வந்து குடியேறியவர்களாகும். அரிசனர் அல்லாத பிறசாதியினரில் வண்ணான், நாவிதர், ஆசாரி அகிய சாதியினரைத் தவிர அனைத்து ஏனையோரின் முக்கிய தொழில் விவசாயமாகும். எனினும் முகமதியர். செட்டியார் ஆகியோரில் பலர் வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளனர். பூர்வீகமாக இங்கு வாழ்ந்து வரும் கள்ளர் சாதியினர் பெரும் நிலச்சுவாந்தார்களாகும். அவர்கள் கிராமப்பொருளாதாரம் மற்றும் அரசியலில் முக்கிய பங்கு வகிக்கின்றனர். வெள்ளாளர்கள் மிகச் சிறந்த விவசாயிகளாகும். அகமுடையார் சாதியினர் பாரம்பரிய விவசாயிகளாகக் காணப்படுகின்றனர். எனினும் கல்வி மற்றும் பொருளாதார நிலையில் பின்தங்கி காணப்படுகின்றனர் இவர்களின் நான்கு பேர் காத்தாயி அம்மன் கோயில் பூசாரிகளாக இருக்கின்றனர். முகமதியர்கள் பிற்காலத்தில் குடியேறியவர்களாகும். அவர்களில் சிலர் பொருளாதாரத்தில் நன்கு வளர்ச்சியடைந்துள்ளனர்.

இங்கு வாழும் ஆசாரி சாதியினரில் பெரும்பாலோர் கிறித்தவர்களாகும். இவர்களிடையே மரவேலை செய்பவர்கள், இரும்பு வேலை செய்பவர்கள், தங்கவேலை செய்பவர்கள்,

என்ற பிரிவுகள் காணப்படுகின்றன. இவர்கள் ஏனைய பிராமணர் அல்லாத சாதியினரை விட தங்களை உயர்ந்தவர்கள் என்று கருதுகின்றனர்.

வண்ணான் சாதியினர் அரிசனர் அல்லாதோருக்கு மட்டுமே பணிவிடை செய்வார்கள். இவர்கள் துணி சலவை செய்வது மட்டுமல்லாமல் திருமணத்தின் போது பந்தலில் துணி கட்டுதல் போன்ற முக்கிய சடங்குகளின் போது மக்கள் அமர்வதற்கு துணி விரித்தல் போன்ற வேலைகளையும் செய்கிறார்கள். இவர்களின் சடங்குகளில் பிராமண பூசாரிகள் கலந்துகொள் வதுண்டு. கிராம நாவிதர்களும் இவர்களுக்கு பணிவிடை செய்கிறார்கள்.

## சாதிகளுக்கிடையிலான ஏற்றத்தாழ்வு

சாதிப்பிரிவுகள் ஒவ்வொன்றும் தனியாகவே செயல்பட்டு வருகின்றன. ஆனால் அனைத்து சாதியினரும் கலந்து கொள்ளும் முக்கிய விழாக்களும் காணப்படுகின்றன. சாதி கட்டுப்பாடுகள் மற்றும் பண்பாட்டு அடிப்படையிலான எண்ணங்கள் அவர்களின் வாழ்க்கை முறையின் முக்கிய காரணங்களாகின்றன. தனிநபர்களுக்கிடையே அல்லது சமூக அளவிலான தொடர்புகளை நிர்ணயிப்பது பெரும்பாலும் சாதி ஏற்றத்தாழ்வுகளாகவே காணப்படுகின்றன. சமூக அமைப்பிலும் சாதி ஏற்றத்தாழ்வு முக்கிய பங்கு வகிக்கிறது.

சாதிகளுக்கிடையிலான ஏற்றத்தாழ்வுகளில் பல மாறுதல் கள் ஏற்பட்டுவருவது குறிப்பிடத்தக்கது சாதியைக் குறித்த பாரம்பரிய எண்ணங்களும் மதிப்பீடுகளும் மாறி வருகின்றன. சாதிப்பிரிவுகள் தனியாக செயல்படும் போக்கும் அதிகரித்து வருகின்றன. சான்றாக கோவிலூர் மேலமாகாணம் பகுதிகளில் சுமார் 8 அல்லது 10 வருடங்களுக்குமுன் வரை கன்னிப்பொங்கல் என்று எல்லாச் சாதியினரும் மாடுகளை

அலங்கரித்து பொதுஇடமாகக் காணப்பட்ட ஆத்துப்புறம் போக்கில் கொண்டுவிட்டு பறை அறைந்து கொண்டாடுவார்கள். ஆனால் தற்போது ஒவ்வொரு சாதியினரும் தனித்தனியாக தங்கள் தெருக்களில் ஒரு பகுதியில் அதாவது கோவிலின்முன் மாடுகளை விட்டு கன்னிப்பொங்கல் கொண்டாடுகின்றனர்.

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் மக்களை சாதி ஏற்றத்தாழ்வுகளின் அடிப்படையில் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் பிரிவில் பிராமணர்களாகிய குருக்கள், ஐயர், தெலுங்கு பிராமின் ஆகியோர் அடங்குவர். இரண்டாவது பிரிவில் வெள்ளாளர், அகமுடையார், செட்டியார் கள்ளர், போன்ற சாதியினரும் மூன்றாவது பிரிவில் பணிவிடை சாதியினரும் நான்காவது பிரிவில் அரிசனர்களும அடங்குவர்.

முதல்பிரிவைச் சேர்ந்தவர்களில் பெரும்பாலோர் அங்கு காணப்படும் சிவன்கோயிலில் அர்ச்சகர்களாகப் பணிப்புரிந்து வருகின்றனர். எனவே இவர்கள் புனிதமாக பணிபுரிபவர்களாகக் கருதப்படுகின்றனர். ஆனால் இவர்கள் கிராம பொருளாதாரம் மற்றும் அரசியலில் செல்வாக்கு அற்றவர்களாகவே காணப்படுகின்றனர். இரண்டாவது பிரிவில் உள்ளவர்களில் சாதி மற்றும் தொழில் அடிப்படையில் வெள்ளாளர் அகமுடையார், செட்டியார் ஆகியோர் சற்று உயர்வாகக் கருதப்பட்டாலும் பொருளாதார, அரசியல் ரீதியில் கள்ளர் சாதியினர் மேலோங்கிருப்பதைக் காணலாம் காரணம் இவர்கள் பெரும் நிலச்சுவாந்தார்களாக இருப்பதால் பிற மக்களோடுள்ள கொடுக்கல் வாங்கல் அதிகமாகக காணப்படுகிறது. அதோடு கள்ளர் சாதியைச் சேர்ந்த ஒருவர் சுமார் 20 வருடங்கள் பஞ்சாயத்து ஒன்றியத் தலைவராகவும் இருந்துள்ளார். கோவிலில் வழிப்பாட்டிலும் இவர்களுக்கு முதலிடம் கொடுக்கப் படுகிறது. முகமதியர்களில் சில குடும்பத்தினர் பொருளாதார வசதி படைத்தவர்களாகக் காணப்பட்டாலும் பிற சாதியினர் அவர்கள் வீட்டில் உண்பதில்லை.

மூன்றாவது பிரிவைச் சேர்ந்த வண்ணான், நாவிதர் ஆகியோர் அவர்களின் பணி அடிப்படையில் தாழ்வாகக் கருதப்படுகின்றனர், இவர்கள் பறையர் பள்ளர் ஆகியோரை விட உயர்வாகக் கருதப்படுகின்றனர். நான்காவது பிரிவில் உள்ள பள்ளர், பறையர் ஆகியோரில் பறையர் அவர்களின் தொழில் அடிப்படையில் தாழ்வாகக் கருதப்படுகின்றனர்.

சாதிகளுக்கிடையிலான ஏற்றத்தாழ்வுகளில் பல மாறுதல்கள் ஏற்பட்டுவருவது குறிப்பிடத்தக்கதாகும். பிராமணர் அல்லாதோர் வழிபட்டுவரும் காத்தாயியம்மன் கோயிலில் ஆடி மாதம் 28ம் தேதி அனைத்துச் சாதியினரும் வந்து வழிபடும் ஒருவிழா காணப்படுகிறது. சுமார் 10 வருடங்களுக்குமுன் வரையிலும் காத்தாயியம்மன் சிலை இருக்கும் இடத்தில் அரிசனர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. ஆனால் தற்போது குறிப்பிட்ட அந்த விழாவின் போது அரிசனர்களும் உள்ளே சென்று வழிபட அனுமதிக்கப்படுகின்றனர். மேலும் முற்காலத்தில் இப்பகுதியிலுள்ள டீ கடைகளில் பறையர்களுக்குத் தனியாகவும் பள்ளர்களுக்கு தனியாகவும் கண்ணாடி டம்ளர்கள் வைத்துள்ளார்கள். பின்னர் பறையர்களுக்கும் பள்ளர்களுக்கும் சேர்த்துக் கண்ணாடி டம்ளர்கள் வைத்துள்ளார்கள். சுமார் 8 வருடங்களாக அத்தகைய வேறுபாடு இல்லாமல் காணப்படுகிறது. இதுபோன்ற பல நிலைகளில் மாறுதல்களைக் காணமுடிகிறது;

**சாதிகளுக்குள் காணப்படும் உறவுகள்:-**

ஒரு சாதியின் அங்கத்தினர்கள் ஒவ்வொருவரும் பல்வேறு விதிமுறைகளின் மூலம் இணைக்கப்பட்டுள்ளார்கள். அதாவது உறவுமுறை மற்றும் திருமணம், வயது ஒற்றுமை, தனிநபர்களுக்கிடையிலான நட்புறவு, கடன்கொடுப்போர் வாங்குவோர் உழைப்பு ஒற்றுமை போன்ற பல ஒழுங்குகளால் இணைக்கப்பட்டுள்ளனர்.

இவற்றில் உறவுமுறை மற்றும் திருமண இணைப்புகள் ஒரு சாதி அங்கத்தினர்களுக்கிடையிலான உறவுகளில் மிக முக்கிய

பங்கு வகிக்கிறது. குறிப்பாகச் சடங்குகள் மற்றும் அரசியலில் அதிக ஆதிக்கம் செலுத்தும் இணைப்பாகக் காணப்படுகிறது. உறவுமுறை மற்றும் திருமணத்தொடர்புகள் அப்பகுதியில் வாழும் மக்களை அதே சாதியைச் சேர்ந்த சுற்றுப்புற கிராமங்களில் வாழும் மக்களோடும் நெருங்கிய தொடர்பை உருவாக்குகின்றன. எனவே உறவுமுறை மற்றும் திருமணத் தொடர்புகள் கிராமங்களுக்கிடையிலான அரசியல் மற்றும் பொருளாதார இணைப்புகளுக்கும் வழிவகுக்கின்றன. மேலும் ஊர் பற்றைவிட சாதிப்பற்றை அதிகம் வலியுறுத்துகிறது. ஒரு கிராமத்தை எடுத்துக்கொண்டால் எல்லாச்சாதியினரும் ஒற்றுமையாக இருப்பது மற்றும் அரிசனர்கள் முதல் அனைத்து சாதியினரும் சேர்ந்து திருவிழா நடத்துதல் போன்றவை கிராமம் என்பது வெவ்வேறு சாதியினர் ஒருவரையொருவர் சார்ந்து வாழும் ஒரு ஒருமம் என்பதை வெளிப்படுத்துகிறது. ஒரு சாதியில் உறவினர்கள் கலந்துகொள்ளும் ஒரு சடங்கை எடுத்துக்கொண்டால் பல்வேறு கிராமங்களில் வாழும் அச்சாதியைச்சேர்ந்த மக்களின் ஒற்றுமையைக் காட்டுகிறது. இங்கு உறவுமுறை மற்றும் திருமணத்தொடர்புகள் சமூகக் குழுக்களின் எல்லைகளைத் தாண்டிச்செல்வதைக் காணமுடிகிறது.

உறவுமுறையின் அம்சங்களை எடுத்துக்கொண்டால் அனைத்து சாதியினரும் ஒரேவிதமான உறவுமுறை அமைப்பை உடையவர்களாகவே காணப்படுகின்றனர். இப்பகுதியில் வாழும் மக்களிடையே பல கால்வழிப் பிரிவுகள் காணப்படுகின்றன.

இக்கிராமப்பகுதியில் மக்களின் சமூகவாழ்வில் நாட்டாமை அல்லது பஞ்சாயத்து முக்கிய இடத்தை வகிக்கிறது. தற்போதும் பறையர், பள்ளர் மற்றும் கள்ளர் ஆகிய சாதியினரிடம் நாட்டாமை நன்கு செயல்பட்டு வருகிறது பிற்காலத்தில் குடியேறியவர்களாகிய முகமதியர், நாடார், கோனார் ஆகியோரிடமும் பிராமணர்களிடமும் நாட்டாமை இல்லை. ஏனைய சாதியினரிடம் பெயரளவில் காணப்பட்டுவருகிறது. அரிசனர்களிடையே நாட்டாமையானது மதசம்மந்தமான விழாக்களை கவனிப்பது சாதி அங்கத்தினர்களுக்கிடையே பிரச்சனை ஏற்படும்போது

தீர்த்துவைத்தல் மட்டுமல்லாமல் திருமணம் நிச்சயித்தல் முக்கிய வாழ்க்கை சடங்குகளை நடத்துதல் ஆகியவற்றிலும் முக்கிய பங்கு வகிக்கிறது.

**சாதிகளுக்கிடையிலான உறவுகள்:-**

இந்திய சமுதாயத்தில் குறிப்பாகத் தமிழகத்தில் சாதி அமைப்பும் உணவுப்பழக்கமும் தொடர்புடையவை. ஒருவர் எத்தகைய உணவை சாப்பிடுகிறார் என்பது அவருடைய சாதி ஏற்றத்தாழ்வில் பிரதிபலிக்கும் சான்றாகக் கறி சாப்பிடுகிறவர்கள் சற்று இழிவாகவும் பன்றி அல்லது மாட்டுக்கறி சாப்பிடுகிறவர்கள் மிகவும் இழிவாகவும் கருதப்படுகின்றனர் இரண்டு சாதியினர் வேறுபாடின்றி ஒன்றாக உண்கிறார்கள் என்றால் அவர்கள் சாதி ஏற்றத்தாழ்வில் ஒரே நிலையில் உள்ளவர்கள் அல்லது சமமானவர்கள் என்பது பொருள் இரு சாதியைச் சேர்ந்தவர்கள் ஒருவரோடு ஒருவர் சேர்ந்து உண்பது அல்லது ஒருவர் வீட்டில் ஒருவர் சாப்பிடுவது தடைசெய்யப்பட்டிருந்தால் சாதி ஏற்றத்தாழ்வில் யார் உயர்ந்த சாதியினர் என்ற போட்டி இருப்பதைப் பிரதிபலிக்கிறது. இருவர் ஒன்றாக உண்பது தடை செய்யப்பட்டு ஒருவர் மட்டும் இன்னொருவர் வீட்டில் உண்பதாக இருந்தால் அவ்வாறு உண்பவர் தாழ்ந்த சாதியினர் என்பது பொருள். பாரம்பரிய தமிழகக் கிராமச் சமுதாயத்தை எடுத்துக்கொண்டால் ஒரு சாதியைச் சேர்ந்தவர் ஏனைய சாதி மக்களோடு எத்தகைய உறவுகள் கொள்ளலாம் என்பது தெளிவாக வரையறுக்கப்பட்டிருப்பதைக் காணலாம் ஆனால் சமுதாய நடத்தையானது உண்மையில் பல நிலைகளில் வேறுபடுகின்றன சான்றாகக் கோவிலூர் மேலமாகாணம் பகுதிகளில் வாழும் முகமதியர்களின் வீட்டில் தாழ்வாகக் கருதப்படும் அரிசனர்கள் உண்பதில்லை. ஆனால் தஞ்சாவூர் மாவட்டத்தைச் சேர்ந்த பண்டாரவாடை கிராமத்தில் அரிசனர்கள் முகமதியர்கள் வீட்டில் உண்ணும் பழக்கம் காணப்படுகிறது. கோவிலூர், மேலமாகாணம் பகுதியில் வாழும் முகமதியர்கள் அண்மையில் குடியேறியவர்களாகக் காணப்படுவதாலும்

அரிசனர்களோடு பாரம்பரிய பொருளாதார மற்றும் சமூக இணைப்புகள் இல்லாததாலும் அவர்கள் வீட்டில் அரிசனர்கள் உண்பதில்லை. இவ்வாறு சாதிகளுக்கிடையிலான உறவுகளில் பலகாரணக் கூறுகள் வேலை செய்வதைக் காணலாம். சாதிப்பிரிவில் முதல் பிரிவினராகிய பிராமணர்களுக்கு பொருளாதார மற்றும் அரசியல் ரீதியில் அதிக முக்கியத்துவம் இல்லாதிருந்தாலும் அவர்களின் தொழில் அடிப்படையில் அவர்கள் உயர்வாகக் கருதப்படுகின்றனர். இரண்டாவது பிரிவில் வேளாளர்கள் சிறந்த விவசாயிகள் என்ற அடிப்படையில் உயர்வாகக் கருதப்பட்டாலும் பொருளாதார அரசியல் நிலைகளில் அதிக முக்கியத்துவம் அற்றவர்களாகக் காணப்படுகின்றனர். சமூகப்பொருளாதார ரீதியில் ஆதிக்கம் செலுத்தும் கள்ளர் சாதியினர் உயர்வாகக் கருதப்படுகின்றனர். கோயில் வழிபாட்டில் முக்கியத்துவம், கீழ்சாதி மக்களின் சேவையை அதிகமாகப்பெறுதல் போன்ற பல நன்மைகளை அனுபவித்து வருகின்றனர். அண்மைக்காலம் வரையிலும் அரிசனர்கள் குறிப்பாக பறையர்கள் இவர்களின் விவசாய அடிமைகளாக காணப்பட்டனர். ஆனால் பூர்வீகமாக அப்பகுதியில் வாழ்ந்து வரும் பள்ளர் சாதியினர் கள்ளர் சாதியினரோடு அதிக தொடர்பு கொள்ளாமல் சற்று சுதந்திரமாக வாழ்ந்துவருவதைக் காணமுடிகிறது. இதற்கு அவர்களின் கல்வி மற்றும் பொருளாதாரம் முக்கிய காரணமாகும். இவ்வாறு அவர்கள் சற்று சுதந்திரமாக வாழ்வதால் பறையர் சாதியினரைவிட தாங்கள் உயர்ந்தவர்கள் என்றும் கருதுகின்றனர்.

சாதிகளுக்கிடையிலான உறவுகளில் பல மாறுதல்கள் ஏற்பட்டுவருவது குறிப்பிடத்தக்கதாகும். பொதுவாக ஒவ்வொரு சாதியினரும் சமூகப்பொருளாதார நிலைகளில் தனித்து இயங்க முற்படுவதைக் காணமுடிகிறது. சாதி அடிப்படையில் மக்கள் தொகையைப் பார்க்கும்போது பள்ளர் சாதியினரே அதிகமாகக் காணப்படுகின்றனர். கிராம அரசியலை எடுத்துக்கொண்டால் கள்ளர் சாதியினரிடமே காணப்படுகிறது. ஆனால் சென்ற பஞ்சாயத்து தேர்தலில் சுமார் 20 வருடங்கள் பஞ்சாயத்து

ஒன்றியத் தலைவராக இருந்த ஒருவரை எதிர்த்து நின்று பள்ளர் சாதியைச் சேர்ந்த ஒருவர் வெற்றி பெற்றுள்ளார். இங்கு பொருளாதார ஆதிக்கத்தின்கீழ் காணப்பட்ட அரசியல், சாதி மற்றும் மக்களின் எண்ணிக்கை அடிப்படையில் மாறுவதைக் காணமுடிகிறது.

மேலமாகாணம் பகுதியில் வாழும் கிறித்தவ பறையர்கள் தனியாக ஒரு தெருவில் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் பாரம்பரியமாக கள்ளர் சாதியினருக்கு விவசாய அடிமைகளாக வும் இழிவாகக் கருதப்படும் வேலைகளாகிய பிணம் தூக்குதல். பறை அறைதல், (தப்புக்கொட்டுதல்), இறந்த மாடுகளைத், தூக்கிச் செல்லுதல் போன்ற வேலைகளைச் செய்துவந்தனர் பிற்காலத்தில் இவ்வாறான வேலைகளைச் செய்வதில் அதிக விருப்பம் இல்லாதவர்களாகக் காணப்பட்டனர். இந்நிலையில் சுமார் எட்டு வருடங்களுக்குமுன் பொங்கல் விழாவின்போது கள்ளர் சாதியைச் சேர்ந்த நிலச்சுவாந்தாரின் வீட்டில் வேலை செய்துகொண்டிருந்த சுமார் 30 வயதுடைய பறையர் ஒருவரை சுமார் 18 வயதுடைய அந்நிலச்சுவாந்தாரின் மகன் அடித்து விட்டார். அடித்தவரின் தகப்பனாரிடம் புகார் செய்தபோது மகன் செய்ததில் தவறு இல்லை எனக் கூறிவிட்டார். ஏற்கெனவே அடிமைத்தொழில் செய்வதில் விருப்பம் இல்லா திருந்த கிறித்தவ பறையர்கள் ஆத்திரமுற்றனர். அன்று முதல் விவசாய அடிமைத்தொழில் மற்றும் இழிவாகக் கருதப்படும் வேலைகளைச் செய்வதில்லை என்று தீர்மானித்தனர். சுமார் மூன்று வருடங்களாக தொடர்ந்து இருதரத்தினருக்கும் இடையே குழப்பங்கள் நடந்து வந்தன. அப்போது கிறித்தவ பறையர்கள் அவர்களின் பாதிரியாரின் உதவியை நாடியுள்ளார் கள். அச்சமயம் இருந்த பாதிரியார் கூடுதல் அக்கரைக்காட்ட வில்லை. பறையர்கள் பல வழிகளில் துன்பப்பட்டாலும் அடிமை வேலைக்குச் செல்வதில்லை என்பதில் உறுதியாகவும் தெருவிலுள்ள அனைவரும் ஒற்றுமையாகவும் இருந்தனர். இரு தரத்தாரும் ரெவன்யு அதிகாரிகளுக்கும் காவல்துறை அதிகாரி களுக்கும் காவல்துறை அதிகாரிகளுக்கும் புகார் மனுக்கள்

அனுப்பியுள்ளார்கள். 1983-க்குப் பிறகு வந்த பாதிரிய: பறையர்களுக்குப் பெரும் ஆதரவாக இருந்துள்ளார். 1985-, அரசு அதிகாரிகளும் பாதிரியாரும் இடைப்பட்டு சமரசப்படுத்தியுள்ளார்கள்.

பின்னர் சுமார் மூன்று வருடங்களாக பறையர்கள் வெ. ஊர்களுக்குச் சென்று விவசாயக்கூலிகளாக வேலை பார்த்துள்ளார்கள். கள்ளர் சாதியினர் பறையர்களுக்கு வேலை கொடுக்காததோடு பிற ஊர்களிலும் அவர்களுக்கு வேலை கிடைக்காமலிருப்பதற்கான முயற்சிகள் எடுத்துள்ளனர் பறையர்களும் கள்ளர் சாதியினருக்கு எந்தவித வேலைகளுக்கும் அதாவது யாராவது இறந்தால் உறவினர்களுக்கு அறிவித்தல், பாடை கட்டுதல், பறை அறைதல், இறந்து போன மாட்டைத் தூக்கிச் செல்லுதல் போன்ற வேலைகளுக்குச் செல்லாதிருந்தார்கள். தற்போது கள்ளர் சாதியினர் இவர்களைக் கூலி வேலைகளுக்கு அழைத்து வருகிறார்கள். பறையர்கள் தற்போது விவசாயக்கூலி வேலை மட்டும் செய்து வருகிறார்கள். பாடை கட்டுதல், பறை அறைதல் போன்ற வேலைகளுக்கு கள்ளர் சாதியினர் வேறு ஊர் ஆட்களை வைத்துள்ளார்கள். இவ்வாறு சாதிகளுக்கிடையிலான உறவுகளில் பல மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. இத்தகைய பிரச்சனைக— ஏற்படும் போது உறவுமுறை அடிப்படையிலான ஒற்றுமைகளும் உதவிகளும் மிக முக்கிய இடத்தை வகிக்கிறது.

வண்ணான் சாதியினர் அரிசனர்களைத் தவிர வேறு அனைத்து சாதியினருக்கும் சேவை செய்கின்றனர். பாரம்பரியமாக இவர்களின் சேவைக்குப் பொருட்களாக (நெல், அரிசி முதலியவை) கூலி கொடுப்பது வழக்கம். அதோடு வாழ்க்கை சடங்குகளின்போது இவர்களின் சேவைக்காகப் பொருட்களும் பணமும் வழங்குவ... தற்போது புதிதாகக் குடியேறிய சில குடும்பத்தில் ...னின் சேவைக்கு உடனடியாகக் காசுகொடுக்கும் பழக்கமும் காணப்படுகிறது.

சாதிகளுக்கிடையிலான சமூக உறவுகளில் அரிசனர்கள் ஏனைய சாதியினரிடமிருந்து வேறுபடுகின்றனர். இவர்கள் ஏனைய சாதியினரோடு ஏற்றத்தாழ்வின்றி பழகவோ கொடுக்கல் வாங்கல் வைத்துக்கொள்ளவோ இயலாது. அரிசனர்களுக்குள்ளேயே பறையர்-பள்ளர்களுக்கிடையே ஏற்றத்தாழ்வுகள் காணப் படுகின்றன. பறையர் வீட்டில் பள்ளர்கள் உண்பதில்லை. இரு பிரிவினரும் தனித்தனியாக வாழ்ந்து வருகின்றனர். அரிசனர்கள் பிராமணர் அல்லாத எனைய சாதியினரின் திருமணம் போன்ற சடங்குகளுக்குத் தேவையான விறகு உடைத்தல் போன்ற பணிகளைச் செய்து வருகின்றனர். ஆனால் உண்ணும்போது அரிசனர்களுக்குத் தனியாகவே உணவு அளிப்பது வழக்கம். ஏனைய சாதியினரின் சடங்குகளில் அரிசனர்கள் தடையின்றி கலந்துகொள்ள இயலாது.

சாதிகளுக்கிடையிலான உறவுகளைப் பார்க்கும்போது சாதி ஏற்றத்தாழ்வில் சமநிலையில் உள்ள சாதியினருக்கிடையே மட்டுமே தடையின்றி கொடுக்கல் வாங்கல் நடைபெறுகிறது. சமூக உறவுகளில் அரிசனர்கள் ஏனைய சாதியினரோடு உறவு கொள்வது தங்களின் பயன்பாட்டிற்காகவேயாகும். பாரம்பரிய சாதிகளுக்கிடையிலான உறவுகளை எடுத்துக்கொண்டால் வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் மேல்சாதி மக்களின் தயவு தேவையாகக் காணப்பட்டுள்ளது. ஆனால் இந்நிலையில் பல மாறுதல்கள் ஏற்பட்டு வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

வெவ்வேறு சாதிகளுக்கிடையிலான உறவுகள் நில உடைமைகளைப் பொறுத்தும் வேறுபடுவதுண்டு பாரம்பரியத் தமிழகக் கிராமங்களை எடுத்துக் கொண்டால் பிராமணர், வெள்ளாளர் போன்ற சில குறிப்பிட்ட சாதியினரிடமே பெரும்பாலான நிலங்களும் காணப்பட்டன. ஏனைய சாதி மக்கள் இவர்களின் நிலங்களைக் குத்தகைக்கு அடிமைகளாகக் காணப்பட்டனர்

எனவே வெவ்வேறு சாதி மக்களிடையே ஒருவித இணைப்பு காணப்பட்டது. பிற்காலத்தில் உயர்சாதி மக்களில் பெரும் பாலானோர் நில உடைமைகளை இழந்தனர். இன்னும் பலர் நகர் புறங்களுக்கு இடம்பெயர்ந்தனர். ஏனைய சாதியினர் பலர் நில உடைமையாளர்களாயினர். இதன் விளைவாக சாதிகளுக் கிடையிலான உறவுகளில் ஏற்பட்டுவருகிற மாறுதல்களையும், ஏனைய சாதியினரைச் சார்ந்து வாழாமல் தனித்து இயங்க முற்படுவதையும் காணலாம்.

வெவ்வேறு சாதியினர் தனித்தனி பிரிவுகளாக வாழ்ந்து வந்தாலும் விவசாயம், மதச்சடங்குகள் ஆகியவற்றின்போது கிராம மக்கள் அனைவரும் ஒன்று என்கிற ஒருவித ஒருமைப் பாடும் காணப்படுகிறது.

# திருமணம்

உறவுமுறையில் அடிப்படையான இரண்டு கோட்பாடு களைக் காணலாம். ஒன்று திருமண உறவு கோட்பாடு (alliance theory) இன்னொன்று கால்வழி உறவு கோட்பாடு (descent theory). இவ்விரு கோட்பாடுகளும் சமூக அமைப்போடு தொடர்புடையதாகும். கால்வழி உறவு கோட்பாடானது சமூக அமைப்பில் மெய்யான உறவுகளின் முக்கிய கூறாகக் கருதப் படுகிறது. மண உறவு ஒரு குறிப்பிட்ட பிரிவின் உண்மையான அமைப்பை விளக்குவது என கூற இயலாது. இவ்விரு கோட்பாடு களும் உறவுமுறை ஆய்வோடு நெருங்கிய தொடர்புடையவை யாகும்.

திராவிட உறவுமுறையானது பல தனித்தன்மைகளை உடையதாகக் காணப்படுகிறது. அவற்றில் உறவினர்களை இரு பிரிவுகளாகப் பிரித்து ஒரு பிரிவினரோடு திருமணத் தொடர்பு கொள்வதும் இன்னொரு பிரிவினரோடு திருமணத்தொடர்பைத் தடை செய்வதும் மிக முக்கியமானதாகும். அதாவது தகப்பனின் சகோதரியின் பிள்ளைகள் மற்றும் தாயின் சகோதரனின் பிள்ளைகள் ஆகியோர் ஒரு உறவுமுறைப் பிரிவினராக வகைப் படுத்தப்பட்டு அவர்களோடு திருமணத் தொடர்பு கொள்ளு

கின்றனர். தகப்பனின் சகோதரனின் பிள்ளைகள், தாயின் சகோதரியின் பிள்ளைகள் மற்றும் சகோதர சகோதரிகள் ஆகியோர் ஒன்றாக வகைப்படுத்தப்பட்டு அவர்களோடு திருமணத் தொடர்பைத் தடைசெய்கின்றனர். அதோடு திராவிட மொழி பேசும் சுமார் 90 விழுக்காடு மக்களிடையே மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்துகொள்ளும் பழக்கமும் காணப்படுகிறது. இத்தகைய இருதலைமுறைகளுக்கிடையிலான திருமண முறையையும் உறவுமுறைச் சொற்கள் ஏற்றுக்கொள்வதைக் காணலாம். ஆனால் நெருங்கிய உறவினர்களிடையே திருமணத் தொடர்பு கொள்வதால் யார் இரத்த உறவினர் யார் மண உறவினர் என்ற பாகுபாட்டில் பல சிக்கல்கள் ஏற்படுகின்றன.

திருமணமானது தன் பங்காளிகளின் கட்டுப்பாட்டில் இருந்த ஒரு அனுபவமற்ற பெண்ணை அவளுடைய கணவனின் உறவினர்களின் கட்டுப்பாட்டிற்குள் ஒரு மனைவியாகவும் தாயாகவும் மாற்றுகிறது. திருமணத்தின் மூலம் ஒரு பெண் ஒரு குடும்பத்திலிருந்து இன்னொரு குடும்பத்திற்குச் செல்லும்போது அவளுடைய மண உறவினர்களுக்கு ஒரு புதிய உறவுமுறைப் பிரிவினரையும் எடுத்துச் செல்கிறாள். ஒரு பெண் மகளாக இருந்து மகள் மற்றும் மனைவி என்ற அந்தஸ்து மாற்றம் ஏற்படும்போது இரு பங்காளி அல்லது கால்வழிப் பிரிவினரிடையே ஒரு புதிய பாதையை உருவாக்குகிறாள்.

திருமண உரிமைகள் மூலம் ஒரு பெண்ணின், உடல், கருத்தரிப்பு மற்றும் உழைப்பு ஆகியவை ஒரு குடும்பத்திலிருந்து இன்னொரு குடும்பத்திற்கு ஒப்படைக்கப்படுகின்றன. ஒரு பெண் பிறந்து வளர்ந்த குடும்பத்திற்கு திருமணம் ஒரு பெரும் இழப்பாகும். இன்னொரு விதத்தில் பார்க்கும்போது மகளைத் திருமணம் செய்து கொடுக்கவேண்டும் என்ற கடமை நிறைவேறுவதோடு இன்னொரு குடும்பத்தோடும் சமுதாயத்தோடும் உறவு ஏற்படுகிறது. அத்தகைய இணைப்பு பெண்ணின் குடும்பத்தாரை சடங்காச்சார மற்றும் சமூக அடிப்படையில் ஆணின் குடும்பத்தைவிடச் சற்று தாழ்ந்த உறவு

நிலையில் அமைத்தாலும் சில சூழ்நிலைகளில் பயனுடையதாகக் காணப்படும் இணைப்பை ஏற்படுத்துகிறது. ஒரு பெண் கணவனின் வீட்டில் அக்குடும்பத்தினருக்குச் சமமாக இருப்பதோடு அவளுடைய பிறப்புக் குடும்பத்திலிருந்தும் முற்றிலுமாக விடுவிக்கப்படுவதில்லை. திருமணத்தின் மூலம் ஒரு மணப்பெண்ணின் சொந்த வீட்டிலிருந்து அவளுடைய மக உரிமை மற்றும் சகோதர இணைப்பு முற்றிலுமாக துண்டிக்கப்படுவதில்லை. ஒரு திருமணமான மகள் என்ற முறையில் அவளுடைய பெற்றோர் மற்றும் சகோதரர்கள் மீது மேலும் பல உரிமைகள் நிலைநாட்டப்படுகின்றன. அவளுடைய நல்வாழ்வுக்குச் சொந்த குடும்பத்தின் ஆதரவு எப்போதும் இருப்பதைக் காணலாம். அதோடு ஒரு பெண்ணின் வாழ்க்கையின் இறுதிச் சடங்குவரையிலும் அவளுடைய பிறப்புக் குடும்பத்தாரின் உரிமைகள் பல இருப்பதைக் காணலாம். இத்தகைய உரிமைகள் சிலவேளை குறுக்கீடுகளாகவும் தோன்றுவதுண்டு. இருப்பினும் ஒரு பெண்ணின் சகோதரர்கள் அப்பெண்ணின் பிள்ளைகளின் அன்பிற்குரிய பாதுகாவலர்களாகவும் பிள்ளைகளின் வாழ்க்கைச் சடங்குகளில் பல முக்கிய பங்குகளை வகிப்பவர்களாகவும் காணப்படுகின்றனர்.

தென்னிந்தியாவில் பரவலாகக் காணப்படும் சகோதரி மகள் திருமணமானது தலைமுறையை புறக்கணிக்கும் குறிப்பிட்ட ஆளும் வகுப்பினரிடம் காணப்பட்ட தன்மையா அல்லது ஏதாவது ஒரு மக்கள் பிரிவில் காணப்பட்டதா என்பதும் ஆய்வுக்குரியதாகும் காத்தலீன் காப் (1979) குறிப்பிடும்போது ஒப்பாய்வு மற்றும் சொற்களின் மீட்டுருவாக்கம் ஆகியவற்றினால் இத்தகைய பிரச்சனைக்கு தீர்வுகாணலாம் என குறிப்பிட்டுள்ளார். Jean Carter Lave (1966) சகோதரி மகள் திருமணத்தைக் குறித்து மூன்று முக்கிய கருத்துக்களைக் குறிப்பிட்டுள்ளார்

1. சகோதரி மகள் திருமணமானது பரவலாக உலகின் பல பகுதிகளிலும் பல மொழிக்குடும்பங்களைச் சேர்ந்த பல பிரிவுகளைச் சேர்ந்த மக்களிடம் காணப்படுகிறது.

2. சகோதரி மகள் திருமணமானது வரையறுக்கப்பட்ட விதிமுறைகளுக்குட்பட்டதாக இல்லை. எங்குமே மக்களாகத் தேர்ந்தெடுக்கும் ஒருவித மணமாகும்.

3. சகோதரிமகள் திருமணமானது எப்போதும் ஏனைய முன்னுரிமைத் திருமணங்களாகிய தாய்மாமன் மகள் திருமணம் மற்றும் தகப்பனின் சகோதரி மகள் திருமணம் ஆகியவற்றோடு இணைந்து அல்லது தொடர்புடையதாகக் காணப்படுகிறது.

சகோதரி மகள் திருமணத்தில் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. சில சமுதாயங்களில் அதிக முக்கியத்துவம் அளிக்கின்றன. ஆனால் சில சமுதாயங்களில் தாயின் சகோதரன் மகள் திருமணம் மற்றும் தகப்பனின் சகோதரியின் மகள் திருமணம் ஆகிய திருமணங்களுக்குக் கொடுக்கும் முக்கியத்துவம் சகோதரி மகள் திருமணத்துக்குக் கொடுப்பதில்லை. இன்னும் சில சமுதாயங்களில் சகோதரி மகளையும் சகோதரன் மகளையும் ஒன்றாகவே கருதி அவர்களோடு திருமணத் தொடர்பு கொள்ளாதிருப்பதையும் காணலாம். மேலும் Jean Carter Lave (1966) குறிப்பிடும்போது சகோதரி மகள் திருமணமானது மாமன் முறை திருமண (Cross - cousin rule) விதிமுறையின் மாற்று வடிவமாகத்தான் இருக்க வேண்டும் எனவும் குறிப்பிட்டுள்ளார் சகோதரி மகள் திருமணத்தில் மூத்த சகோதரியின் மகளையே திருமணம் செய்து கொள்ளுகின்றன. இளைய சகோதரியின் மகளைத் திருமணம் செய்துகொள்ளாததற்கு முக்கிய காரணம் வயது வேறுபாடாகும். சில வேளைகளில் இரண்டாவது அல்லது மூன்றாவது மணம் புரிபவர்கள் அவ்வாறு இளைய சகோதரி மகளைத் திருமணம் செய்திருப்பதையும் காண முடிகிறது.

இவ்வாறான திருமண முறைகள் அதாவது தகப்பனின் சகோதரியின் மகள் திருமணம், தாயின் சகோதரனின் மகள் திருமணம் மற்றும் சகோதரி மகள் திருமணம் ஆகியவை ஒரே

குடும்பத்தில் நடைபெறும்போது உறவுமுறைச் சொற்கள் மற்றும் மண உறவு இரத்த உறவு பாகுபாடு ஆகியவற்றில் பல சிக்கல்கள் எற்படுவதைக் காணலாம். இதனை ஒரு சில குடும்பங்களில் நடைபெற்றுள்ள திருமணங்களின் மூலம் விளக்க லாம். ஒரு குடும்பத்தில் நடைபெற்றுள்ள திருமணங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ள படத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.




படத்தில் 'கொடுக்கப்பட்டுள்ள உண்ணம் ஒருவரின் (ego's) இளைய சகோதரன் படத்தில் A என்று குறிப்பிடப்பட்டுள்ளது தன் மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்து கொள் ளுகிறார். அவருடைய (ego's) மூத்த மகன் (படத்தில் A1 என்று குறிப்பிடப்பட்டுள்ளது) தன் அத்தை மகள் என்ற நிலையில் தகப்பனின் மூத்த சம்கோதரியின் இளைய மகளைத்

(படத்தில் B1 என்று குறிப்பிடப்பட்டுள்ளது) திருமணம் செய்துள்ளார். இங்கு ஒரு நிலையில் B1 A1 -க்கு அத்தை மகளாகக் காணப்பட்டாலும் இன்னொரு நிலையில் தன் தகப்பனின் இளைய சகோதரனின் மனைவியின் தங்கை (சித்தி) யாகக் காணப்படுகிறாள்.

இன்னொரு குடும்பத்தில் நடைபெற்றுள்ள திருமணங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ள படத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது.




படத்தில் A என்று குறிப்பிடப்பட்டுள்ள நபர் (ஈகோ) தன் மூத்த சகோதரியின் இளைய மகளைத் திருமணம் செய்துள்ளார். படத்தில் A1 என்று குறிப்பிடப்பட்டுள்ள அவருடைய (ஈகோவின் மூத்த சகோதரனின் மகன் தன் அத்தை மகள் என்ற நிலையில் ஈகோவின் மூத்த சகோதரனின் மகன் தன் அத்தை மகள் என்ற

நிலையில் ஈகோவின் இன்னொரு சகோதரியின் மகளைத் (படத்தில் B1 என்று குறிப்பிடப்பட்டுள்ளது) திருமணம் செய்துள்ளார். இங்கு ஈகோவின் மூத்த சகோதரனின் மகனின் மனைவி ஒரு நிலையில் தன் மூத்த சகோதரியின் மகள் என்ற நிலையில் திருமணம் செய்து கொள்ளும் முறையாகவும் அவருடைய திருமணத்துக்குப்பின் மருமகளாகவும் காணப்படுகின்றாள். இவ்வாறு திருமணத்துக்குப்பின் மருமகளாகவும் காணப்படுகின்றாள். இவ்வாறு திருமணத்தின் மூலம் உறவுகளில் ஏற்படும் வேறுபாடுகளினால் உறவுமுறைச் சொற்களிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. சான்றாக ஈகோவின் மனைவி அவருடைய மூத்த சகோதரனின் மகனுக்கு அத்தை மகள் என்ற உறவில் காணப்பட்டவள். ஆனால் அவளைத்தன் தகப்பனின் இளைய சகோதரன் திருமணம் செய்து கொண்டதால் அவளைச் 'சித்தி' என்று குறிப்பிடுகிறாள். இவ்வாறு திருமணத்தின் மூலம் உறவு மற்றும் உறவுமுறைச் சொற்களில் ஏற்படும் மாறுதல்கள் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்ட விதிமுறைகளுக்குட் பட்டவை எனக் கூற இயலாது. இங்கு உறவுமுறை மற்றும் உறவுமுறைச் சொற்களின் விதிமுறைகளைத் தங்கள் வசதிக்கேற்றாற்போல் மாற்றி அமைத்துக் கொள்கிற ஒரு போக்கைக் காணமுடிகிறது. இத்தகைய போக்கு, பறையர், பள்ளர் போன்ற சாதியினரிடம் அதிகமாகக் காணப்படுவது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறான முரண்பாடுகள் சகோதரி மகள் திருமணம் மற்றும் தாயின் சகோதரன் மகள் திருமணம் தகப்பனின் சகோதரி மகள் திருமணம் ஆகிய மூன்றுவித திருமண முறைகளையும் கையாளும் சமுதாயத்தில் மட்டுமே ஏற்படுகின்றன. சகோதரியின் மகள் திருமணத்தைத் தடைசெய்து தாயின் சகோதரனின் மகள் திருமணம் மற்றும் தகப்பனின் சகோதரியின் மகள் திருமணம் ஆகியவற்றை மட்டும் கையாளும் சமுதாயங்களில் இத்தகைய முரண்பாடுகள் ஏற்படுவதில்லை இதன் அடிப்படையில் பார்க்கும்போது சகோதரிமகள் திருமண முறையானது பாரம்பரிய உறவுமுறை விதிமுறைகளுக்கு அப்பாற்பட்ட ஒன்று எனவும் கருதலாம்.

கேத்தலின் காப் (1979) தஞ்சாவூர் உறவுமுறை அமைப்பை விளக்கும்போது "பிராமணர்களைப்போல் அல்லாமல் கீழ் சாதியினர் தாயின் இளைய சகோதரியோ அல்லது ஒன்று விட்ட சகோதரியோ மணமகனைவிட வயதில் குறைவாக இருந்தால் திருமணம் செய்து கொள்ளும் முறையையும் ஆதரித்தனர்' என்று குறிப்பிட்டுள்ளார். திராவிட அமைப்பில் தாயின் இளைய சகோதரியைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம்' இருந்ததாக எந்தவித ஆதாரமும் இல்லை. ஆனால் மேலே கொடுக்கப்பட்டுள்ள இருபடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது போன்ற திருமண இணைப்புகளின் மூலம் ஒருமுறையில் சித்தி யாகவும் இன்னொரு முறையில் திருமணம் செய்து கொள்ளும் முறையாகவும் இருப்பவர்களைத் திருமணம் செய்து கொள்கின் றனர். இத்தகைய திருமணங்களையே கேத்தலின் காப் தாயின் இளைய சகோதரியைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம் என குறிப்பிட்டிருக்கலாம்.

## வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுத்தல்

உலகின் எந்த சமுதாயத்தை எடுத்துக்கொண்டாலும் திருமணமுறையில் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுத்தல் ஒரு முக்கிய பகுதியாகும். சமூகவியல் ஆய்வுகளில் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுத்தல் குறித்த ஆய்வுகள் ஏராளம் உள்ளன. புதிய தலைமுறையினர் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும் முறையை அவர்களின் பண்பாட்டு எதிர்பார்ப் புகளோடு தொடர்புபடுத்தி ஆராய வேண்டும். பாரம்பரிய குடும்ப அமைப்பு ஒரு தனி நபரை அவருடைய விருப்பப்படி வாழ்க்கைத் துணையைத் தெரிந்துக்கொள்ள அனுமதிக்காது. ஒருவருக்கு நல்ல வசதி படைத்த ஒரு மனைவியைத் தேர்ந் தெடுப்பதில் அவருடைய பெற்றோர்கள் அல்லது உறவினர்களும் நண்பர்களும் முக்கிய பங்கு வகிக்கின்றனர். திருமணம் மற்றும் உடலுறவு குடும்பத்தை நிலைபேறாக்கம் செய்யும் ஒரு முறை யாகவும் பொருளாதார விடுதலைக்கு அதாவது தனி சொத்து டைமைக்கு ஒரு கருவியாகவும் காணப்படுகிறது. ஒரு பெண்ணின்

திறமைக்கு அப்பாற்பட்டு அவளை ஒருவர் தேர்ந்தெடுப்பதற்கு முக்கியக் காரணமாக இருப்பது அவளுடைய குடும்பப் பின்னணியாகும். திருமணம் இரு நபர்களைவிட இரு குடும்பங்களுக்கிடையிலான தொடர்பாக இருப்பதால் திருமணத்தில் குடும்பம் முக்கிய இடத்தை வகிக்கிறது.

திருமணம் பெற்றோரால் நிச்சயிக்கப்படுவது என்பதை ஏற்றுக்கொள்வதற்குப் பதில் தாங்களாகவே தங்கள் வாழ்க்கைத் துணையைத் தெரிந்துகொள்ளும் போக்கு இளைஞர்களிடையே காணப்படுவதுண்டு. திருமணத்துக்கு முன் பெற்றோரின் அறிவுக்கு எட்டாமல் உடலுறவு கொள்ளுதலும் கூட நடைபெறுவதுண்டு. அவ்வாறு உடலுறவு கொள்ளுபவர்கள் எல்லோரும் திருமணம் செய்துகொள்வதில்லை. இவ்வாறு செய்வது சில மேற்கு நைய்ஜீரியச் சமுதாயங்களில் ஒருவரின் வாழ்க்கைத் துணையைத் தெரிந்துகொள்வதில் ஒரு படியாகக் காணப்படுகிறது. இவ்வாறு அவர்கள் சந்திப்பதும் தொடர்பு கொள்வதும் பெரும்பாலும் அவர்களின் சொந்த ஊருக்குப் புறம்பாகவும் பெற்றோர் அல்லது உறவினர்களின் எந்தவித உதவியும் இல்லாமலும் நடைபெறுகிறது. குறிப்பாக, ஒன்றாக வேலைபார்க்கும் இடங்கள், கல்வி பயிலும் இடங்கள் ஆகிய இடங்களில் சந்திக்கும்போது மேற்கூறிய தொடர்புகள் ஏற்படுகின்றன. மேலும் சொந்த ஊருக்குப் புறம்பாகக் குறிப்பாக நகர்ப்புறங்களில் கல்வி கற்கும் அல்லது வேலைபார்க்கும் இளைஞர்கள் சினிமா, மற்றும் பல வைபவங்களில் கலந்து கொள்ளுவதால் கிராமச் சூழல் மற்றும் பெற்றோரின் கட்டுப்பாடு ஆகியவற்றிலிருந்து விடுதலை கிடைக்கிறது. இது வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதற்கு ஏதுவாய் அமைகிறது. பெற்றோரின் கட்டுப்பாட்டை மீறி வாழ்க்கைத் துணையைத் தெரிந்துகொள்வதற்கு முக்கியக் காரணம் வேலைபார்க்கும் இடமும் வேலையின் தன்மையுமாகும். இன்னும் படிப்பு முடிந்தபின் பல இளைஞர்கள்

வேலை காரணமாக நகர்புறங்களுக்குச் செல்லுகின்றனர். இதனால் பெற்றோரின் கட்டுபாட்டிலிருந்து விடுவிக்கப்படுகிறார்கள். இத்தகைய விடுதலை பெற்றோரின் தொழிலையே செய்து கொண்டு அவர்களின் கண்காணிப்பிலேயே வளரும் பாரம்பரிய சமுதாயத்தில் ஏற்படுவதில்லை. நகர்ப்புறங்களில் வேலைபார்க்கும்போது தங்கள்வீட்டிலிருந்து வெளியே வாழ்வது மட்டுமன்றி வேறு சாதி, மதத்தவரோடு தொடர்பு ஏற்படுகிறது. இவ்வாறு எற்படும் உறவுகள் திருமணத்தில் முடிவதுமுண்டு, சில உடலுறவோடு நின்றுவிடுவதுமுண்டு.

இன்னொரு முறை யாதெனில் பெற்றோர் அல்லது நெருங்கிய உறவினர் மற்றும் நண்பர்கள் மூலமாக வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுத்தல். இது நல்ல வசதிபடைத்த மனைவியைத் தேர்ந்தெடுக்க ஏதுவாக உள்ளது. இம்முறையானது வாழ்க்கைத் துணையைத் தெரிந்தெடுப்பதில் ஏற்படும் அனேக தொல்லைகளையும் நிரந்தரமின்மையையும் தவிர்க்கிறது. மேலும் இம்முறை திருமணவாழ்விற்கு உறுதியளிப்பதாகவும் அமைகிறது. காரணம் திருமணத்தை நடத்தி வைத்தவர்கள் அதன் வெற்றியான வாழ்வுக்கும் உதவியாக அல்லது பொறுப்புடையவர்களாகக் காணப்படுகின்றனர். எனவே அவர்களின் உதவி, ஆலோசனை ஆகியவை கிடைப்பதுண்டு.

வாழ்க்கைத் துணையைத் தெரிந்துகொள்வதில் இன்னொரு முறையானது வாழும் இடத்தின் உறவு அல்லது ஒப்புமை. ஒரு சமுதாய மக்கள் வாழும் பகுதியிலிருந்து தூரம் செல்லச் செல்ல திருமணங்களின் விழுக்காடு சீராகக் குறைவதைக் காணலாம். நம் பாரம்பரியக்கிராமச் சமுதாயத்தை எடுத்துக்கொண்டால் வாழ்க்கைத் துணையைத் தெரிந்துகொள்வதில் வாழுமிட உறவு அல்லது ஒப்புமை (residential propin/quity) ஒரு முக்கியக் கூறாகக் காணப்பட்டுள்ளது. அதாவது ஒரே ஊரில் வாழுதல், ஒரே சாதியைச் சேர்ந்தவர்களாக

இருத்தல் முதலியன. இது கிராமச் சமுதாயத்தில் மட்டுமன்றி நகர்புப்றங்களில்கூட காணப்படுகிறது சான்றாகப் பெற்றோர் நீண்ட நாட்களாக வேறு பட்டணங்களில் அல்லது வெளி நாடுகளில் வாழ்ந்து வந்தாலும் தங்கள் பிள்ளைகளின் வாழ்க்கைத் துணையைத் தேடும்போது தங்கள் சொந்த ஊர் அல்லது பட்டணத்தைத் தேடிச்செல்வதைக் காணலாம். வாழ்க்கைத் துணையாவது தன் சொந்த சாதி அல்லது பிரிவைச் சேர்ந்ததாக மட்டும் இருத்தல் போதாது. சொந்த பட்டணம் அல்லது சொந்த ஊராக இருத்தல், ஒரே மதமாக இருத்தல் போன்ற பல காரணக் கூறுகள் உள்ளன ஒரே ஊரைச் சேர்ந்தவர்களாக இருப்பதால் இருவரின் குணாதிசயங்கள் ஒன்றாக இருக்குமென்ற கருத்தும் காணப்படுகிறது. மேலும் இருவரின் பண்பாட்டு அடிப்படை யிலான எதிர்பார்ப்புகள், எண்ணங்கள் ஆகியவையும் சீராக அமைகின்றன. இதனால் திருமணத்துக்குப்பின் ஏற்படும் சில இடையூறுகளைத் தவிர்க்க முடிகிறது. அதாவது நிலவியல் (Geographical pattern) அடிப்படையில் மதம், அரசியல், பண்பாடு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றில் காணப்படும் வேறுபாடுகளைத் தவிக்க முடிகிறது. மேலும் சொந்த ஊர் அல்லது பட்டணத்தில் வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுப்பதால் இருவரின் பாரம்பரியத்தையும் நன்கு அறிந்துகொள்ள முடிகிறது. தென்னிந்திய சமுதாயத்தில் சுமார் 90 விழுக்காடு மக்களிடையே சகோதரி மகள் திருமணம் காணப்படுகிறது. அவ்வாறு சகோதரியின் மகளைத் திருமணம் செய்து கொள்வது விஞ்ஞான ரீதியில் அவ்வள்வு சிறந்தது அல்ல என்ற கருத்தும் படித்த மக்களிடையே காணப்படுகிறது. என்றாலும் அத்தகைய திருமணமானது திருமணத்துக்குப்பின் ஏற்படும் பல இடையூறுகளைத் தவிர்ப்பதாகவும் கருதுகின்றனர்.

துரிதமாக மாறிவரும் சமுதாயத்தில் ஒருவர் தன் திருமணத்தின்போது எத்தகைய வாழ்க்கைத் துணையை விரும்புகிறார் என்பது மிகவும் முக்கியமானதாகும். பொருளாதார நிலையில் பின்

தங்கிய ஒருவர் படித்து உயர்ந்த பதவியை வகிக்கும்போது அவருடைய விருப்பமும் பொருளாதார வசதிபடைத்த ஒருவரின் விருப்பமும் வேறுபடலாம். முதலில் திருமணத்தின்போது இரு நபர்களின் தலைமுறையினர்களுக்கிடையிலான அந்தஸ்து வேறுபாட்டை ஒப்பிட்டுப்பார்ப்பதன் மூலம் திருமண இசைவின் அளவைத் தெரிந்துகொள்ளலாம். அதாவது மேல் நிலையில் திருமணம் செய்து கொள்வது அல்லது கீழ்நிலையில் திருமணம் செய்து கொள்வது, அதில் செயல்படும் குறியீடுகள் எவை என்பதையும் தெரிந்துகொள்ளலாம்.

அடுத்து, திருமணத்தின்போது இருவரின் கல்வி மற்றும் வேலையின் அந்தஸ்துகளை ஒப்பிட்டுப்பார்ப்பதன் மூலம் அவர்களிடையே காணப்படும் ஒற்றுமையின் அளவை அறிந்து கொள்ளலாம். சிலர் தன் தகப்பனைவிட அந்தஸ்தில் உயர்ந்தவர்களின் பிள்ளைகளையும் சிலர் தன் தகப்பனைவிட அந்தஸ்தில் குறைந்தவர்களின் பிள்ளைகளையும் திருமணம் செய்து கொள்ளலாம். ஆனால் பெரும்பாலும் ஒரே அந்தஸ்து உடையவர்களுக்கிடையிலான திருமணங்கள் அதிகமாகக் காணப்படும்.

தானாக வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுக்கும் போது படிப்பு, வேலை ஆகியவற்றில் தன்னைப்போன்றவரைத் தேர்ந்தெடுக்கக் கூடும். அதாவது, பல்கலைக்கழகப் பட்டம் பெற்ற ஒரு பெண் அவளைப்போன்ற படிப்புடைய ஒருவரை விரும்பலாம். பொதுவாகப் பெண்கள் தங்களைவிடக் கூடுதல் படித்த கணவனை விரும்புவது வழக்கம்.

தமிழகச் சமுதாயங்களில் தன்னைவிடப் படிப்பு அல்லது பதவியில் உயர்ந்த நிலையில் இருக்கும் பெண்ணைத் திருமணம் செய்வதைத் தவிர்க்கும் எண்ணம் ஆண்களிடையே காணப்படுகிறது.

படித்த ஒருவர் கல்வி அறிவற்ற ஒரு பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள விரும்புவதில்லை. தற்போது தன்னைவிடக் குறைவாகப் படித்த அல்லது பொருளாதாரத்தில் தன்னைவிட வசதி குறைந்த பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளும் நிலையிலிருந்து தனக்குச் சமமாகப் படித்த பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளும் நிலை ஏற்பட்டிருப்பதையும் காணலாம். அதோடு ஒரு சிலர் தன்னைவிடக் கூடுதலாகப் படித்த பெண்களைத் திருமணம் செய்திருப்பதையும் காணலாம். கல்வி, பொருளாதார நிலைகளில் ஏற்படும் மாறுதல்களினால் பெண்களை அடிமைப்படுத்தி வைத்திருந்த ஒரு நிலை மாறி வருவதைக் காணலாம்.

திருமணத்தின் மூலம் இணைக்கப்பட்டுப் புதிதாக அமைக்கப்பட்ட குடும்பத்தின் ஒற்றுமை அல்லது இசைவை விவாதிக்கும்போது குடும்ப வாழ்க்கையின் ஒரு முக்கியப் பகுதியான மகப்பேறு குறித்தும் குறிப்பிட வேண்டும். இது திருமண இசைவில் முக்கியப் பங்கை வகிப்பதோடு பாரம்பரிய குடும்பங்களுக்கும் தற்போதைய குடும்பங்களுக்கும் இடையேயுள்ள வேறுபாடுகளையும் காட்டுகிறது

புதிய தலைமுறையினரின் திருமண வயது, உறவினர்களின் பரப்பு ஆகியவற்றிலும் பல மாறுதல்கள் ஏற்படுவதுண்டு பெண்களின் கல்வி மற்றும் வேலை அவர்களின் திருமண வயது தாமதிப்பதற்கு மிக முக்கிய காரணமாகின்றன. அதேப்போன்று ஆண்களும் படித்து ஒரு வேலையில் அமர்ந்தபின்னரே திருமணம் செய்ய வேண்டும் என்ற நிலை ஏற்படும்போது ஆண்களின் திருமண வயதும் பாரம்பரியச் சமுதாயத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது அதிகரிப்பதைக் காணலாம். மேலும் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் அல்லது சாதியில் பெண்கள் குறைவாகக் காணப்படும்போது பெண்களுக்கு இளம் வயதிலேயே திருமணமாகிவிடுவதையும் காணலாம்.

புதிய தலைமுறையினரிடையே திருமணத்தின்மூலம் இணைப்பப்பட்ட உறவினர்களின் பரப்பு மிக முக்கிய பகுதியாகும். பாரம்பரியச் சமுதாயத்தை எடுத்துக் கொண்டால் ஒரே ஊரிலும் உறவினர்கள் மத்தியிலும் திருமணத் தொடர்பு கொள்வதைக் காணலாம். ஆனால் புதிய தலைமுறையினரிடையே, குறிப்பாகப் படித்தவர்கள் மத்தியில் உறவினர்களிடையே திருமணத் தொடர்பு கொள்வது சிறந்ததல்ல என்னும் எண்ணம் காணப்படுவதுண்டு. இத்தகைய எண்ணத்திற்குப் பொருளாதாரம் மற்றும் வரதட்சணையும் முக்கிய காரணங்களாகக் காணப்படுகின்றன. அவ்வாறு புதிய தலைமுறையினர் உறவினர் அல்லாதவர்களோடு மற்றும் வெளி ஊர் மக்களோடு திருமணத்தொடர்பு கொள்ளும்போது உறவினர்களின் பரப்பும் அதிகரிப்பதைக் காணலாம். மேலும் கல்வி கற்ற மற்றும் அரசு வேலை பார்க்கும் ஆண்களுக்குத் தங்கள் பிள்ளைகளைத் திருமணம் செய்து கொடுத்து அவர்களைத் தங்கள் குடும்பத்தின் மருமகனாக்கிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் பெற்றோரிடையே காணப்படுவதுண்டு. தன்பிள்ளைகளுக்கு அவ்வாறான கணவனைத் தேடும்போது ஏராளம் பணம் மற்றும் நகை அளிக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. இது சமுதாயத்தில் வரதட்சணைமுறை வளர்வதற்கு முக்கியக் காரணமாகிறது.

இனி கோவிலூர், மேலமாகாணம் பகுதிகளில் பல்வேறு சாதி மக்களிடையே காணப்படும் திருமணமுறை, திருமண வயது, பரிசம், வரதட்சணை உறவினர்களின் பரப்பு ஆகியவற்றை விரிவாக ஆராயலாம்.

**திருமண முறை:**

கோவிலூர், மேலமாகாணம் பகுதியில் காணப்படும் அனைத்துச் சாதியினரிடையேயும் தாய் மாமன் மகள் திருமணம்

தகப்பனின் சகோதரியின் மகள் திருமணம் மற்றும் சகோதரிமகள் திருமணம் ஆகிய திருமண முறைகள் முன்னுரிமைத் திருமணங்களாகக் காணப்படுகின்றன. அதோடு முகமதியர்களிடையே தாயின் சகோதரியின் மகள் மற்றும் தகப்பனின் சகோதரனின் மகள் ஆகியோரையும் திருமணம் செய்து கொள்ளும் பழக்கமும் காணப்படுகிறது.

பிராமணர்களிடையே சிவாச்சாரியார் கோத்திரம், லோகித கோத்திரம், சரீபத்ச கோத்திரம், பாரத்து வாஜா கோத்திரம், கவுசிக கோத்திரம் போன்ற பல கோத்திரங்கள் காணப்படுகின்றன. இக்கோத்திரங்கள் அயல்மண முறை குழுக்களாகும். அதாவது ஒரு குழு அங்கத்தினர் இன்னொரு குழு அங்கத்தினரோடு மட்டும் திருமணத் தொடர்பு கொள்ள வேண்டும். இவர்களிடையே தாய்மாமன்மகள் திருமணம், தகப்பனின் சகோதரிமகன் திருமணம் மற்றும் சகோதரி மகள் திருமணம் ஆகிய மணமுறைகள் காணப்பட்டாலும் உறவினர் அல்லாதாரோடு ஏற்பட்டுள்ள திருமணத் தொடர்பு அதிகமாகக் காணப்படுகிறது. கோவிலூர் பகுதியில் வாழும் பிராமணர்களிடையே நடைபெற்றுள்ள 27 திருமணங்களில் 22 திருமணங்கள் உறவினர் அல்லாதோரோடு ஏற்பட்டுள்ளனவாகும். தாயின் சகோதரன் மகள் திருமணம் இரண்டும், தகப்பனின் சகோதரியின் மகள் திருமணம் இரண்டும் தூரத்து உறவினர்களோடுள்ள மணம் ஒன்றும் நடைபெற்றுள்ளன. ஆனால் சகோதரி மகன் மணம் ஒன்று கூட நடைபெறவில்லை. இதன் அடிப்படையில் பார்க்கும்போது கோவிலூர் பகுதியில் வாழும் பிராமணர்களிடையே சகோதரிமகள் மணம் அதன் முக்கியத்துவத்தை இழந்து வருவதையும் தாயின் சகோதரன் மகள் மணம் மற்றும் தகப்பனின் சகோதரிமகள் மணம் ஆகியவை மிகக் குறைவாக நடைமுறையில் இருந்து வருவதையும் காணமுடிகிறது. பெரும்பாலானவர்கள் உறவினர் அல்லாதரோடு திருமணத் தொடர்பு

கொள்வதையே விரும்புகிறன்றனர். பிராமணர்களிடையே மறுமணம் இல்லை. எவ்வளவு சிறுவயதில் கணவன் இறந்துவிட்டாலும் மரணம் வரை விதவையாகவே வாழ வேண்டும்.

அகமுடையார், வெள்ளாளர் போன்ற சாதியினரிடமும் தாய்மாமன் மகள் மணம், தகப்பனின் சகோதரிமகள் மணம் மற்றும் சகோதரிமகள் மணம் ஆகிய மணமுறைகள் காணப்படுகின்றன. இவர்களிடையே உறவினர் அல்லாதோர்களோடுள்ள திருமணத் தொடர்பு அதிகமாகக் காணப்பட்டாலும் சகோதரி மகள் மணத்துக்குச் சற்று முக்கியத்துவம் இருப்பதைக் காணமுடிகிறது இவர்களிடை யே நடைபெற்றுள்ள மொத்தம் 58 திருமணங்களில் 35 திருமணங்கள் உறவினர் அல்லாதவர்களோடு ஏற்பட்டுள்ள திருமணங்களாகும். 6 திருமணங்கள் சகோதரி மகள் மணமும், 8 திருமணங்கள் தாயின் சகோதரன் மகள் மணமும், 4 திருமணங்கள் தாரத்து உறவினர்களோடுள்ளதும், 2 திருமணங்கள் தகப்பனின் சகோதரி மகள் மணமுமாகும். அதோடு மூத்த சகோதரனின் மனைவியின் தங்கையைத் திருமணம் செய்துகொண்ட ஒரு நபரும் காணப்படுகிறார். இதன் அடிப்படையில் பார்க்கும்போது பிறத்தியார் திருமணத்துக்கு அடுத்ததாக சகோதரிமகள் திருமணத்துக்கும் அதற்கு அடுத்ததாக தாயின் சகோதரன் மகள் மணத்துக்கும் அதிக முக்கியத்துவம் அளிப்பதைக் காண முடிகிறது மொத்தம் 58 திருமணங்களில் தகப்பனின் சகோதரி மகள் திருமணம் இரண்டு மட்டுமே காணப்படுகிறது. இவர்களிடையே பெண்கள் மறுமணம் செய்து கொள்ளும் பழக்கம் இல்லை. ஆனால் ஒருவர் ஒரு பெண்ணை மறுமணம் செய்துள்ளார். அதாவது ஒருவர் ஒரு பெண் திருமணமாகி 6 மாதத்தில் தன் கணவனால் விட்டுச் செல்லப்பட்டாள். அக்கணவன் இறந்தபின் அவளை இன்னொருவர் திருமணம் செய்துள்ளார். இங்குச் சில சூழ்நிலைகளில் பாரம்பரியச் சட்டதிட்டங்கள் மீறப்படுவதைக் காணமுடிகிறது அகமுடை யார் சாதியில் முதல் மனைவிக்குக்

குழந்தைகள் இல்லாதிருந்தாலோ அல்லது முதல் மனைவி இறந்துவிட்டாலோ வேறு திருமணம் செய்து கொள்ளும் பழக்கம் காணப்படுகிறது. அவ்வாறு மறுமணம் செய்யும்போது முதல் மனைவியின் இளைய சகோதரியைத் திருமணம் செய்து கொள்வது வழக்கமாகக் காணப்படுகிறது. மேலும் இவர்களிடை யே உறவைவிட்டுவிடக்கூடாது, ஒற்றுமையாக இருக்கவேண்டும் என்ற எண்ணத்தோடுதான் சகோதரிமகள் மணம் மற்றும் ஏனைய உறவினர்களுக்கிடையேயான திருமண முறைகளை ஆதரித்து வருகின்றனர் என்ற கருத்தும் காணப்படுகிறது. அவ்வாறான திருமண முறையினால் திருமணத்துக்குப்பின் ஏற்படும் பல சிக்கல்களைத் தவிர்க்க முடிவதாகவும் கருதுகின்றனர். அவ்வாறு உறவினர்களிடையே நடைபெறும் திருமணத் தொடர்புகளில் பரிசம் அளித்தல், வரதட்சணை வாங்குதல் போன்றவற்றிலும் சற்று விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையோடு செயல் படுவதைக் காணமுடிகிறது.

கள்ளர் சாதியினரிடையேயும் தாயின் சகோதரன் மகள் மணம், தகப்பனின் சகோதரிமகள் மணம் மற்றும் சகோதரிமகள் மணம் ஆகிய திருமண முறைகள் காணப்படுகின்றன. அதோடு ஒரு பெண்ணின் மூத்த சகோதரியின் கணவனின் இளைய சகோதரனை மணந்து கொள்ளுதல், ஒருவர் தன் மூத்த சகோதரனின் மனைவியின் இளைய சகோதரியைத் திருமணம் செய்து கொள்ளுதல் ஆகிய திருமண முறைகளும் காணப்படுகின்றன. ஆனால் உறவினர் அல்லாதோரோடு ஏற்பட்டுள்ள திருமணத் தொடர்புகள் அதிகமாகக் காணப்படுகின்றன கள்ளர் சாதியினரிடம் வன்னியர், தெங்கிண்டார், கொட்டையண்டார், இடங்காபிறந்தார், நாட்டார், தஞ்சைராயர், காளிங்கராயர், குருக்குண்டார், கண்டியர், சங்கரதேவர், கொட்டையுண்டார், தெங்குண்டார், மங்குண்டார், தொண்டைமான் போன்ற பல பட்டப்பெயர்கள் காணப்படுகின்றன. இப்பட்டப் பெயர்கள் உடைய ஒவ்வொரு பிரிவும் புற மணக் குழுக்களாகும்.

அதாவது ஒரு பட்டப்பெயரை உடையவர் அதே பட்டப்பெயரை உடையவரோடு திருமணத் தொடர்பு கொள்ளக் கூடாது. வேறுபட்டத்தைச் சேர்ந்தவர்களோடுதான் திருமணத் தொடர்பு கொள்ள வேண்டும். ஆனால் கோவிலூர், மேலமாகாணப் பகுதிகளில் வாழும் கள்ளர்களிடையே ஒரே பட்டத்தைச் சேர்ந்தவர்கள் திருமணத் தொடர்பு கொண்டிருப்பதைக் காணமுடிகிறது. அதாவது அப்பகுதியில் பூர்வீகமாக வாழும் வன்னியர் பட்டத்தைச் சேர்ந்தவர்கள் பக்கத்து ஊர்களிலுள்ள வன்னியர் பட்டத்தைச் சேர்ந்தவர்களோடு திருமணத்தொடர்பு கொண்டுள்ளனர். இவ்வாறான திருமணத்திற்கு இரண்டுவிதமான காரணங்களைக் கூறுகின்றனர். ஒன்று முற்காலத்தில் குறிப்பிட்ட பட்டத்தில் தான் பெண் எடுக்க வேண்டும் அல்லது கொடுக்கவேண்டும் என்ற வரையறை கடுமையாகக் காணப்பட்டதால் பெண் கிடைப்பது அரிதாகக் காணப்பட்டது. எனவே பெண்களுக்கு இளம் வயதிலேயே திருமணமாகியது. அவ்வாறு பெண் கிடைப்பது அரிதாகக் காணப்பட்டதால் ஒரே பட்டத்தைச் சேர்ந்தவர்களிடையே திருமணத் தொடர்பு கொண்டனர். இன்னொரு காரணம் யாதெனில் கோவிலூர், மேலமாகாணம் மற்றும் அண்மையிலுள்ள ஊர்களாகிய குடிகாடு, புலவர்நத்தம், லாலாமுத்திரகோட்டை ஆகிய ஊர்களில் வாழ்ந்துவரும் கள்ளர் சாதியினர் சுமார் ஐந்து தலைமுறைகளுக்கு முன் காஞ்சிபுரத்திலிருந்து இடம்பெயர்ந்து வந்தவர்கள் என்று கூறுகின்றனர். அவ்வாறு இடம்பெயர்ந்து வந்தபோது இப்பகுதியில் பூர்வீகமாக வாழ்ந்துவந்தவர்கள் இவர்களோடு திருமணத் தொடர்பு கொள்ள விரும்பவில்லை. எனவே பாரம்பரிய ஒழுங்கின்படி திருமணத் தொடர்பு கொள்வதில் சிக்கல்கள் ஏற்பட்டன. அதன்விளைவாக ஒரே பட்டத்தைச் சேர்ந்தவர்களிடையே திருமணத் தொடர்பு, ஏற்பட்டன என்று கூறுகின்றனர். ஆனால் பிற்காலத்தில் பூர்வீகமாக இங்கு வாழ்ந்துவந்தவர்களோடு திருமணத் தொடர்பு ஏற்பட்டதால் ஒரே பட்டத்தைச் சேர்ந்தவர்களிடையிலான திருமணத்

தொடர்புகள் குறைவாகக் காணப்படுவதாகவும் கூறுகின்றனர். இங்கு, சமுதாயத்தில் மாறுதல்கள் மற்றும் மக்களின் இடப்பெயர்ச்சி ஏற்படும்போது சூழ்நிலைக்கேற்றாற் போன்று பாரம்பரிய உறவுமுறை விதிமுறைகள் மாற்றி அமைக்கப்படுவதைக் காணமுடிகிறது.

ஆசாரி சாதியினரிடையேயும் முன்னர்க் குறிப்பிட்டது போன்ற மூன்றுவிதமான திருமண முறைகளும் காணப்படுகின்றன. இவர்களிடையே நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும் போது பெரும்பாலானோர் உறவினர்களிடையே திருமணத் தொடர்பு கொண்டிருப்பதைக் காணமுடிகிறது.

கோவிலூர், மேலமாகாணம் பகுதியில் வாழும் பள்ளர் சாதியினரிடையேயும் தாயின் சகோதரன் மகள் மணம், தகப்பனின் சகோதரி மகள் மணம் மற்றும் சகோதரி மகள் மணம் ஆகிய மூன்றுவித மணமுறைகளும் காணப்படுகின்றன. இவர்களிடையே நடைபெற்றுள்ள 102 திருமணங்களில் 72 திருமணங்கள் உறவினர் அல்லாதாரோடு எற்பட்டுள்ள திருமணங்களாகும். பூர்விகமாக இப்பகுதியில் வாழும் பள்ளர்களிடையே சகோதரிமகள் மணம் ஒன்று கூட நடைபெறவில்லை பிற்காலத்தில் குடியேறியவர்களிடையேயும் ஒரு திருமணம் மட்டுமே சகோதரிமகள் மணமாகும். ஆக 102 திருமணங்களில் சகோதரிமகள் மணம் ஒன்று மட்டுமே காணப்படுகிறது. ஏனைய உறவினர்களோடுள்ள திருமணத் தொடர்பும் மிக குறைவாகவே காணப்படுகிறது. அதாவது தாயின் சகோதரன் மகள் மணம் 7ம் தகப்பனின் சகோதரிமகள் மணம் 12ம் உறவினர்களோடுள்ள திருமணம் 10ம் காணப்படுகின்றன. பூர்வீகமாக இப்பகுதியில் வாழும் பள்ளர்களிடையே சகோதரிமகள் மணம் முற்றிலுமாக இல்லாமல் இருப்பதற்கு அவர்களின் கல்வி மற்றும் பொருளாதாரம் முக்கிய காரணங்களாகும். இவர்கள் கல்வி மற்றும் பொருளாதார நிலையில் சற்று முன்னேறியவர்கள்.

கற்றவர்களிடையே வரதட்சணை முறை பரவிவருவதையும் காண முடிகிறது. அதோடு சகோதரி மகளைத் திருமணம் செய்வது அறிவியல் ரீதியில் நல்லதல்ல என்ற எண்ணமும் காணப்படுகிறது. அதோடு உறவினர்களிடையே திருமணத் தொடர்புகொள்ளும் போது கூடுதலாக வரதட்சணை வாங்க இயலாது என்ற எண்ணமும் காணப்படுகிறது. கல்வி அறிவற்ற, பொருளாதார நிலையிலும் பின் தங்கிய, பிற்காலத்தில் குடியேறிய பள்ளர் சாதியினரிடமும் சகோதரி மகள் திருமணம் இல்லாதிருப்பது (ஒன்றுதவிர) குறிப்பிடத்தக்கது ஆகும்.

மேலமாகாணம் பகுதியில் வாழும் கிறித்தவப் பறையர்களிடையே நடைபெற்றுள்ள 68 திருமணங்களில் சகோதரிமகள் மணம் ஒன்றுகூட இல்லை. இவற்றில் 45 திருமணங்கள் உறவினர்கள் அல்லாதாரோடு ஏற்பட்டுள்ளதாகும். தாயின் சகோதரன் மகள் மணம் 8-ம் தகப்பனின் சகோதரிமகள் மணம் 4-ம் தூரத்து உறவினர்களோடுள்ள மணம் 11-ம் காணப்படுகின்றன. இவர்களிடையே சகோதரி மகள் மணம் முற்றிலுமாக இல்லாமல் இருப்பதற்கு இவர்களின் மத ஒழுங்கு ஒரு முக்கிய காரணமாகக் காணப்படுகிறது. இவர்களின் மத ஒழுங்கின்படி சகோதரி மகள் மணம் தடைசெய்யப்பட்டுள்ளது. கிறித்தவப் பறையர்களில் ஒருவர் முகமதியப் பெண்ணைத் திருமணம் செய்துள்ளார். திருமணத்துக்குப்பின் அவர் முகமதியராக்கப்பட்டதோடு தான் வாழ்ந்துவந்த பகுதியிலிருந்தும் பிரிந்துசென்று முகமதியர்கள் வாழும் பகுதியில் குடும்பமாக வாழ்ந்துவருகிறார். அதோடு பெண் எடுத்து பெண் கொடுக்கும் முறையும் இவர்களிடையே காணப்படுகிறது. அதாவது ஒருவரின் சகோதரியை இன்னொருவருக்குத் திருமணம் செய்து கொடுத்துவிட்டு அவருடைய சகோதரியைத் தான் மணந்து கொள்வது. இவர்களிடையே ஒரே வேளையில் இரண்டு மனைவிகளை வைத்துக்கொள்ளும் பழக்கம் இல்லை. முதல் மனைவி இறந்துவிட்டால் அல்லது மணவிலக்கு செய்துகொண்டால் மட்டுமே இரண்டாவது மணம் செய்து கொள்ளுகின்றனர்.

மேலமாகாணம் பகுதியில் வாழ்ந்துவரும் இந்துப் பறையர்களிடையேயும் தாயின் சகோதரன் மகள் மணம், தகப்பனின் சகோதரிமகள் மணம் மற்றும் சகோதரிமகள் மணம் ஆகிய திருமணமுறைகள் காணப்படுகின்றன. அதோடு முதல் மனைவியின் தங்கையையும் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம் இவர்களிடையே காணப்படுகிறது. சான்றாக ஒருவர் முதல் மனைவி வாழ்ந்துவரும்போதே குடும்ப வேலைகளைக் கவனிப்பதற்காக முதல் மனைவியின் இளைய சகோதரியையும் திருமணம் செய்துள்ளார். இன்னொருவர் இரு சகோரிகளைத் திருமணம் செய்துள்ளார். இன்னொருவர் முதல் மனைவிக்குக் குழந்தைகள் இல்லாததால் மனைவியின் இளைய சகோதரியையும் திருமணம் செய்து கொண்டார் இன்னொருவர் முதலாவதாகத் தன் ஒன்று விட்ட சகோதரி மகளைத் திருமணம் செய்துள்ளார். முதல் மனைவி இறந்துவிட்டதால் இரண்டாவதாகத் தன் சொந்த சகோதரி மகளைத் திருமணம் செய்துள்ளார். இவர்களிடையே காணப்படும் இத்தகைய திருமண முறைக்கு இவர்களின் கல்வி அறிவின்மையும் பொருளாதாரமும் முக்கிய காரணங்களாகின்றன இவர்களிடையே நடைபெற்றுள்ள 38 திருமணங்களில் 28 திருமணங்கள் உறவினர் அல்லாதாரோடு ஏற்பட்டுள்ள திருமணங்களாகும். 2 தாயின் சகோதரன் மகள் மணமும் 4 தகப்பனின் சகோதரிமகள் மணமும் 3 சகோதரிமகள் மணமும் உறவினரோடுள்ள மணம் ஒன்றும் காணப்படுகின்றன.

கோவிலூர், மேலமாகாணம் பகுதியில் வாழும் பல்வேறு சாதியினர்களிடம் காணப்படும் திருமணமுறையைப் பார்க்கும்போது சாதி படிபடையிலான சில வேறுபாடுகளும் காணப்படுகின்றன பொதுவாகச் சகோதரிமகள் மணம் எல்லா சாதியினரிடமும் காணப்பட்டாலும் நடைமுறையில் மிகக்குறைவாகவே காணப்படுகிறது. வெள்ளாளர் மற்றும் அகமுடையார் சாதிகளில் மட்டுமே சற்றுக் கூடுதலான சகோதரிமகள் மணம் காணப்படுகின்றன.

இவ்வாறு திருமணமுறையில் காணப்படும் வேறுபாடுகளுக்கு மக்களின் கல்வி, பொருளாதாரம் மற்றும் மத ஒழுங்குகள் ஆகியவையும் முக்கியக் காரணங்களாகக் காணப்படுகின்றன. அனைத்துச் சாதிகளிலும் பெரும்பாலானோர் உறவினர் அல்லாதவர்களோடு திருமணத் தொடர்பு கொண்டிருப்பதும் ஒரு சில பிரிவினரிடம் சகோதரி மகள் மணம் முற்றிலுமாகத் தவிர்க்கப்பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். குறிப்பாகப் பறையர், பள்ளர் சாதியினரிடம் சகோதரிமகள் மணம் மிகக் குறைவாகக் காணப்படுவது இப்பகுதியின் ஒரு தனித்தன்மை எனவும் குறிப்பிடலாம்.

**திருமண வயது:**

திருமணவயதானது எல்லா சாதிமதத்தவரிடமும் ஒரே சீராகக் காணப்படுவதில்லை. இது பல சமூகப் பொருளாதாரக் காரணங்களினால் வேறுபடுவதுண்டு கோவிலூர்ப் பகுதியில் வாழ்ந்துவரும் பிராமணர்களிடையே (குறிப்பாகக் குருக்களிடையே) சுமார் 30 வருடங்களுக்கு முன் வரையிலும் குழந்தைத் திருமணம் காணப்பட்டுள்ளது. இவ்வாறான குழந்தைத் திருமணத்துக்கு அவர்கள் கூறும் காரணம் யாதெனில் திருமணமானவர்கள் மட்டும் கோவில்களில் பூஜை நடத்த தகுதியுடையவர்கள் என்ற ஒரு ஒழுங்கு அவர்களிடையே காணப்படுகிறது. அவ்வாறான தகுதியை இளம் வயதிலேயே பெறுவதற்காகக் குழந்தைத் திருமணம் நடைபெற்று வந்துள்ளது எனக் கூறுகின்றனர். கோவிலூர்ப் பகுதியில் வாழும் பிராமணர்களிடையே ஆண்களின் திருமண வயதுக்கும் பெண்களின் திருமணவயதுக்கும் இடையேயுள்ள வேறுபாடு ஓரளவு சீராகக் காணப்படுகிறது. (ஒருசில திருமணங்கள் தவிர) அதாவது ஆண்களைவிடப் பெண்களுக்கு மூன்று முதல் ஏழு வயதுவரையில் குறைவாகக் காணப்படுகிறது. மூன்று அல்லது நான்கு

தலைமுறைகளுக்கிடையிலான திருமண வயதை ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஆண்களின் திருமண வயதும் பெண்களின் திருமணவயதும் சற்று அதிகரித்துவருவதையும் காணமுடிகிறது

அகமுடையார் சாதியினரிடையேயும் பெரும்பாலான திருமணங்களில் ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையிலான திருமணவயது வேறுபாடு ஓரளவு சீராகக் காணப்படுகிறது. அதாவது மூன்று முதல் 10 வயதுவரை ஆண்களுக்கு அதிகமாகக் காணப்படுகிறது. இவர்களிடையே குழந்தை மணம் நடைபெற்றதாக எந்தவித ஆதாரமும் இல்லை. இவர்களில் நான்கு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பறையர், பள்ளர் சாதியினருக்குச் சொந்தமான காத்தாயியம்மன் கோயிலில் பூசாரிகளாக இருக்கிறார்கள். அவர்களிடையேயும் குழந்தை மணம் இல்லை. ஆண்கள் இரண்டாவது அல்லது மூன்றாவது தாரமாகத் திருமணம் செய்யும்போது ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையிலான திருமண வயது வேறுபாடு அதிகமாக இருப்பதைக் காண முடிகிறது. சான்றாக 50 வயதுடைய ஒருவர் நான்காவது தாரமாக 16 வயதுடைய பெண்ணைத் திருமணம் செய்துள்ளார். அகமுடையார் சாதியினரிடம் நடைபெற்றுள்ள திருமணங்களில் எந்தத் திருமணத்திலும் பெண்ணின் திருமண வயது ஆணின் திருமணவயதைவிட அதிகமாக இருந்ததில்லை.

ஆசாரி சாதியினரின் திருமணவயதைப் பார்க்கும் போது ஏனைய சாதியினரைவிட சற்று வேறுபடுவதைக் காணமுடிகிறது. அதாவது ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையே திருமண வயது வேறுபாடு ஒன்று முதல் 5 வயதுக்குள்ளாகவே காணப்படுகிறது. பெரும்பாலானோர் கிறித்தவர்களாகக் காணப்படுகிறார்கள். அவர்களின் மத ஒழுங்கின்படி முதல் மனைவி வாழ்ந்துவரும்போது இரண்டாவது திருமணம் செய்வது தடை செய்யப்பட்டுள்ளது. எனவே மறுமணம் செய்வதன் மூலம் திருமண வயது வேறுபாடு அதிகரிப்பதும் மிகக் குறைவாகவே காணப்படுகிறது.

கள்ளர் சாதியினரிடம் நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும்போது ஒரே வயதுடைய இருவர் திருமணம் செய்து உள்ளார்கள். அதே சமயம் கணவனுக்கும் மனைவிக்கும் 16 வயது வேறுபாடுடைய திருமணமும் நடைபெற்றுள்ளது. ஒரே வயதுடைய திருமணமானது பெண்ணின் தாயின் மூத்த சகோதரியின் வளர்ப்பு மகனைத் திருமணம் செய்யும் போது காணப்படுகிறது ஏனைய சாதியினரோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையிலான திருமண வயது வேறுபாடு சற்றுக் கூடுதலாகவே காணப்படுகிறது. அதோடு திருமண வயது வேறுபாடு ஒரே சீராக இல்லாதிருப்பதையும் காணமுடிகிறது. ஆனால் புதிய தலைமுறையினரில் திருமண வயதைப் பார்க்கும்போது ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையே அதிக வயது வேறுபாடு இல்லாதிருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

பள்ளர் சாதியினர்களிடையே நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும்போது ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையிலான திருமண வயது வேறுபாடு 2 வயது' முதல் 10 வயது வரை காணப்படுகிறது. ஆனால் மறுமணம் செய்யும்போது 15 அல்லது 20 வயதுவரை வேறுபாடு இருப்பதைக் காண முடிகிறது. இவர்களிடையே நடைபெற்றுள்ள 102 திருமணங்களில் எந்த ஒரு திருமணத்திலும் ஆணைவிடப் பெண்ணுக்கு வயது கூடுதலாக இருந்ததில்லை. இவர்களிடையே குழந்தைத் திருமணம் இருந்ததாக ஆதாரங்கள் இல்லை. ஆனால் இரண்டு அல்லது மூன்று தலைமுறைகளுக்கு முன் நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும்போது பல பெண்களுக்கு வயதுக்கு வருவதற்கு முன் திருமணம் நடைபெற்றுள்ளது. அதாவது 12,13,14 வயதுகளில் திருமணம் நடைபெற்றுள்ளது. சான்றாக அப்பகுதியில் வாழ்ந்துவரும் 65 வயதுடைய வேலு என்பவர் தன் 12-வது வயதில்

பத்து வயதுடைய பெண்ணைத் திருமணம் செய்துள்ளார். இவ்வாறு இளம் வயதில் திருமணமாவதற்கு அவர்கள் கூறும் காரணம் யாதெனில் முற்காலத்தில் பெண்களின் எண்ணிக்கை குறைவாக இருந்ததால் பெண்கள் கிடைப்பது அரிதாகக் காணப்பட்டது என்றும் அதனால் பெண்கள் வயதுக்கு வருவதற்கு முன்னரே திருமணம் செய்துகொண்டனர் என்றும் கூறுகின்றனர். இரண்டு அல்லது மூன்று தலைமுறைகளுக்கு முன் நடைபெற்றுள்ள அனைத்துத் திருமணங்களும் இளம்வயது திருமணங்களல்ல. 20 வயதில் திருமணமான பெண்களும் காணப்படுகிறார்கள். முற்காலத்தில் இவர்களிடையே பரிசம் கொடுத்துத் திருமணம் செய்யும் பழக்கம் காணப்பட்டுள்ளது. எனவே உடல்வலிமை மற்றும் அழகுடைய பெண்களுக்குக் கூடுதல் பரிசம் கொடுத்து இளம் வயதிலேயே திருமணம் செய்திருக்கலாம். இரண்டாவது பள்ளர் சாதியினரிடையே அனைவரும் அதாவது ஆண்களும் பெண்களும் விவசாயக் கூலிகளாகும். இளம் வயதில் திருமணம் செய்துகொள்வதால் மனைவியின் உழைப்பும் கணவனின் குடும்பத்தைத் தாங்குவதாகக் காணப்பட்டுள்ளது. அதோடு முற்காலத்தில் வயதுக்கு வந்த பெண்களை வீட்டில் வைத்திருப்பதையும் அவர்களைப் பாதுகாப்பதையும் ஒரு சுமையாகக் கருதினர். இவ்வாறான காரணங்களால் முற்காலத்தில் இளம் வயது திருமணம் நடைபெற்றிருக்கலாம். நான்கு தலைமுறைகளில் நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும்போது பெண்களில் திருமண வயது சீராக அதிகரித்துவருவதைக் காணமுடிகிறது. குறிப்பாகப் படித்தவர்களிடையே பெண்களின் திருமண வயதும் ஆண்களின் திருமண வயதும் அதிகரித்துவருகிறது இதற்கு முக்கியமான இரண்டு காரணங்களைக் கூறலாம் ஒன்று ஒரு சில குறிப்பிட்ட சாதியினரிடம் மட்டும் காணப்பட்ட வரதட்சனை முறையானது பள்ளர் சாதியினரிடமும் பரவிவருகிறது. இதனால் கூடுதல் வரதட்சனை கொடுக்க இயலாத நிலையில் பெண்களின் திருமணம் தாமதமாகிறது.

அதோடு பெற்றோரும் வரதட்சணை கொடுத்தாவது தங்கள் குடும்பத்திற்குப் படித்த ஒரு மருமகனைக் கொண்டு வருவதைப் பெருமையாகக் கருதுகின்றனர். இரண்டாவதாகப் படித்த ஆண்களிடையே தாங்களாகச் சம்பாதிக்கும் ஒரு நிலையை அடைந்தபின் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் காணப்படும்போதும் திருமணம் தாமதமாகிறது.

பறையர் சாதியில் கிறித்தவர்களிடையே நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும்போது திருமண வயதில் ஒருவிதச் சீரான தன்மையைக் காணமுடிகிறது. பெரும்பாலான பெண்களுக்கும் 18,19, 20 மற்றும் 21 வயதில் திருமணமாகியுள்ளது. 18 வயதுக்கு முன் திருமணம் நடைபெற்றுள்ள பெண்கள் மிகக் குறைவாகக் காணப்படுகின்றனர். அவ்வாறு 18 வயதுக்குமுன் திருமணம் நடைபெற்றுள்ள பெண்கள் முன்தலைமுறையைச் சேர்ந்தவர்களாவர். புதிய தலைமுறையினரிடையே எந்த ஒரு பெண்ணுக்கும் 18 வயதுக்குமுன் திருமணம் ஆகவில்லை. இதேப்போன்று ஆண்களின் திருமணவயதிலும் ஒருவிதச் சீரான தன்மையைக் காணமுடிகிறது. பெரும்பாலான ஆண்களுக்கும் 20 வயதுக்குமேல் 26 வயதுக்குள் திருமணமாகியிருப்பதைக் காணமுடிகிறது. திருமணவயதில் இதுபோன்ற சீரான தன்மை ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையிலான திருமண வயது வேறுபாட்டிலும் காணப்படுகிறது. இவ்வாறு திருமண வயதில் ஒருவிதச் சீரான தன்மை காணப்படுவதற்கு அவர்களின் மத ஒழுங்கு முக்கியக் காரணமாகக் காணப்படுகிறது. அதாவது திருமணம் நிச்சயிக்கும்போது தங்கள் மதப்போதகரை (Priest) கலந்து ஆலோசித்து நிச்சயம் செய்யும் பழக்கம் இவர்களிடையே காணப்படுகிறது. மதப் போதகர்கள் இளம் வயது திருமணத்தை ஊக்குவிப்பதில்லை. பெண்களுக்கு 18 வயதுக்குப்பிறகும் ஆண்களுக்கு 20 வயதுக்குப்பிறகும் திருமணம் செய்வதை மதப்போதகர்கள் ஆதரித்து வருகின்றனர். எனவே திருமண

## சாதிவாரியாக ஆண்களின் திருமண வயது

| சாதி பெயர் | மொத்த திருமணம் | வயது | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | 5-10 | 11-15 | 16-20 | 21-25 | 26-30 | 31-35 | 36-40 |
| பிராமணர் | [illegible] | - | 4 | 2 | 8 | 9 | 3 | 1 |
| வெள்ளாளர் | [illegible] | - | - | 5 | 10 | 11 | 1 | - |
| அகமுடையார் | [illegible] | - | - | 3 | 17 | 11 | 3 | - |
| செட்டியார் | [illegible] | - | - | 2 | 3 | 1 | - | - |
| கள்ளர் | 17 | - | - | 5 | 9 | 1 | 2 | - |
| தேவர் | 11 | - | 1 | 2 | 7 | 1 | - | - |
| ஆசாரி | 11 | - | - | 4 | 6 | 1 | - | - |
| கோனார் | 5 | - | - | 1 | 3 | 1 | - | - |
| நாடார் | 8 | - | - | 3 | 4 | 1 | - | - |
| வண்ணான் | 9 | - | - | 4 | 5 | - | - | - |
| நாவிதர் | 5 | - | - | 2 | 3 | - | - | - |
| பள்ளர் | 102 | - | 4 | 39 | 46 | 13 | - | - |
| பறையர் (அந்து) | 38 | - | - | 11 | 24 | 3 | - | - |
| பறையர் | 68 | - | 1 | 25 | 33 | 8 | 1 | - |

## சாதிவாரியாக பெண்களின் திருமண வயது

| சாதி பெயர் | மொத்த திருமணம் | வயது | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | 5-10 | 11-15 | 16-20 | 21-25 | 26-30 |
| பிராமணர் | 27 | 4 | 1 | 12 | 7 | 3 |
| வெள்ளாளர் | 27 | - | - | 19 | 7 | 1 |
| அகமுடையார் | 34 | - | - | 17 | 14 | 3 |
| செட்டியார் | 6 | - | - | 4 | 2 | - |
| கள்ளர் | 17 | - | 2 | 12 | 3 | - |
| தேவர் | 11 | - | 1 | 5 | 3 | 2 |
| ஆசாரி | 11 | - | 1 | 8 | 2 | - |
| கோனார் | 5 | - | - | 3 | 2 | - |
| நாடார் | 8 | - | 1 | 4 | 2 | 1 |
| வண்ணான் | 9 | - | 1 | 5 | 3 | - |
| நாவிதர் | 5 | - | - | 3 | 2 | - |
| பள்ளர் | 102 | 2 | 21 | 69 | 8 | 2 |
| பறையர் (அந்து) | 38 | - | 5 | 30 | 3 | - |
| பறையர் | 68 | - | 5 | 61 | 2 | - |

வயதில் ஒருவிதச் சீரான தன்மை ஏற்படுகிறது. மேலும் திருமணவயதில் தலைமுறைகளுக்கிடையிலான வேறுபாடும் குறிப்பிடத்தக்க அளவு இல்லாமல் காணப்படுகிறது. இதற்குப் புதிய தலைமுறையினரும் கல்வி அறிவற்ற விவசாயக் கூலிகளாகவே காணப்படுவதும் ஒரு காரணமாக உள்ளது. அதோடு திருமணத்தின் போது பரிசம் கொடுத்தல் மற்றும் வரதட்சணை வாங்குதல் போன்ற பழக்கம் முன் தலைமுறைகளிலும் புதிய தலைமுறையினரிடமும் மிகக் குறைவாகக் காணப்படுவதும் திருமண வயதில் அதிக வேறுபாடு இல்லாமல் இருப்பதற்கு முக்கியக் காரணமாகும். மேலும் இரண்டாவது அல்லது மூன்றாவது தாரமாகத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கமும் ஏனைய பிரிவினரோடு ஒப்பிட்டுப்பார்க்கும்போது மிகவும் குறைவாகவே காணப்படுகிறது. இதனால் கணவன் மனைவிக்கிடையே அதிக வயது வேறுபாடு காணப்படுவதில்லை. இங்குத் திருமணமுறை மற்றும் திருமண வயது ஆகியவற்றில் ஒருவித ஒழுங்கும் கட்டுப்பாடும் காணப்படுகிறது. இதற்கு அவர்களின் மத ஒழுங்கும் மதப் போதகர்களின் குறுக்கீடும் காரணமாக உள்ளது எனவும் குறிப்பிடலாம்.

மேலமாகாணம் பகுதியில் வாழும் இந்துப் பறையர்களிடையே நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும்போது பெரும்பாலான பெண்களுக்கும் 15 முதல் 20 வயதுக்குள் திருமணம் நடைபெற்றுள்ளது. ஆண்களுக்குப் பெரும்பாலும் 18 முதல் 25 வயதுக்குள் திருமணம் நடைபெற்றுள்ளது. இவர்களிடையே இரண்டு அல்லது மூன்று தலைமுறைகளுக்கு முன் நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும்போது திருமண வயது சற்றுக் கூடுதலாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இவர்களிடையே இரண்டாவது மற்றும் மூன்றாவது தாரமாகத் திருமணம் செய்துகொள்ளும் பழக்கம் அதிகமாகக் காணப்படுவதால் அவ்வாறான திருமணங்களில் ஆண்களுக்கும் பெண்களுக்குமிடையிலான வயது வேறுபாடு சற்று அதிகமாக இருப்பதைக் காணமுடிகிறது.

இவ்வாறு பல்வேறு சாதி மக்களிடையே நடைபெற்றுள்ள திருமணங்களின் திருமண வயதைப் பார்க்கும்போது பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. முக்கியமாக மக்களின் கல்வி மற்றும் தொழில் அவர்களிடையே காணப்படும் பழக்க வழக்கங்களாகிய பரிசம், வரதட்சணை போன்றவை அத்தகைய வேறுபாடுகளுக்கு காரணங்களாக உள்ளன. அதோடு மத ஒழுங்கு மற்றும் மதப் போதகர்களின் குறுக்கீடு ஆகியவையும் முக்கிய காரணங்களாக உள்ளன. அத்தகைய மத ஒழுங்குகளும் இல்லாமல், கல்வி அறிவற்ற பொருளாதார நிலையில் பின் தங்கிய பிரிவினரிடையே நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும் போது திருமண வயது மற்றும் திருமண முறை ஆகியவற்றில் ஒருவித ஒழுங்கற்ற தன்மையைக் காணமுடிகிறது. பல இடங்களில் உறவு முறையாவது மக்களின் வசதிக்கேற்றாப் போன்று மாற்றி அமைக்கப்படும் தன்மையைக் காணலாம்.

**பரிசம்:**

பரிசம் என்பது திருமணம் நிச்சயிக்கும்போது மணமகன் வீட்டார் மணமகள் வீட்டாருக்குக் கொடுக்கும் ஒரு தொகை பணமாகும். பணம் மட்டுமல்லாமல் நெல், அரிசி போன்ற பொருட்களும் கொடுப்பார்கள். பரிசம் என்பது ஒரு பெண்ணை ஈன்றெடுத்துப் பாலூட்டி வளர்த்ததற்கான கூலி என்பதாகும். முற்காலத்தில் இப்பழக்கம் எல்லா சாதியினரிடமும் காணப்பட்டது. தற்போது இப்பழக்கம் பல சாதியினரிடமும் பெயரளவில் மட்டுமே காணப்படுகிறது. அதற்குப் பதிலாக வரதட்சணை முறை தோன்றி விரைவாகப் பரவி வருவதைக் காணலாம். கோவிலூர், மேலமாகாணம் பகுதியில் வாழும் பல்வேறு சாதியினரில் பறையர் மற்றும் பள்ளர்களிடையே பரிசம் கொடுக்கும் பழக்கம் இப்போது ஓரளவு நடைமுறையில் இருக்கிறது. குறிப்பாகக் கல்வி அறிவற்ற,

பாரம்பரிய முறைப்படி திருமணம் செய்துகொள்ளும் குடும்பங்களில் காணப்படுகிறது. இவ்வாறு பரிசம் கொடுக்கும் பழக்கத்தை முகமதியர்களிடையே காணப்படும் "மகரீதொகை" க்கு ஒப்பிடலாம். அதாவது முகமதியர்களிடையே திருமணத்துக்கு முன் மணமகன் மணமகளுக்கு 2000 அல்லது 3000 ரூபாய் கொடுக்க வேண்டும் என்ற ஒழுங்கு காணப்படுகிறது தற்போது அத்தொகையைக் கொடுப்பதாக உறுதியளித்து எழுதிக்கொடுக்கிறார்கள். திருமணத்துக்குப்பின் கணவன் இறந்துவிட்டால் மனைவி அத்தொகையைக் கணவன் வீட்டாரிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம்.

கோவிலூர் பகுதியில் வாழ்ந்துவரும் பிராமணர்களிடையே தற்போது பரிசம் என்பது பெயரளவில் மட்டுமே இருந்து வருகிறது. எவரும் பெருமளவு பணமாகவோ அல்லது பொருளாகவோ பரிசம் கொடுப்பதில்லை. ஆனால் ஒன்று அல்லது இரண்டு தலைமுறைகளுக்கு முன் நடைபெற்றுள்ள திருமணங்களில் சில திருமணங்களில் 1500 ரூ, 1000 ரூ, 500ரூ, 300ரூ போன்ற தொகையைப் பரிசமாகக் கொடுத்திருப்பதைக் காணமுடிகிறது. மேலும் மூன்று தலைமுறைகளுக்கு முன் நடைபெற்றுள்ள திருமணங்களில் பெரும்பாலான திருமணங்களிலும் ஒரு மரக்கால் நாணயம் (சுமார் 1000ரூ) பரிசமாகக் கொடுத்துள்ளனர். ஆனால் தற்போது பரிசம் என்பது பெயரளவிலும் வரதட்சணை முறை அதிகமாகவும் இருப்பதைக் காணலாம். இத்தகைய பரிசம், வரதட்சணை ஆகியவற்றில் குடும்பப் பொருளாதாரம், திருமணத் தொடர்பு கொள்ளும் இரு குடும்பங்களிடையிலான உறவு ஆகியவற்றின் அடிப்படையில் சில மாறுதல்கள் ஏற்படுவதைக் காணலாம். அதாவது அத்தை மகள், தாய் மாமன் மகள் போன்றவர்களைத் திருமணம் செய்யும்போது பரிசம் வரதட்சணை போன்றவற்றிக்கு அதிக முக்கியத்துவம் அளிப்பதில்லை. அதோடு ஒருசில திருமணங்களில் அனைத்துச் செலவுகளையும் பெண் வீட்டாரே ஏற்றுக்

கொள்வதையும் காணமுடிகிறது. இது இரு குடும்பத்தினரின் பொருளாதாரம் மற்றும் உறவுகளைப் பொறுத்ததாகும். பிராமணர்களிடையே சகல திருமணச் செலவுகளையும் பெண் வீட்டார் ஏற்றுக்கொள்வதாக இருந்தால் இதற்கு "கன்னிகாதானம்" என்று பெயர். அதேப்போன்று இரு வீட்டாரும் சமமாகச் செலவு செய்தால் "பாணிக்கிரகரணம்" என்று குறிப்பிடுகின்றனர்.

அகமுடையார், மற்றும் வெள்ளாளர் சாதியினரிடமும் பரிசம் பெயரளவில் மட்டுமே காணப்படுகிறது. ஒருசில திருமணங்களில் 100 அல்லது 60 ரூபாய் பரிசமாகக் கொடுத்துள்ளனர். இன்னும் சில திருமணங்களில் ஆண்வீட்டார் பெண்ணுக்கு 3 அல்லது 5 பவுன் நகை போட்டுத் திருமணம் செய்துள்ளனர். வேறுசில திருமணங்களில் பெண் வீட்டார் பெண்ணுக்கு நகைபோட்டுத் திருமணம் செய்து கொடுத்துள்ளனர். உறவினர்களிடையே திருமண உறவு கொள்ளும்போது பரிசம், நகை போடுதல் போன்றவை இல்லாமல் காணப்படுகிறது. இவர்களிடையே உறவினர்களுக்கிடையிலான திருமணம் ஏனைய சாதியினரை விடச் சற்று அதிகமாக நடைபெறுவதையும் பரிசம், நகைபோடுதல் போன்றவற்றில் தெளிவான வரையறைகள் இல்லாதிருப்பதையும் காண முடிகிறது.

ஆசாரி சாதியினரிடம் நடைபெற்றுள்ள திருமணங்களில் எந்த ஒரு திருமணத்திலும் பரிசம் கொடுத்துத் திருமணம் செய்ததாக இல்லை. சில திருமணங்களில் பெண் வீட்டார் சிறு நகைகளும், ஆண்வீட்டார் சிறு நகைகளும் போட்டுத் திருமணம் செய்துள்ளனர். ஒருசில திருமணங்களில் ஆண் வீட்டார் மட்டும் பெண்ணுக்கு நகைபோட்டுத் திருமணம் செய்துள்ளனர். இவர்களிடையே பரிசம் கொடுக்கும் பழக்கம் இல்லாதிருப்பதற்குக் காரணம் இவர்களில் பெரும்பாலானோர் கிறித்தவர்களாக இருப்பதாகவும் இருக்கலாம்.

கள்ளர் சாதியினரிடையேயும் பரிசம் கொடுத்துத் திருமணம் செய்துகொள்ளும் பழக்கம் இல்லை. அதோடு ஆண் வீட்டார் பெண்ணுக்கு நகைபோட்டுத் திருமணம் செய்து கொள்ளும்

பழக்கமும் காணப்படவில்லை. ஆனால் இவர்களிடையே சீர் மற்றும் வரதட்சணை கொடுக்கும் பழக்கம் காணப்படுகிறது. இதற்கு பெரும்பாலோர் வசதிபடைத்தவர்களாக அதாவது நிலமுடையவர்களாக இருப்பதுவும் காரணமாக இருக்கலாம்.

மேலமாகாணம் பகுதியில் வாழும் பள்ளர்களிடையே மூன்று அல்லது நான்கு தலைமுறைகளில் நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும்போது பரிசம் என்பது ஒரு வரையறுக்கப்பட்ட ஒழுங்காகக் காணப்பட்டுள்ளது. சுமார் 40 அல்லது 50 வருடங்களுக்கு முன் நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும்போது அனைத்துத் திருமணங்களிலும் பரிசம் கொடுத்துள்ளனர். அவ்வாறு கொடுக்கும் பரிசம் இரு குடும்பத்தின் பொருளாதார நிலையைப் பொறுத்து வேறுபடுவதையும் காண முடிகிறது. அனைத்துத் திருமணங்களிலும் நெல் மற்றும் பணம் கொடுக்கும் பழக்கம் காணப்பட்டுள்ளது. இவ்வாறு நெல் மற்றும் பணம் கொடுப்பது குடும்பப் பொருளாதாரம், பெண்களின் அழகு, உடல் வலிமை, வயது ஆகியவற்றைப் பொறுத்து 3 முதல் 13 கலம் நெல்வரையிலும் 35 ரூ. முதல் 300 ரூ. வரையிலும் காணப்படுகிறது. அதோடு ஆண் வீட்டார் சிறு நகைகள் போடும் பழக்கமும் காணப்படுகிறது. ஆண் வீட்டார் பொருளாதார வசதி உடையவர்களாகக் காணப்பட்டால் பெண் வீட்டார் பரிசம் வாங்காமலேயே பெண்ணைத் திருமணம் செய்து கொடுக்கும் பழக்கமும் காணப்பட்டுள்ளது. இன்னும் ஒருசில திருமணங்களில் பெண் வீட்டார் பொருளாதார வசதி உடையவர்களாகக் காணப்பட்டால் பரிசம் வாங்காமல் பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்துள்ளனர். அதோடு நெருங்கிய உறவினர்களிடையே திருமணத் தொடர்பு கொள்ளும் போதும் பரிசம் கொடுக்காமல் திருமணம் செய்துள்ளனர். இவ்வாறு பரிசம் கொடுப்பதில் இரு குடும்பத்தின் பொருளாதாரம் மற்றும் உறவு ஆகியவற்றின் அடிப்படையில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. 30 அல்லது 40

வருடங்களுக்குப்பின் நடைபெற்றுள்ள திருமணங்களைப் பார்க்கும்போது பரிசம் கொடுக்கும் பழக்கம் படிப்படியாகக் குறைந்துவருவதைக் காணலாம். குறிப்பாகக் கல்வி மற்றும் பொருளாதார நிலையில் சற்று முன்னேறியவர்களிடையே இப்பழக்கம் வெகு விரைவில் மறைந்துவருவதைக் காணலாம். இடைப்பட்ட காலக் கட்டத்தில் அதாவது 10 அல்லது 20 வருடங்களுக்குள் நடைபெற்றுள்ள சில திருமணங்களில் பரிசம் மற்றும் வரதட்சணை இரண்டும் கொடுக்காமல் திருமணம் செய்துள்ளதைக் காணமுடிகிறது. அவ்வாறு திருமணம் செய்துகொண்டவர்களிடையே ஒருவித ஏமாற்ற உணர்வு இருப்பதைக் காணலாம். அதாவது தான் வரதட்சணை வாங்காமல் விட்டுவிட்டதாகவும் இப்போது வரதட்சணை வாங்காமல் யாரும் திருமணம் செய்துகொள்வதில்லை என்றும் கூறுகின்றனர். ஆனால் தற்போதும் பள்ளர் சாதியினரிடையே குறிப்பாகக் கல்வி, பொருளாதார நிலையில் பின்தங்கிய நிலையில் இருப்பவர்களிடையே உறவினர் அல்லாதோரோடு திருமணத் தொடர்பு கொள்ளும் போது ஒருசில திருமணங்களில் பரிசம் கொடுத்துத் திருமணம் செய்திருப்பதையும் காணமுடிகிறது.

கிறித்தவப் பறையர்களிடையே அண்மையில் நடைபெற்றுள்ள எந்தத் திருமணங்களிலும் பரிசம் கொடுத்தாகச் சான்றுகள் இல்லை. ஆனால் மூனறு தலைமுறைகளுக்கு முன் நடைபெற்றுள்ள ஒருசில திருமணங்களில் 100 ரூ. பணமும் ஒரு மூட்டை நெல்லும் பரிசம் கொடுத்தாகக் கூறுகின்றனர். இவர்கள் கிறித்தவர்களாக மாறிய பின் இவர்களிடையே பரிசம் கொடுத்துத் திருமணம் செய்துகொள்ளும் பழக்கம் மறைந்திருக்கலாம். இவர்களிடையே இரு வீட்டாரும் சிறு நகைகள் போடுவதும் பெண்வீட்டார் சில பொருட்களைச் சீர்வரிசையாகக் கொடுப்பதுமே வழக்கமாகக் காணப்படுகிறது.

மேலமாகாணம் பகுதியில் வாழ்ந்துவரும் (இந்து) பறையர்களிடையே அண்மையில் நடைபெற்றுள்ள திருமணங்களில் கூடப் பெரும்பாலான திருமணங்களிலும் பரிசம் கொடுத்திருப்பதைக் காணமுடிகிறது. இரண்டாவது தாரமாகத் திருமணம் செய்யும் போதும் பரிசம் கொடுத்துத் திருமணம் செய்துள்ளனர். அதோடு ஒருசில திருமணங்களில் நெருங்கிய உறவினர்களிடையே திருமணத் தொடர்பு கொள்ளும்போதும் பரிசம் கொடுத்திருப்பதைக் காணலாம் பரிசம் கொடுக்கும் தொகை மற்றும் நெல் ஆகியவற்றின் அளவு குடும்பப் பொருளாதாரத்தைப் பொறுத்து வேறுபடுகிறது. தற்போது பரிசம் கொடுப்பவர்கள் குறைவான தொகையும் நெல்லும் கொடுக்கின்றனர். அதோடு பெண் வீட்டார் நகை போட்டுத் திருமணம் செய்துகொடுக்கும் பழக்கமும் வரதட்சணை முறையும் உருவாகியிருப்பதையும் காணமுடிகிறது.

இங்கு ஆண்வீட்டார் பெண்வீட்டாருக்குப் பரிசம் கொடுத்துத் திருமணம் செய்து கொள்வது என்பது பாரம்பரியத் திராவிட உறவுமுறை அமைப்பில் காணப்பட்டுள்ள ஒரு முக்கிய கூறு என்பது தெளிவாகிறது. காரணம் அனைத்துச் சாதியினரின் பாரம்பரியச் சமுதாயத்திலும் இப்பழக்கம் காணப்பட்டுப் படிப்படியாகப் பல மாறுதல்கள் ஏற்பட்டுவருவதைத் தெளிவாகக் காணமுடிகிறயது. அவ்வாறு ஏற்படும் மாறுதல்களின் அளவு மற்றும் தன்மை மக்களின் கல்வி, பொருளாதாரம், மத ஒழுங்குகள், உறவினர்களிடையே திருமணத் தொடர்பு கொள்ளுதல் ஆகியவற்றின் அடிப்படையில் பலவேறுபாடுகள் இருப்பதைக் காணமுடிகிறது. அவ்வாறு ஏற்படும் மாறுதல்களினால் பரிசம் கொடுத்துத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம் மருவி வரதட்சணைமுறை உருவாகி விரைவில் பரவிவருவதைக் காணமுடிகிறது. மேலும் வண்ணார், நாவிதர் போன்ற ஒருசில சாதியினரிடையே குறிப்பாகக் கல்வி, பொருளாதார நிலையில் முன்னேறாமல் இருப்பவர்களிடையே பரிசம் மற்றும் வரதட்சணை இரண்டுமே இல்லாத ஒரு நிலையைக் காண முடிகிறது.

**வரதட்சணை:**

வரதட்சணை முறையானது முற்காலத்தில் குறிப்பிட்ட சில சாதியினரிடம் மட்டும் காணப்பட்ட ஒரு பழக்கமாகும். அதாவது கல்வி, பொருளாதாரம் ஆகியவற்றில் முன்னேறிய சாதியினராகிய பிராமணர் மற்றும் வெள்ளாளர்களிடையே காணப்பட்டது. பாரம்பரியச் சமுதாயத்தில் பெண்களுக்குச் சொத்துரிமை இல்லாது காணப்பட்ட நிலையில் குடும்பத்தின் உடமைகளில் ஒரு பகுதி பெண்களுக்கும் போய்ச் சேர வேண்டும் என்ற நோக்கத்தோடு வரதட்சணை முறை ஏற்பட்டிருக்கலாம். அதே சமயம் பாரம்பரியச் சமுதாயத்தில் ஏனைய சாதியினரிடம் வரதட்சணை முறை நடைமுறையில் இல்லாது காணப்பட்டது. இருப்பினும் ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்த நாள் முதல் அப்பெண்ணின் மரணம் வரையிலும் அவளுடைய பெற்றோரின் குடும்பத்ினர் குறிப்பாகப் பெற்றோர்கள் மற்றும் சகோதரர்கள் செய்ய வேண்டிய சீர், கடப்பாடுகள், ஆகியவை மிக அதிகமாக இருப்பதைக் காணலாம். இத்தகைய கடப்பாடுகள் ஒரு பெண்ணின் பெற்றோரின் செல்வத்தில் ஒரு பகுதி ஏதோ ஒருவிதத்தில் அவளைச் சென்றடைவதற்கு வழி வகுப்பதாகக் காணப்படுகின்றன. தற்போது அத்தகைய உறவுமுறைக் கடப்பாடுகளை நிறைவேற்றுவதில் பல மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. அதாவது கல்வி, வேலையின் தன்மை, வேலைபார்க்கும் இடத்தின் தூரம் ஆகியவற்றின் அடிப்படையில் சில வேளைகளில் உறவுமுறைக் கடப்பாடுகளை நிறைவேற்றத் தவறி விடுகின்றன. ஆனால் கல்வி, பொருளாதாரம் ஆகியவற்றில் முன்னேறி வருபவர்களிடையே வரதட்சணை முறையும் அதிகமாகப் பரவி வருவதைக் காணலாம். ஆக உறவுமுறைக் கடப்பாடுகள், வரதட்சணை முறை ஆகியவற்றைப் பார்க்கும்போது அவை ஒரு குடும்பத்தின் சொத்து மற்றும் உடமைகளில் ஒரு பகுதி, அக்குடும்பத்தின் பெண்களுக்கும் போய்ச் சேர்வதற்கு

வழிவகுப்பதாகக் காணப்படுகின்றன. தற்போது சில சமுதாயங்களில் வரதட்சணை கொடுக்கும் போது சிறிதளவு சொத்தும் கொடுக்கும் பழக்கம் ஏற்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இதனைப் பெண்களுக்கும் சொத்துரிமை அளிப்பதின் ஒரு ஆரம்பக் கட்டமாகவும் கருதலாம்.

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் பெரும்பாலான சாதி மக்களிடையேயும் வரதட்சணைப் பழக்கம் காணப்படுகிறது. குறிப்பாக அரிசனர்களிடையே அண்மையில் தோன்றி வெகுவாக வளர்ந்து வருவதைக் காண முடிகிறது. பல்வேறு சாதி மக்களிடையே நடைமுறையில் காணப்படும் வரதட்சணையில் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. பிராமணர்களிடையே நடைபெற்றுள்ள திருமணங்களில் சிலவற்றில் வரதட்சணை, சீர், பரிசம் ஆகியவை இல்லாது காணப்படுகின்றன. நெருங்கிய உறவினர்களிடையே திருமணத் தொடர்பு கொள்ளும்போது அவ்வாறான நிபந்தனைகள் இல்லாமல் திருமணம் செய்துகொள்ளுகின்றனர். இன்னும் சில திருமணங்களில் சீர்வரிசை மட்டும் காணப்படுகிறது. அதாவது புதிய தம்பதியினர் குடும்பம் அமைப்பதற்குத் தேவையான பொருட்கள் மற்றும் சிறு நகைகள் அளித்துள்ளனர். வேறுசில திருமணங்களில் சீர், நகை அதோடு 1500 முதல் 7000 ரூ வரையிலும் பணமும் கொடுத்துள்ளனர். எந்த ஒரு திருமணத்திலும் பெண்களுக்குச் சொத்து கொடுத்தாக இல்லை. இவர்களிடையே வரதட்சணை முறை காணப்பட்டாலும் அதன் அளவு குறைவாகவே காணப்படுகிறது. இதற்குக் காரணம் அவர்கள் பொருளாதார நிலையில் பின்தங்கிய நிலையில் காணப்படுதாகவும் இருக்கலாம்.

அகமுடையார் சாதியில் நடைபெற்றுள்ள திருமணங்களில் இரண்டு தலைமுறைகளுக்கு முன் நடைபெற்ற திருமணங்களிலும் உறவினர்களிடையே நடைபெற்ற திருமணங்களிலும் வரதட்சணை

முறை இல்லாது காணப்படுகிறது. சில திருமணங்களில் 3 முதல் 7 பவுன் வலையிலும் பெண் வீட்டார் நகை போட்டுத் திருமணம் செய்து கொடுத்துள்ளனர். ஒரு திருமணத்தில் மட்டும் பெண் வீட்டார் 7000 ரூபாயும் நகையும் சீரும் கொடுத்துத் திருமணம் செய்துகொடுத்துள்ளனர். இவ்வாறு நகை மற்றும் ரூபாய் வரதட்சணையாகக் கொடுக்கும் பழக்கம் பொதுவாகச் சற்றுப் பொருளாதாரவசதி படைத்தவர்களிடையே காணப்படுகிறது.

கள்ளர் சாதியிலும் புதிய தலைமுறையினரிடையே வரதட்சணைமுறை காணப்படுகிறது. பெரும் நிலச்சுவாந்தர்களின் குடும்பங்களில் நகை, பணம் மற்றும் சீர் ஆகியவற்றோடு பெண்களுக்கு ஒரு சில திருமணங்களில் சற்று நிலமும் கொடுத்திருப்பதைக் காணமுடிகிறது. இவர்களிடையேயும் நெருங்கிய உறவினர்களோடு திருமணத் தொடர்பு கொள்ளும்போது நகை, வரதட்சணை போன்ற நிபந்தனைகள் இல்லாமல் திருமணம் செய்து கொள்ளுகின்றனர்.

ஆசாரி, வண்ணான், நாவிதர், கோனார் போன்ற சில சாதி மக்களிடையே வரதட்சணை முறை காணப்படவில்லை. பெரும்பாலான திருமணங்களிலும் ஆண் வீட்டாரும் பெண் வீட்டாரும் பெண்ணுக்கு சிறு நகைகள் போடுவதும் திருமணச் செலவுகளை இருவிட்டாரும் பகிர்ந்து கொள்வதும் வழக்கமாகக் காணப்படுகிறது. இவர்களில் பெரும்பாலானோர் கல்வி அறிவற்றவர்களாகவும் பொருளாதார நிலையில் பின் தங்கியவர்களாகவும் காணப்படுவது இவர்களிடையே வரதட்சணை முறை இல்லாதிருப்பதற்கு முக்கிய காரணமாகும். அதோடு மேற்கூறிய சாதியினரிடையே பெரும்பாலான திருமணங்களும் நெருங்கிய அல்லது தூரத்து உறவினர்களோடு ஏற்படுவதும் வரதட்சணை முறை இல்லாதிருப்பதற்கு ஒரு முக்கிய காரணமாகும். அதே சமயம் திராவிட பாரம்பரிய உறவுமுறை அமைப்பில் காணப்படும் பரிசம் கொடுத்து

திருமணம் செய்துகொள்ளும் பழக்கமும் இவர்களிடையே காணப்படவில்லை.

பள்ளர் சாதியினரிடையே நடைபெற்றுள்ள திருமணங்களில் பெரும்பாலான திருமணங்களிலும் வரதட்சணை முறை இல்லாமலே காணப்படுகிறது. முன்னர் குறிப்பிட்டுள்ள வண்ணம் சுமார் 20 அல்லது 30 வருடங்களுக்கு முன் நடைபெற்ற பெரும்பாலான திருமணங்களிலும் ஆண்வீட்டார் பரிசம் கொடுத்துப் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கமே காணப்பட்டது. ஆனால் தற்போது குறிப்பாகச் சற்றுக் கல்வி கற்றவர்கள் மற்றும் சற்று பொருளாதார வசதிபடைத்த குடும்பத்தைச் சேர்ந்த ஆண்கள் பெண்வீட்டார் இவ்வளவு நகை போட வேண்டும் என்று கூறும் பழக்கம் ஏற்பட்டுள்ளது. இவ்வாறு (நகையாக) வரதட்சணை வாங்கும் பழக்கம் சற்றுப் படித்தவர்களிடையே தோன்றிப் புதிய தலைமுறையினரிடம் வேகமாகப் பரவி வருகிறது. இதனால் போதிய பொருளாதார வசதியற்ற குடும்பங்களில் பெண்களைத் திருமணம் செய்து கொடுக்கும்போது பெற்றோர்கள் பெரும் பொருளாதார நெருக்கடிக்குள்ளாவதையும் காணமுடிகிறது. அதோடு பெண்களின் திருமணம் தாமதமாவதற்கும் திருமணத்திற்குப்பின் சில பிரச்சனைகள் உருவாவதற்கும் வரதட்சணை முறை காரணமாக உள்ளது. ஆனால் நெருங்கிய உறவினர்களுக்கிடையே திருமணத் தொடர்பு கொள்ளும்போது பெண்வீட்டார் இவ்வளவு நகைபோட வேண்டும் என்று ஆண்வீட்டார் கண்டித்துக் கூற இயலாத நிலை காணப்படுவதால் வரதட்சணை இல்லாமலே திருமணம் நடைபெறுகிறது. இதன்விளைவாக நெருங்கிய உறவினர்களோடு திருமணத் தொடர்பு கொள்வதைத் தவிர்க்கும் எண்ணம் புதிய தலைமுறையினரிடையே காணப்படுகிறது. இன்னொரு புறத்தில் பார்க்கும்போது சற்று பொருளாதார வசதி படைத்த குடும்பங்களில் பெற்றோர் தங்கள் பெண் பிள்ளைகளுக்குத் திருமணம் ஒழுங்கு

செய்யும்போது வரதட்சணை கொடுத்தாவது படித்த அல்லது அரசு வேலைபார்க்கும் ஒருவருக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்று எதிர்பார்க்கின்றனர். அவ்வாறு படித்த அரசு ஊழியர் ஒருவர் தன் வீட்டிற்கு மருமகனாக வருவதைப் பெருமையாகக் கருதுகின்றனர். இதுவும் வரதட்சணைமுறை வளர்வதற்கு ஒரு முக்கிய காரணமாகக் காணப்படுகிறது.

பறையர் சாதியினரிடையே நடைபெற்றுள்ள திருமணங்களில் இந்துப் பறையர்களிடையே வரதட்சணை முறையானது மிகக் குறுகிய காலகட்டத்தில் தோன்றியுள்ளது. இருப்பினும் கல்வி, பொருளாதார நிலையில் இவர்கள் மிகவும் பின்தங்கிய நிலையில் காணப்படுவதால் வரதட்சணை முறையானது அவ்வளவாக நடைமுறையில் இல்லாது காணப்படுகிறது. கிறித்தவப் பறையர்களிடையே பரிசம், வரதட்சணை இரண்டுமே குறிப்பிடத்தக்க அளவு இல்லாது காணப்படுகிறது. இவர்கள் கல்வி, பொருளாதாரநிலையில் பின்தங்கிய நிலையில் காணப்படுவதோடு இவர்களின் மதக் கட்டுபாடும் இவர்களிடையே பரிசம், வரதட்சணை ஆகியவை இல்லாதிருப்பதற்கு முக்கியக் காரணமாக உள்ளது. ஆனால் இருபிரிவினரிடையேயும் ஆண்வீட்டாரும் பெண்வீட்டாரும் பெண்ணுக்கு சிறு நகைகள் போட்டுத் திருமணம் செய்வது பழக்கமாகக் காணப்படுகிறது.

**உறவினர்களின் பரப்பு:**

உறவினர்களின் பரப்பு, மக்களிடையே காணப்படும் திருமண முறை மற்றும் திருமண உறவு கொள்ளும் இடத்தின் தூரம் ஆகியவற்றைப் பொறுத்து வேறுபடுகிறது. குறிப்பாக நெருங்கிய உறவினர்களோடு அதிகமாகத் திருமணத் தொடர்பு கொள்ளும்போது உறவினர்களின் பரப்பு மிகவும் குறைந்துவிடுகிறது. அதைப்போன்று ஒரே கிராமத்தில் அல்லது அண்மையிலுள்ள கிராமங்களில் மட்டும்

திருமணத் தொடர்பு கொள்ளும்போது உறவினர்களின் பரப்பு குறுகிவிடுகிறது.

கோவிலூர்ப் பகுதியில் வாழும் பிராமணர்களிடையே காணப்படும் உறவினர்களின் பரப்பை ஏனைய சாதியினரோடு ஒப்பிட்டுப்பார்க்கும்போது சற்று அதிகமாகவே காணப்படுகிறது. காரணம் இவர்கள் 60, 70 மைல் தூரத்தில் வெவ்வேறு ஊர்களில் வாழும் மக்களோடு திருமணத் தொடர்பு கொண்டுள்ளனர். அதோடு மிக நெருங்கிய உறவினர்களோடு உள்ள திருமணங்களும் குறைவாகவே காணப்படுகின்றன. அதேசமயம் அப்பகுதியில் வாழும் யாதவர்கள் (கோனார்) குறிப்பிட்ட சில கிராமங்களுடனே திருமணத் தொடர்பு கொண்டுள்ளனர். இதனால் பெரும்பாலான திருமணங்களும் உறவினர்களுக்குள்ளேயே நடைபெற்றுள்ளது. இதன்விளைவாக உறவினர்களின் பரப்பும் மிகக் குறைவாகக் காணப்படுகிறது.

அகமுடையார் மற்றும் வெள்ளாளர் சாதியினர் ஓரளவு விரிவான உறவினர்களை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். பெரும்பாலானோரும் சுமார் 15 அல்லது 20 கி.மீ. தூரத்தில் உள்ள கிராமங்களோடு திருமணத்தொடர்பு கொண்டுள்ளனர். சிலர் 40, 50 மைல் தூரத்திலுள்ள ஊர்களோடும் திருமணத் தொடர்பு கொண்டுள்ளனர். ஆனால் ஒருசில கால்வழியைச் சேர்ந்தவர்கள் குறிப்பிட்ட சில கிராமங்களோடு அதிக திருமணத் தொடர்பு கொண்டிருப்பதையும் காணமுடிகிறது. சான்றாக ஒரு கால்வழியைச் சேர்ந்தவர்களில் 7 பேர் சுமார் 20கி.மீ. தூரத்திலுள்ள ஆளிவளம் என்ற கிராமத்தோடு திருமணத் தொடர்பு கொண்டுள்ளனர். அதேப் போன்று லாயம் என்ற கிராமத்தோடு ஒரே கால்வழியைச் சேர்ந்த 4 பேர் திருமணத் தொடர்பு கொண்டுள்ளனர். இவ்வாறு ஒரே கால்வழியைச் சேர்ந்தவர்கள் ஒரே கிராமத்தோடு அதிக திருமணத்

தொடர்பு கொள்ளும்போது உறவினர்களின் பரப்பு குறைவாகிறது. இவர்களிடையே நெருங்கிய உறவினர்களோடுள்ள திருமணத் தொடர்பும் சற்று அதிகமாகவே காணப்படுகிறது.

ஆசாரி சாதியினரின் உறவினர்களின் பரப்பு மிகக் குறைவாகவே காணப்படுகிறது. காரணம் இவர்கள் குறிப்பிட்ட சில பகுதிகளோடு மட்டுமே அதிக திருமணத் தொடர்பு கொண்டுள்ளனர். சான்றாக ஒரு கால்வழியைச் சேர்ந்தவர்களில் 5 பேர் சுமார் 25 கி.மீ தூரத்தில் உள்ள தி[illegible]றூர் என்ற கிராமத்தில் திருமணத்தொடர்பு கொண்டுள்ளனர்.

கள்ளர் சாதியைச் சேர்ந்தவர்கள் சுமார் 15 கி.மீ முதல் 50 கி.மீ. தூரத்திலுள்ள பல கிராமங்களோடு திருமணத்தொடர்பு கொண்டிருப்பதைக் காணமுடிகிறது. இவர்களின் உறவினர்களின் பரப்பும் அதிகமாகக் காணப்படுகிறது. உறவினர்களுக்கிடையிலான திருமணங்களும் குறைவாகவே காணப்படுகிறது. இதற்கு முக்கிய காரணம் இவர்களிடையே காணப்படும் பட்டப்பெயர் மற்றும் நாடு அமைப்பு ஆகியவையாகவும் இருக்கலாம். காரணம் ஒரே பட்டத்தைச் சேர்ந்தவர்கள் திருமணத் தொடர்பு கொள்ளக் கூடாது என்ற ஒழுங்கு காணப்படுகிறது.

பள்ளர் சாதியினரின் உறவினர்களின் பரப்பும் ஓரளவு பரவலாகக் காணப்படுகிறது. பெரும்பாலும் ஒரே கிராமத்தோடு அதிக எண்ணிக்கையிலான திருமணத் தொடர்பு ஏற்படாமல் பல ஊர்களோடு திருமணத் தொடர்பு கொண்டிருப்பதைக் காண முடிகிறது. ஆனால் பெரும்பாலான திருமணங்களும் 5 முதல் 15 அல்லது 20 கி.மீ. தூரத்துக்குள்ளான கிராமங்களோடு நடைபெற்றுள்ளன. 30 அல்லது 40 கி.மீ. தூரத்தில் உள்ள கிராமங்களோடு திருமணத் தொடர்பு கொண்டுள்ளவர்கள் மிகக் குறைவாகவே காணப்படுகின்றனர். அதோடு உறவினர்களுக்

கிடையிலான திருமணங்களும் மிகக் குறைவாகவே காணப்படுகின்றன. இதன் விளைவாகப் பள்ளர் சாதியினரின் உறவினர்களின் பரப்பு சற்று அதிகமாகவே காணப்படுகிறது.

மேலமாகாணம் பகுதியில் வாழும் கிறித்தவப் பறையர்கள் விரிவான உறவினர்களை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். அரணம் பெரும்பாலோரும் வெவ்வேறு கிராமங்களோடு திருமணத் தொடர்பு கொண்டுள்ளனர் ஆனால் பெரும்பாலான திருமணத் தொடர்புகளும் சுமார் 15 அல்லது 20 கி.மீ. தூரத்துக்கு உள்ளாகக் காணப்படும் கிராமங்களோடு நடைபெற்றிருப்பதையும் காணலாம். இவர்களின் மத ஒழுங்கின்படி நெருங்கிய உறவினர்களுக்கிடையிலான திருமணங்கள் தடைசெய்யப்படுவதும் இவர்களின் உறவினர்களின் பரப்பு அதிகமாக இருப்பதற்கு முக்கிய காரணமாகிறது. இப்பகுதியில் வாழும் இந்துப் பறையர்களும் சற்று விரிவான உறவினர்களை உடையவர்களாகக் காணப்படுகின்றனர் கிறித்தவப் பறையர்களைப் போன்று இவர்களும் வெவ்வேறு கிராமங்களோடு திருமணத் தொடர்பு கொண்டிருப்பதைக் காணமுடிகிறது. இவர்களும் அண்மையிலுள்ள கிராமங்களோடு அதிகத் திருமணத் தொடர்பு கொண்டுள்ளனர் அதோடு நெருங்கிய உறவினர்களோடான திருமணமும் குறைவாகவே காணப்படுகிறது.

**மணவிலக்கு மற்றும் மறுமணம்:**

மணவிலக்கு மற்றும் மறுமணம் சாதி அடிப்படையில் வேறுபடுவதைக் காணலாம். பெரும்பாலான உயர்சாதி மக்களிடையேயும் மணவிலக்கு மற்றும் மறுமணம் தடை செய்யப்பட்டிருப்பதைக் காணலாம். பிராமணர்கள் விதவை திருமணத்தை முற்றிலுமாகத் தடை செய்கின்றனர் அதோடு விதவைகள் சமூக ரீதியிலும் மிகவும் இழிவான நிலையில்

நடத்தப்படுகின்றனர். குறிப்பாக எந்த ஒரு மகிழ்ச்சியான சடங்குகளிலும் விதவைகள் பங்கேற்க அனுமதிக்கப்படுவதில்லை. ஆனால் எல்லா சாதி மதத்தினரிடையேயும் மனைவி இறந்துவிட்டால் ஆண்கள் மறுமணம் செய்வதற்கு அனுமதிக்கப்படுகிறார்கள். கோவிலூர்ப் பகுதியில் வாழும் அகமுடையார் சாதியினரிடம் விதவை மறுமணம் தடைசெய்யப்பட்டிருந்தபோதிலும் அதை மீறி இரண்டு திருமணங்கள் நடைபெற்றுள்ளது, குறிப்பிடத்தக்கதாகும். அதோடு விதவை மறுமணம் தடைசெய்யப்பட்ட சாதி மக்களிடமும் விதவைகள் இளம் வயதினாராகக் காணப்பட்டால் மறுமணம் செய்து கொடுப்பது நல்லது என்ற எண்ணமும் காணப்படுகிறது. காரணம் இளம் வயது விதவைகளைப் பாதுகாப்பதில் சில சிக்கல்கள் ஏற்படுகிறது. கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் பள்ளர், பறையர் சாதியினரிடம் மணவிலக்கு மற்றும் விதவை மறுமணம் அனுமதிக்கப்பட்டுள்ளது. பள்ளர், பறையர் சாதியினரின் பாரம்பரியச் சமுதாயத்தில் மணவிலக்கு மற்றம் விதவை மறுமணம் ஆகியவற்றில் கிராமப் பஞ்சாயத்து (நாட்டாமை) மிக முக்கியப்பங்கு வகிக்கிறது. இவர்களிடையே கிராமப் பஞ்சாயத்து முன்னிலையில்தான் மணவிலக்கு நடைபெறும். அதோடு விதவை மறுமணம் நிச்சயிப்பதிலும் கிராமப் பஞ்சாயத்து முக்கியப் பங்காற்றுகிறது. இவர்களிடையே ஆணும் பெண்ணும் மனவிலக்குக் கோரினால் திருமணத்தின் போது பெண்வீட்டார் ஆண்வீட்டாரிடமிருந்து பெற்றுக் கொண்ட பரிசப்பணத்தைத் திருப்பிக் கொடுக்கவேண்டும். கணவன் மட்டும் மணவிலக்குக் கோரினால் பரிசப்பணம் திருப்பிக் கொடுக்க வேண்டியதில்லை. அதோடு சில வேளைகளில் கணவன் வீட்டார் ஒரு தொகை ரூபாய் அபராதமும் கட்ட வேண்டியது நேரிடும். மனைவி மணவிலக்கு கோரினால் அவளுடைய குடும்பத்தினர் பரிசப் பணத்தைத் திருப்பிக் கொடுப்பதோடு திருமணச்செலவில் பாதியையும் கொடுக்க வேண்டும். இவ்வாறு மணவிலக்குத் தொடர்பான முடிவெடுக்கும்போது பொதுவாக ஆண்

வீட்டாரின் பஞ்சாயத்தாரும் பெண்வீட்டாரின் பஞ்சாயத்தாரும் கலந்துகொள்வதுண்டு. விதவைத் திருமணமானது விதவைகளின் வயதைப் பொறுத்தும் வேறுபடுகிறது. இளம் வயதில் கணவன் இறந்துவிட்டால் பெரும்பாலும் மறுமணம் செய்துகொள்வது வழக்கமாகக் காணப்படுகிறது. சற்று வயது சென்ற நிலையில் பிள்ளைகள் சற்று வளர்ந்தபின் கணவன் இறந்துவிட்டால் பெண்கள் பெரும்பாலும் மறுமணம் செய்துகொள்வதில்லை. அதோடு பள்ளர், பறையர் சாதியினரிடம் மூத்த சகோதரன் இறந்துவிட்டால் அவருடைய மனைவியை இளைய சகோதரன் திருமணம் செய்து கொள்ளும் பழக்கமும் காணப்படுகிறது. இப்பழக்கம் நடைமுறைப் படுத்தப்படுவது மூத்த சகோதரனின் மனைவியின் வயதைப் பொறுத்ததாகவும் காணப்படுகிறது. இதைப்போன்று மனைவி இறந்துவிட்டால் மனைவியின் தங்கையைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கமும் காணப்படுகிறது.

கிறித்தவப் பறையர்களிடையே மணவிலக்கு தடை செய்யப்பட்டுள்ளது. அதை மீறி நீதிமன்றத்தில் வழக்குப் பதிவு செய்து மணவிலக்கு செய்பவர்கள் அவர்களின் சமுதாயத்திலிருந்து ஒதுக்கி வைக்கப்படுகிறார்கள். எனவே கிறித்தவப் பறையர்களிடையே பெரும்பாலும் மணவிலக்கு நடைபெறுவதில்லை. தற்போது பள்ளர் மற்றும் இந்துப் பறையர்களிடையே கிராமப் பஞ்சாயத்து வலுவிழந்து வருவதையும் அதை மீறிச் சில மணவிலக்கு மற்றும் மறுமணங்கள் நடப்பதையும் காண முடிகிறது. ஆனால், கிராமப் பஞ்சாயத்து உறவு முறை அமைப்போடு பல நிலைகளில் தொடர்புடையதாகக் காணப்படுவதும் குறிப்பிடத்தக்கதாகும். பஞ்சாயத்து அல்லது நாட்டாமை என்பது எல்லாச் சாதியினரிடமும் காணப்படுகிறது. அதற்குத் தனி மதிப்பும் மரியாதையும் காணப்படுகிறது. குறிப்பாக அரிசனர்களிடையே தற்போதும் பல வழக்குகளைத் தீர்த்து வைப்பது பஞ்சாயத்தின் முக்கியக் கடமையாகக் காணப்படுகிறது. அதோடு

பெரும்பாலான திருமணங்களும் பஞ்சாயத்தினரின் முன்நிலையில்தான் நிச்சயிக்கப்படுகின்றன. அவ்வாறு பஞ்சாயத்தார் முன்னிலையில் நிச்சயிக்கப்படாவிட்டால் உடனடியாகப் பஞ்சாயத்தாருக்கு அறிவிக்கப்பட வேண்டும். அதோடு திருமணச் சடங்குகளிலும் பஞ்சாயத்தாருக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. திருமணப் பந்தல் போடுதல் உறவினர்களுக்கு விருந்து அளித்தல் போன்ற வேலைகளையும் பஞ்சாயத்தார் பொறுப்பேற்று நடத்துவதைக் காணலாம். யாராவது மணவிலக்குச் செய்து கொள்ளவிரும்பினால் முதலில் பஞ்சாயத்தாரைத்தான் அணுக வேண்டும். இவ்வாறு கிராமப் பஞ்சாயத்து உறவுமுறை அமைப்போடு நெருங்கிய தொடர்புடையதாகக் காணப்படுகிறது.

முகமதியர்கள் மணவிலக்கு, விதவை மறுமணம் இரண்டையும் அனுமதிக்கின்றனர் இவர்களிடையே பொதுவாக மண விலக்கானது மதத் தலைவர்கள் மற்றும் கிராமப் பஞ்சாயத்து உறுப்பினர் ஆகியோர் முன்னிலையில் நடை பெறுகிறது. இவர்களிடையே ஒருவன் மணவிலக்கு செய்து கொள்ளவிரும்பினால் முதலில் அவர்களின் மதத் தலைவரை அணுக வேண்டும். அவ்வாறு மணவிலக்குச் செய்யும்போது ஆண் வீட்டார் மகர் தொகையைத் திருப்பிக் கொடுக்கவேண்டும்

இவ்வாறு பல்வேறு சாதி மதத்தினரிடையே காணப்படும் மணவிலக்கு மற்றும் மறுமணத்தைப் பார்க்கும்போது சாதி அடிப்படையில் சில வேறுபாடுகள் இருப்பதையும் இதில் கிராமப் பஞ்சாயத்து மற்றும் மத தலைவர்களும் முக்கியப் பங்கு வகிப்பதையும் காணமுடிகிறது.

# குடும்பம்

ஒன்றுக்கு மேற்பட்ட இரத்த உறவுடையோர், மண உறவுடையோர் மற்றும் தத்தெடுக்கப்பட்டோர் ஒரே இடத்தில் வசிப்பது குடும்பம் எனப்படும். குடும்பம் என்பது உலகில் அனைத்து சமுதாயங்களிலும் காணப்படும் ஒரு நிறுவனம் (institution) அல்லது ஒருமம் (Unit) என குறிப்பிடலாம். எனவே குடும்பம் என்பது உலக முழுதளாவிய (Universal) ஒருமம் எனக் கூறலாம்.

முர்டாக் என்பவர் குடும்பத்தை வரையறுக்கும்போது நான்கு முக்கியக் கருத்துக்களைக் குறிப்பிடுகிறார். (1) உடலுறவு அனுமதிக்கப்பட்டுள்ளது. (2) பிள்ளைகளின் உற்பத்தி சட்டபூர்வமாக நடைபெறுகிறது. (3) பிள்ளைகளைப் பராமரிப்பதிலும் வளர்ப்பதிலும் சமுதாயத்துக்குக் கடமைப்பட்டிருக்கிறது (4) ஒரு பொருளாதார ஒருமம், ஆகியவை.

குடும்பம் என்பது உலகின் அனைத்துச் சமுதாயங்களிலும் காணப்படும் ஒருமமாகக் காணப்பட்டாலும் குடும்பமானது வெவ்வேறு சமுதாயங்களில் வெவ்வேறு வடிவங்களை எடுத்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும். பல சமுதாயங்களில் திருமணமான தம்பதிகள் வெவ்வேறு உறவுமுறைப் பிரிவுகளின் ஆளுகைக்குள்ளாக்கப்படுவதையும் வெவ்வேறுவிதமான குடும்பங்களை அமைப்பதையும் காணலாம். சான்றாகக் கேரள மாநிலத்தில் வாழும் நாயர் சமுதாயத்தை எடுத்துக்கொண்டால் சுமார் 19ம் நூற்றாண்டின் இறுதிவரையிலும் குடும்பத்தில் ஒரு திருமணமான தம்பதிகள் இருக்கவேண்டும் என்ற வரையறையின் அடிப்படையில் பார்த்தால் அவர்களிடையே காணப்படும் குடும்பம் சற்று வித்தியாசமான வடிவத்தில் காணப்பட்டது. திருமணமான தம்பதிகள் குடும்பம் அமைக்கும் விதத்தை மூர்டாக் என்பவர் ஐந்து வகைகளாகப் பிரித்துள்ளார்.

(1) தந்தை இருப்பிடத்தில் குடித்தனம் (Patrilocal)

திருமணமான தம்பதிகள் மணமகனின் தகப்பனின் வீட்டிலோ அல்லது அதற்கு அருகாமையிலோ குடும்பம் அமைத்தல்.

(2) தாய் இருப்பிடக் குடித்தனம் (Matrilocal)

திருமணமான தம்பதிகள் மணமகளின் தாயின் வீட்டிலோ அல்லது அதற்கு அருகாமையிலோ குடித்தனம் அமைத்தல்.

(3) தாய் அல்லது தந்தை இருப்பிடக்குடித்தனம் (Bilocal)

திருமணமான தம்பதிகள் தங்கள் விருப்பப்படி மணமகனின் அல்லது மணமகளின் பெற்றோரின் வீட்டிலோ அல்லது அதற்கு அருகாமையிலோ குடித்தனம் அமைத்தல்.

*(4)* *தனியிடக்குடித்தனம்* (Neo local)

*திருமணமான தம்பதிகள் தங்கள் இருவரின் பெற்றோர்களின் இருப்பிடப் பகுதிகளை விட்டுவிட்டுத் தூரத்தில் சென்று குடித்தனம் அமைத்தல்.*

*(5)* *தாய்மாமனிடக்குடித்தனம்* (Avunculocal)

*திருமணமான தம்பதிகள் மணமகளின் தாய்மாமன் வீட்டிலோ அல்லது அதற்கு அருகாமையிலோ குடித்தனம் அமைத்தல்.*

*முதல் இருவித குடித்தனம் அமைத்தலையும் ஒன்றாக இணைத்து தாய்-தகப்பனிடக்குடித்தனம் எனவும் குறிப்பிடலாம். முர்டாக் இதனைத் தந்தை இருப்பிடக் குடித்தனத்தின் ஒரு மாற்று வடிவமாகக் கருதுகிறார். அதாவது திருமணமான தம்பதிகள் ஒன்றோ இருண்டோ வருடங்களுக்கு அல்லது முதல் குழந்தை பிறக்கும் வரை மணமகளின் பெற்றோரோடு அல்லது அவர்களுக்கு அருகாமையில் வாழ்ந்துவிட்டுப் பின்னர் மணமகனின் தகப்பனின் இருப்பிடத்திற்கு நிரந்தரமாக மாற்றிச் செல்லுதல்.*

குடும்ப அமைப்பு:

*இந்தியாவின் பாரம்பரியக் குடும்ப அமைப்பை எடுத்துக் கொண்டால் கூட்டுக்கடும்பங்களாகவே காணப்பட்டுள்ளது. ஆனால் தற்போது தமிழகக் கிராமங்களில் காணப்படும் குடும்ப அமைப்பைப் பார்க்கும்போது பெரும்பாலும் தனிக்குடும்பங்களாகவே காணப்படுகின்றன. சில சமூகப் பொருளாதார சூழ்நிலைகளில் இன்னமும் கூட்டுக்குடும்பங்கள் நிலைத்திருப்பதையும் காணலாம்.*

தனிக்குடும்பம்: ஒரு தனிக்குடும்பத்தின் உறுப்பினர்கள் யார் என்றால் தகப்பன், தாய், மகன், மகள், கணவன், மனைவி, சகோதரன் மற்றும் சகோதரி ஆகிய உறவுகளைக்குறிப்பிடலாம். இங்கு சகோதரன் என்ற சொல் ஒருகுறிப்பிட்ட நபரை மட்டும் குறிப்பிடுவதாக அல்லாமல் எல்லாச் சகோதரர்களும் அடங்கிய ஒரு பிரிவைக் குறிப்பிடுவதாகவும் உள்ளது. அதோடு இச்சொற்கள் சமூக அந்தஸ்துகளையும் குறிப்பிடுகிறது. அத்தகைய அந்தஸ்துகள் இன்னொரு அந்தஸ்தோடுள்ள தொடர்பால் மட்டுமே பொருளுடையதாக அமைகிறது. சான்றாகக் கணவன் என்ற சொல் மனைவி என்ற இன்னொரு அந்தஸ்தோடுள்ள தொடர்பால் மட்டுமே பொருளுடையதாகக் காணப்படுகிறது. அதைப்போன்று தகப்பன் என்ற அந்தஸ்து மகன் மற்றும் மகள் ஆகிய அந்தஸ்துக்களின் நிலவுதலைச் சுட்டுகிறது. அந்தஸ்துகள் ஒன்றாகச் சேர்ந்து தனிக்குடும்பம் என்ற உள்ளான முக்கியமான அமைப்பாகிறது. தனிக்குடும்பத்தின் அமைப்பைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள படத்தில் காணலாம்.

**தனிக்குடும்ப அமைப்பு**



படத்தில் தனிக்குடும்பத்தை அமைக்கும் குறிப்பிட்ட நபர்களையும் அவர்களின் அநதஸ்துக்களையும் காணலாம். அதோடு அத்தகைய அந்தஸ்துகளிடையே காணப்படும் குறிப்பிட்ட உறவுகளையும் காணலாம். ஒரு தனிக்குடும்பத்தில் எட்டு அந்தஸ்துகள் மற்றும் பன்னிரண்டு உறவுகள் வரை காணப்படும் தனிக்குடும்பத்தில் காணப்படும் பன்னிரண்டு வகையான உறவுகளும் திட்டவட்டமானவையாகும் இதில் ஏழு இரண்டு பேர் கொண்ட தொகுதி உறவுகளும் (dyadic) நான்கு மூன்று பேர் கொண்ட தொகுதி உறவுகளும் (triadic) ஒரு நான்குபேர் கொண்ட தொகுதி உறவுகளும் இருக்கமுடியும். இந்த உறவுகளைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையில் காணலாம்.

| இரண்டு பேர் கொண்ட தொகுதி உறவு | மூன்று பேர் கொண்ட தொகுதி உறவு | நான்குபேர் கொண்ட தொகுதி உறவு |
|---|---|---|
| 1) கணவன்-மனைவி | தகப்பன்-மகன்-மகள் | தகப்பன்-தாய்-மகன்-மகள். |
| 2) தகப்பன்-தாய் | தாய்-மகன்-மகள் | |
| 3) தகப்பன்-மகன் | தகப்பன்-தாய்-மகள் | |
| 4) தகப்பன்-மகள் | தகப்பன் தாய்-மகள் | |
| 5) தாய்-மகன் | | |
| 6) தாய்-மகள் | | |
| 7) சகோதரி-சகோதரன் | | |

இத்தகைய குடும்ப அமைப்பில் சில வேறுபாடுகள் காணப்படுவதுண்டு. ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தில் வாழும் மக்கள் அவர்களின் குடும்பமானது எவ்வாறு வடிவமைக்கப்பட்டுள்ளது என்பதைக்குறித்து ஒரு உள்ளான எண்ணமுடையவர்களாகக் காணப்படுகின்றனர் ஆனால் இத்தகைய இலக்கியலான

அமைப்பிலிருந்து உண்மையான அமைப்பு வேறுபடுவதுண்டு. சான்றாக அமெரிக்க ஐக்கிய நாட்டின் ஒரு குடிமகனிடம் அங்குள்ள குடும்ப அமைப்பை விளக்குமாறு கூறினால் அவர் திருமணத்தின் மூலம் இணைக்கப்பட்ட இரண்டு வயது வந்தவர்களும் அவர்களின் பிள்ளைகளும் அடங்கிய ஒருமம் என்று கூறுவார். அவருடைய பக்கத்து வீடுகளில் சில தகப்பன் இல்லாது காணப்படுவது, குழந்தைகள் இல்லாத தம்பதிகள், வயது சென்ற பெற்றோர் சேர்ந்து வாழும் தனிக்குடும்பம் ஆகியவற்றைச் சுட்டிக்காட்டினால் அவை பொதுவான விதிமுறைகளுக்குப் புறம்பானது என கூறிவிடுவார். இது களஆய்வின் மூலம் வரையறுக்கப்பட்ட உண்மையான அமைப்புக்கும் மக்கள் எதிர்பார்க்கின்ற அமைப்புக்குமிடையிலான வேறுபாட்டை விளக்குகிறது.

ஒரு தனிக்குடும்பத்திலுள்ள நபரின் நிலையை அல்லது அந்தஸ்த்தைத் தெளிவுபடுத்துவதற்கு வயது மற்றும் பால் மிக முக்கியக் கருதுகோளாகப் பயன்படுத்தப்படுகிறது. ஒரு தனிக்குடும்பத்தை வயது நெடுக்குவெட்டாகவும் (vertically) பால் குறுக்வெட்டாகவும் (Horizontally) பிரிக்கிறது. இதனைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள படத்தில் காணலாம்.



வயது மற்றும் பால் குடும்பத்தில் மட்டுமின்றிச் சமுதாயத்தில் வேறு பல குழுக்களிலும் மிக முக்கியக் கருதுகோளாகக் காணப்படுவதையும்; அவற்றைப் பல வழிகளில் பயன்படுத்துவதையும் காணலாம். உறவுமுறை வம்சாவழிகளை எடுத்துக்கொண்டால் தந்தைவழிச் சமுதாயத்தில் ஆண்டுகளுக்கு அதிக முக்கியத்துவமும் தாய்வழிச் சமுதாயத்தில் பெண்களுக்கு அதிக முக்கியத்துவமும் அளிக்கப்படுகின்றன.

**குடும்பத்தில் ஏற்பட்டு வரும் மாறுதல்கள்:**

குடும்பத்தில் ஏற்பட்டு வரும் மாறுதல்கள் முதல் கட்டமாகக் குடும்ப அமைப்பைப் பாதிப்பதைக் காணலாம். அதாவது குடும்ப அங்கத்தினர்கள் சேர்ந்து வாழ்வதைப் பிளவுபடுத்துகிறது. இரண்டாவது கட்டமாக குடும்பத்தின் இயக்கத்திலும் மாறுதல்கள் ஏற்படுவதைக் காணலாம். இதன் விளைவாகக் குடும்ப அங்கத்தினர்களின் பங்கு (Role) மற்றும் குறிக்கோள் (values) ஆகியவற்றிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. குடும்ப அங்கத்தினர்களிடையே உண்மையிலேயே எந்தப் பங்குகள் மாறுகிலறன? அதாவது சமூக உரிமைகள் ஆகியவற்றில் எந்தப் பகுதிகள் மாறுகின்றன. அத்தகைய மாறுதல்களுக்கான காரணங்கள் எவை என்பவை முக்கியமான கேள்விகளாகும் குடும்ப அளவிலான கடமைகள் மற்றும் உரிமைகளை எடுத்துக்கொண்டால் கணவன்-மனைவி, தகப்பன்-மகன், தகப்பன்-மகள், தாய் மகன், தாய்-மகள் மற்றும் சகோதரன்-சகோதரி ஆகியவற்றைக் கூறலாம். வளர்ந்துவரும் கல்வி, குறிப்பாகப் பெண்கள் கல்வி, தற்காலக் கருத்துக்களின் தாக்கம், பெண்களின் பொருளாதாரச் சுதந்திரம் ஆகியவற்றினால் குடும்ப அங்கத்தினர்களின் கடமை மற்றும் உரிமைகள் பெரும் மாறுதல்களுக்குட்பட்டு வருவதைக் காணலாம்.

ஒரு கூட்டுக்குடும்பத்தை எடுத்துக்கொண்டால் சொத்துக்கள் பங்கிடப்படாமல் இருப்பதையும் குடும்ப அங்கத்தினர்கள் எல்லோரும் ஒன்றாக உழைப்பதையும் வருவாயைத் தேவைக்கேற்றாற்போல் பங்கிட்டுக்கொள்வதையும் காணலாம். அத்தகைய குடும்பங்களில் குடும்ப அங்கத்தினர்களிடையே ஒருவித ஒருமைப்பாடும் ஒருவரை ஒருவர் தாங்க வேண்டுமென்ற கடமை உணர்வும் இருப்பதைக் காணலாம். அதோடு குடும்பத்தின் தலைவர் எவ்வளவு வயது சென்றவராகக் காணப்பட்டாலும் அவருடைய சொற்படி அல்லது அவருடைய ஆலோசனையின்படி ஏனைய அங்கத்தினர்கள் செயல்படுவதையும் அவருக்கு வண்டிய உதவிகளை ஏனைய அங்கத்தினர்கள் செய்வதையும் காணலாம். கூட்டுக்குடும்பங்கள் தனிக்குடும்பங்களாக மாறும்போது பொருளாதார நிலையிலும் மாறுதல்கள் ஏற்படுகிறது. சொத்துக்கள் பங்கிடப்படுவதையும் வருவாயின் தன்மை வேறுபடுவதையும் காணலாம் தனிக்குடும்பங்களை எடுத்துக் கொண்டால் சொத்திலிருந்துவரும் வருவாய் குறைவாகவும் அரசு ஊதியம், வியாபாரம் போன்ற வருவாய் அதிகமாகவும் காணப்படும். இந்நிலையில் குடும்ப அங்கத்தினர்களின் பங்கு மற்றும் குறிக்கோள் ஆகியவற்றிலும் வேறுபாடுகள் ஏற்படுவதுண்டு. குடும்பத்தலைவரின் வயது சென்ற நிலையில் சில சிக்கல்கள் ஏற்படுவதையும் காணலாம். குறிப்பாக ஓய்வுபெற்ற பின் அல்லது வருவாய் குறைந்த நிலையில் தங்கள் பிள்ளைகளைச் சார்ந்திருக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. பிள்ளைகள் வேலையின் காரணமோ அல்லது படிப்பின் காரணமோ சற்றுத் தூரத்தில் அல்லது வெகு தூரத்தில் வாழும்போது பெற்றோரைச் சரியாகக் கவனிக்க இயலாத நிலை ஏற்படுகிறது பொதுவாக இந்தியக் கிராமப்புறங்களில் பெற்றோர்கள் பிள்ளைகளைச் சார்ந்து வாழவதையோ அல்லது பிள்ளைகள் வாழும் இடத்துக்குச் சென்று வாழ்வதையோ விரும்புவதில்லை.

**தமிழகக் கிராம மக்களிடையே காணப்படும் குடும்ப அமைப்பு**

தமிழகக் கிராமங்களில் பெரும்பாலும் தனிக்குடும்பங்களாகவே காணப்படுகின்றன. ஆனால் கூட்டுக்குடும்பங்களும் காணப்படுகின்றன. இனி, கோவிலூர் மேலமாகாணம் பகுதிகளில் வாழும் பல்வேறு சாதி மக்களிடையே காணப்படும் குடும்ப அமைப்பினை ஆராயலாம்.

**பிராமணர்களின் குடும்ப அமைப்பு**

கோவிலூரில் மொத்த எட்டுப் பிராமணக்குடும்பங்கள் காணப்படுகின்றன. அவற்றில் ஐந்து குடும்பங்கள் தனிக்குடும்பங்களாகும். ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி மற்றும் திருமணமான ஒரு மகன், மருமகள் மற்றும் மூன்று பேரப்பிள்ளைகள் ஒன்றாக வாழ்ந்து வருகின்றனர். திருமணமான இன்னொரு மகன் சென்னையில் குடும்பமாக வாழ்ந்துவருகிறார். அவரோடு திருமணமாகாத இரண்டு இளைய சகோதரர்களும் சேர்ந்து வாழ்ந்து வருகிறார்கள். இக்குடும்பத்தில் குடும்பத்தலைவரின் ஒரு மகனின் குடும்பம் மட்டும் உள்ளூரில் இருப்பதால் அவர்கள் பெற்றோரோடு சேர்ந்து வாழ்கிறார்கள். இவ்வாறு அவர்கள் சேர்ந்து வாழ்வதற்குக் குடும்பப் பொருளாதாரம் ஒரு முக்கியக் காரணம் எனக் கூற இயலாவிட்டாலும் பொருளாதார நிலையில் ஒருவித இணைப்பு இருப்பதைக் காணலாம். அதாவது குடும்பத்தலைவர் அர்ச்சகராகப் பணிபுரிகிறார். அவரோடு சேர்ந்து வாழும் மகன் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார். மேலும் குடும்பத்தில் இளைய சகோதர்களுக்கு உதவவேண்டும் என்ற கடமை உணர்வு இருப்பதைக் காணமுடிகிறது.

ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி, திருமணமான ஒரு மகன் மருமகளும், இரண்டு பேரப்பிள்ளைகள் மற்றும் திருமணம்

ஆகாத ஒரு மகனும் இரண்டு பெண் பிள்ளைகளும் ஒன்றாக வாழ்ந்து வருகின்றனர். மேலும் திருமணமான இரண்டு ஆண் பிள்ளைகள் குடும்பமாகவும் திருமணமாகாத ஒரு ஆண் மகன் தனியாகவும் வேலையின் காரணமாக வெளி ஊர்களில் வாழ்ந்தும் வருகின்றனர். குடும்பத்தலைவரோடு சேர்ந்து வாழும் திருமணமான மகன் தஞ்சையில்வேலை பார்ப்பவர். திருமணமாகாத ஆண் மகன் அண்மையிலுள்ள பூண்டிக்கல்லூரியில் வேலை பார்ப்பவர். குடும்பச் சொத்துக்கள் இன்னமும் பங்கிடப்படாமல் உள்ளது. காரணம் திருமணமாகாத இரண்டு பெண் பிள்ளைகளும் ஒரு ஆண் மகனும் உள்ளனர். எனவே இவர்கள் கூட்டுக்குடும்பமாக வாழ்ந்து வருகின்றனர்.

ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி, திருமணமான ஒரு மகன், மருமகன் மற்றும் திருமணமாகாத மூன்று ஆண் பிள்ளைகள் ஒன்றாக வாழ்ந்துவருகின்றனர். குடும்பத்தலைவரும் திருமணமான மகனும் அர்ச்சகர்களாகப் பணிபுரிகின்றனர். திருமணமாகாத இளைய ஆண் பிள்ளைகளில் இருவர் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளனர். ஒருவர் படித்துக்கொண்டிருக்கிறார்.

தனிக்குடும்பமாகக் காணப்படும் ஐந்து குடும்பங்களில் ஒரு குடும்பத்திலிருந்து இரண்டு ஆண் பிள்ளைகளும் ஒரு குடும்பத்திலிருந்து ஒரு ஆண் மகனும் வேலையின் காரணமாகத் தனியாகச் சென்னையில் வாழ்ந்து வருகின்றனர்.

பிராமணர்களின் குடும்ப அமைப்பைப் பார்க்கும்போது கூட்டுக்குடும்பங்களின் தன்மையும் காணப்படுகிறது. இவர்களிடையே கூட்டுக்குடும்பங்கள் காணப்படுவதற்குக் குடும்பச் சொத்து அல்லது பொருளாதாரம் மட்டுமே காரணம் எனக் கூற இயலாத நிலை காணப்படுகிறது. அதோடு குடும்ப அங்கத்தினர்கள் வேலை பார்க்கும்

இடம், வேலையின் தன்மை, மற்றும் திருமணமாகாத இளைய சகோதர சகோதரரிகளைத் தாங்க வேண்டுமென்ற எண்ணம் ஆகியவையும் காணரங்களாக உள்ளன.

**வெள்ளாளர்களின் குடும்ப அமைப்பு:**

கோவிலூரில் மொத்தம் ஒன்பது வெள்ளாளர் குடும்பங்கள் காணப்படுகின்றன. இவர்களின் நான்கு குடும்பத்தினர் சோழிய வெள்ளாளர், நான்கு குடும்பத்தினர் இசை வெள்ளாளர், ஒரு குடும்பத்தினர் துளுவ வெள்ளாளர். இந்த ஒன்பது குடும்பங்களில் ஆறு குடும்பங்கள் தனிக்குடும்பங்களாகும். இவற்றில் ஒரு குடும்பத்தில் குடும்பத் தலைவியின் இளைய சகோதரன் படிப்பின் காரணமாக இவர்களோடு சேர்ந்து வாழ்கிறார். வயது சென்ற தாய் மட்டும் வாழும் குடும்பமும் காணப்படுகிறன்றது.

தனிக்குடும்பங்கள் தவிர ஏனைய மூன்று குடும்பங்களில் ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர் இறந்துவிட்டதால் இரண்டு ஆண்பிள்ளைகளும் குடும்பத்தலைவியின் தாயும் இளைய சகோதரன் ஒருவரும் சேர்ந்து வாழ்கிறார்கள். இக்குடும்ப அமைப்பினை கீழே காணப்படும் படத்தில் காணலாம்.



ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர் திருமணமான ஒரு மகன், மருமகள், இரண்டு பேரப்பிள்ளைகள் மற்றும் மணமாகாத ஒரு மகன் ஆகியோர் ஒன்றாக வாழ்ந்து வருகின்றனர். குடும்பத்தலைவி இறந்துவிட்டார். இவர்களுக்குச் சொந்த நிலம் இல்லை குடுத்பத்தலைவரும் திருமணமாகிய மகனும் கூலி வேலை செய்து வருகின்றனர். குடும்பத்தலைவி இறந்து விட்டது இவர்கள் ஒன்றாக வாழ்வதற்கு மிக முக்கியக் காரணமாக உள்ளது.

ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர் மற்றும் குடும்பத் தலைவி, திருமணமாகிய இரண்டு ஆண்பிள்ளைகள், இரண்டு மருமகள்கள், திருமணமாகாத ஒரு மகன், திருமணமாகியப் பிரிந்து வாழும் ஒரு மகள் ஆகியோர் ஒன்றாக வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் கோவிலூரில் காணப்படும் மிகப்பழமையான சிவன் கோவிலில் மெய்க் காவலர்களாகப் பணிபுரிகிறார்கள். அதோடு கோவிலுக்குச் சொந்தமான சுமார் மூன்று ஏக்கர் நஞ்செய் நிலமும் இவர்களிடம் உள்ளது. இவர்கள் ஒன்றாக வாழ்வதற்கு இவர்களிடம் உள்ள கோவில் நிலம் முக்கியக் காரணமாகக் காணப்படுகிறது.

கோவிலூரில் வாழும் வெள்ளாளர்கள் தற்போது பொருளாதார நிலையில் பின்தங்கியவர்களாகக் காணப்பட்டாலும் அவர்களிடையேயும் கூட்டுக்குடும்பங்களின் அம்சங்கள் காணப்படுகின்றன. இவர்களிடையே கூட்டுக்குடும்பங்களின் அம்சங்கள் காணப்படுவதற்குக் குடும்பத்தலைவர் அல்லது குடும்பத்தலைவியின் மரணம் மற்றும் கோவில் பூமி ஆகியவை முக்கியக் காரணங்களாகக் காணப்படுகின்றன. இவர்களிடையே காணப்படும் தனிக்குடும்பங்களை எடுத்துக் கொண்டால் ஒரு விதவை மட்டும் வாழும் குடும்பம் முதல் பெற்றோர் மற்றும் ஐந்து பிள்ளைகள் வாழும் குடும்பங்களும் காணப்படுகின்றன.

**கோனார் சாதியினரின் குடும்ப அமைப்பு:**

கோவிலூர், மேலமாகாணம் பகுதியில் நான்கு கோனார் குடும்பத்தினர் வாழ்ந்து வருகின்றனர். இவர்களில் மூன்று குடும்பத்தினர் தனிக்குடும்பமாகவும் ஒரு குடும்பத்தினர் கூட்டுக்குடும்பமாகவும் காணப்படுகின்றனர். கூட்டுக்குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி, நான்கு பெண் பிள்ளைகள் மற்றும் குடும்பத்தலைவரின் திரமணமாகாத இளைய சகோதரன் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். அதோடு புதிதாக திருமணமாகிய ஒரு சகோதரனும் மனைவியும் தனிச் சமையல் செய்து இதே வீட்டில் வாழ்ந்து வருகின்றனர். இங்கு, குடும்பத்தின் பெற்றோர் இறந்துவிட்டதால் மூத்த மகன் இளைய சகோதரர்களைத் தாங்க வேண்டும் என்ற கடமை உணர்வினால் ஒன்றாக வாழ்வதைக் காணலாம்.

ஒரு தனிக்குடும்பத்தில் குடும்பத்தலைவியின் தாயும் சேர்ந்து வாழ்கிறார். காரணம் குடும்பத்தலைவி ஒரு மகளாக இருப்பதாகும். வேறொரு தனிக்குடும்பத்தில் குடும்பத்தலைவரின் தாய் சேர்ந்து வாழ்கிறார். இத்தாய் சில நாட்கள் மகன் வீட்டிலும், சில நாட்கள் மகள் வீட்டிலுமாக வாழ்ந்து வருகிறார். ஆனால் குடும்பச் சொத்தை ஆண் பிள்ளைகளுக்குக் கொடுத்துவிட்டார்.

**தேவர் சாதியினரின் குடும்ப அமைப்பு:**

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் ஆறு தேவர் குடும்பங்கள் காணப்படுகின்றன. இவற்றில் ஐந்து குடும்பங்கள் தனிக்குடும்பங்களாகும். நான்கு குடும்பங்கள் தனித்தனியாகச் சமையல் செய்து ஒரே வீட்டில் வாழ்ந்து வருகின்றனர். நான்கு குடும்பத்தலைவர்களும் சகோதரர்களாகும். ஒருவரின் முதல்

மனைவிக்கு குழந்தைகள் இல்லாதாலல் மனைவியின் இளைய சகோதரியையும் திருமணம் செய்துள்ளார். இவர்களோடு மனைவியின் பெற்றோரும் சேர்ந்து வாழ்கிறார்கள். இக்குடும்பத்தின் அமைப்பைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள வரைபடத்தில் காணலாம்.




ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி, ஒரு மகன் மற்றும் குடும்பத்தலைவியின் பெற்றோர் ஆகியோர் ஒன்றாக வாழ்ந்து வருகின்றனர். இங்குக் குடும்பத்தலைவர் ஒரே மகனாக இருப்பதாலும் அவருடைய பெற்றோர் இறந்துவிட்ட காரணத்தாலும் குடும்பத் தலைவியின் பெற்றோர் இவர்களோடு சேர்ந்து வாழ்கிறார்கள்.

**செட்டியார் சாதியினரின் குடும்ப அமைப்பு**

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் நான்கு செட்டியார் சாதியைச் சேர்ந்த குடும்பங்கள் காணபபடுகின்றன. இவர்கள் அனைவரும் வாணிகச் செட்டியார்களாவர். நான்கு குடும்பங்களும்

தனிக்குடும்பங்களாகவே காணப்படுகின்றன. ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவரின் தாய் சேர்ந்து வாழ்ந்து வருகின்றார். ஒரு குடும்பத்தில் திருமணமாகாத இரண்டு சகோதரர்கள் மட்டும் வாழ்ந்து வருகிறார்கள். இவர்கள் இருவரும் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளனர். நான்கு குடும்பங்களில் இரண்டு குடும்பத்தினர் வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளனர்.

**ஆசாரி சாதியினரின் குடும்ப அமைப்பு:**

கோவிலூரில் மொத்தம் பதினொன்று ஆசாரி குடும்பங்கள் காணப்படுகின்றன. இதில் மூன்று குடும்பங்களைத் தவிர அனைத்து குடும்பங்களும் தனிக்குடும்பங்களாகும். ஒரு குடும்பத்தில் குடும்பத் தலைவர் வெளிநாடு சென்றுள்ளார். அவருடைய மனைவி, இரண்டு இளைய சகோதரர்கள், ஒரு இளைய சகோதரி ஆகியோர் சேர்ந்து வாழ்கின்றனர். ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், ஒரு மருமகள், ஐந்து ஆண் பிள்ளைகள் மற்றும் ஒரு பேரன் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். மூத்த மகன் வெளிநாடு சென்றுள்ளதால் மருமகளும் பேரனும் இவர்களோடு வாழ்கிறார்கள். இதேப்போன்று இன்னொரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி, ஐந்து ஆண்பிள்ளைகள் மற்றும் மூத்த மகனின் மனைவி ஆகியோர் ஒன்றாக வாழ்ந்துவருகின்றார். மூத்த மகன் வெளிநாடு சென்றுள்ளார். இன்னொரு குடும்பத்தில் குடும்பத்தலைவர். தலைவி, திருமணமான ஒரு மகன், மருமகள், ஒரு பேரன் மற்றும் திருமணமாகாத இளைய மகன் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர்

ஆசாரி சாதியினரின் குடும்ப அமைப்பைப் பார்க்கும் போது பெரும்பாலும் தனிக்குடும்பங்களாகவே காணப்படுகின்றன. ஆனால் குடும்ப அங்கத்தினர்களில் யாராவது வெளிநாடுகளில் அல்லது தூர இடங்களில் பணிபுரியும்போது அவருடைய மனைவி பிள்ளைகள்

தனியாகப் பிரிந்துசெல்லாமல் கணவனின் பெற்றோரோடு சேர்ந்து வாழ்வதைக் காணமுடிகிறது.

**நாடார் சாதியினரின் குடும்ப அமைப்பு:**

வேலிலூர் மேலமாகாணம் பகுதியில் நாடார் சாதியைச் சேர்ந்த மூன்று குடும்பங்கள் மட்டுமே உள்ளன. ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி, திருமணமாகிய ஒரு மகன், மருமகள் மற்றும் திருமணமாகாத ஒரு மகன் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். ஒரு குடும்பத்தில் குடும்பத் தலைவர், தலைவி, திருமணமாகிய ஒரு மகன், மருமகள், இரண்டு பேரப்பிள்ளைகள் திருமணமாகாத மூன்று ஆண் பிள்ளைகள் மற்றும் ஒரு மகள் ஆகியோர் ஒன்றாக வாழ்ந்து வருகின்றனர். இன்னொரு குடும்பத்தினர் தனிக்குடும்பமாகவே காணப்படுகின்றனர். இம்மூன்று குடும்பத்தினரும் வெளி ஊர்களிலிருந்து அண்மையில் இங்கு வந்து குடியேறியவர்களாகும்.

**அகமுடையார் சாதியினரின் குடும்ப அமைப்பு:**

கோவிலூரில் மொத்தம் பதினேழு அகமுடையார்க் குடும்பங்கள் காணப்படுகின்றன. இவற்றில் ஒரு குடும்பம் தவிர அனைத்து குடும்பங்களும் தனிக்குடும்பங்களாகும். ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி, தாய், தாயின் மூத்த சகோதரிகள் இரண்டு பேர், இளைய சகோதரர்கள் இரண்டு பேர் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர்.

இவர்களின் பாரம்பரிய தொழில் விவசாயமாகக் காணப்பட்டாலும் பெரும்பான்மையோர் நிலமற்றவர்களாகவே காணப்படுகின்றனர். பொருளாதார நிலையில் மிகவும் பின்தங்கியுள்ளார்கள். தொழில் அடிப்படையில் பார்க்கும்போது

இவர்கள் பல்வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ளனர். அதாவது மீன் வியாபாரம், காய்கறி வியாபாரம், டீக் கடை, கூலி வேலை, பூசாரி வேலை போன்ற வேலைகளில் ஈடுபட்டுள்ளனர். குடும்ப அங்கத்தினர்களில் சிலர் வேலையின் காரணமாகப் பிற ஊர்களில் வாழ்ந்து வருகின்றனர். அகமுடையார்ச் சாதியினரிடம் கூட்டுக்குடும்பங்கள் இல்லாமல் காணப்படுவதற்கு அவர்களின் பொருளாதாரம் மற்றும் நிரந்தரப் பணியின்மை ஆகியவை முக்கியக் காரணங்களாகக் காணப்படுகின்றன.

**கள்ளர் சாதியினரின் குடும்ப அமைப்பு:**

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் மொத்தம் பதினெட்டுக் கள்ளர் குடும்பங்கள் காணப்படுகின்றன இவற்றில் மூன்று குடும்பங்கள் தவிர ஏனைய அனைத்துக் குடும்பங்களும் தனிக் குடும்பங்களாகும் கூட்டுக்குடும்பங்களாகக் காணப்படும் மூன்று குடும்பத்தினரும் பெருநிலச் சுவாந்தார்களாவர் தனிக் குடும்பங்களை எடுத்துக்கொண்டால் ஒரு விதவை மட்டும் வாழும் குடும்பம் முதல் ஐந்து அல்லது ஆறு பிள்ளைகளும் பெற்றோரும் வாழும் குடும்பங்கள் வரை காணப்படுகின்றன ஒரு தனிக்குடும்பத்தில் குடும்பத்தலைவி ஒரே மகளாகக் காணப்படுவதால் குடும்பத்தலைவர் இங்கு வந்து வாழ்கிறார்

கூட்டுக்குடும்பங்களாகக் காணப்படும் குடும்பங்களில் ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி, திருமணமான ஒரு மகள், மருமகன் மற்றும் ஐந்து பேரப்பிள்ளைகள் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். இன்னொரு குடும்பத்தில் குடும்பத் தலைவர், தலைவி,

திருமணமான ஒரு மகன், மருமகள் மற்றும் ஒரு பேரன், திருமணமாகாத மூன்று ஆண் பிள்ளைகள் மற்றும் ஒரு மகள் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர் திருமணமான மகன் அண்மையிலுள்ள பூண்டிக் கல்லூரியில் பணிபுரிவதாலும் சொத்துக்கள் பங்கிடப்படாமல் இருப்பதாலும் தனியாகப் பிரிந்து செல்லாமல் இருக்கிறார். இன்னொரு குடும்பத்தில் குடும்பத்தலைவி, திருமணமான ஒரு மகன், மருமகள் மற்றும் ஒரு பேரக்குழந்தை, திருமணமாகாத இரண்டு ஆண் பிள்ளைகள் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். குடும்பத்தலைவி வடக்குக் கோட்டை என்ற ஊரைச்சேர்ந்தவர். இவர்கள் பெற்றோருக்கு ஒரே மகளாக இருப்பதால் இவர்களின் மூத்த மகன் குடும்பமாக வடக்குக் கோட்டையில் சென்று வாழ்கிறார். இவ்வாறு மகன் தாய் வீட்டில் சென்று வாழ்வது தாயின் சொத்தைச் சுதந்தரிப்பதற்காகவேயாகும். ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவரின் தகப்பன் சேர்ந்து வாழ்கிறார்.

கள்ளர் சாதியில் பெரும் நிலச்சுவாந்தார்களாகக் காணப்படுபவர்களிடம் கூட்டுக்குடும்பங்களின் தன்மை காணப்படுகிறது மேலும் இவர்களிடையே வெளி ஊர்களில் சென்று பணிபுரிபவர்களின் எண்ணிக்கை மிகக்குறைவாகக் காணப்படுகிறது. ஒருவர் மட்டும் வேலையின் காரணமாகத் திருச்சியில் வாழ்ந்து வருகிறார். விவசாயம் தவிர ஏனைய தொழில்களில் ஈடுபடுகிறவர்களின் எண்ணிக்கையும் மிகக்குறைவாகக் காணப்படுகிறது. தனிக் குடும்பங்களை எடுத்துக்கொண்டால் ஒரு விதவை மட்டும் வாழும் குடும்பம் முதல் பெற்றோர் மற்றும் ஐந்து பிள்ளைகள் வரை வாழும் குடும்பங்களும் காணப்படுகின்றன.

**முகமதியர்களின் குடும்ப அமைப்பு:**

கோவிலூர் மேல மாகாணம் பகுதியில் இருபத்தொரு முகமதிய குடும்பங்கள் காணப்படுகின்றன. இவற்றில் ஒன்பது குடும்பங்கள் கூட்டுக்குடும்பங்களாகவே காணப்படுகின்றன. தனிக் குடும்பங்களைப் பார்க்கும்போது பெற்றோரும் ஒரு குழந்தையும் வாழும் சிறிய குடும்பம் முதல் பெற்றோரும் எட்டுப் பிள்ளைகள் வரை வாழும் பெரிய குடும்பங்களும் காணப்படுகின்றன. ஒரு சில குடும்பங்களில் சேர்ந்து வாழும் தாய் அல்லது தகப்பன் காணப்படுகிறார்கள்.

கூட்டுக்குடும்பங்களை எடுத்துக்கொண்டால் ஒரு குடும்பத்தில் குடும்பத் தலைவர், தலைவி, திருமணமான ஒருமகன், மருமகள், இரண்டு பேரப்பிள்ளைகள், திருமணமாகாத எட்டு ஆண் பிள்ளைகள், மற்றும் திருமணமாகாத இரண்டு பெண் பிள்ளைகள் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். இக்குடும்பத்தின் வரைபடம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.



இன்னொரு குடும்பத்தில் குடும்பத்தலைவி, திருமணமான ஒரு மகன், மருமகள் மற்றும் நான்கு பேரப்பிள்ளைகள், திருமணமான இன்னொரு மகன், மருமகள் மற்றும் ஒரு பேரக்குழந்தை, வெளிநாட்டில் வேலைபார்க்கும் ஒரு மகனின் மனைவியும் ஒரு பேரக்குழந்தையும் மற்றும் திருமணமாகாத ஒரு மகன் ஆகியோர் ஒன்றாக சேர்ந்து வாழ்கின்றனர். இக்குடும்பத்தின் வரைபடம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.




இன்னொரு குடும்பத்தில் திருமணமான மகன், மருமகள், ஆறு பேரப்பிள்ளைகள் ஆகியோர் ஒன்றாக வாழ்கிறார்கள். ஒரு குடும்பத்தில் குடும்பத் தலைவர், தலைவி, வெளிநாட்டில் வேலைபார்க்கும் ஒரு மகனின் மனைவி, திருமணமாகாத மூன்று ஆண் பிள்ளைகள் மற்றும் திருமணமாகாத ஒரு மகள் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். திருமணமாகாத இன்னொரு மகனும் வெளிநாட்டில்

வேலைபார்க்கிறார். இன்னொரு குடும்பத்தில் குடும்பத்தலைவி, மகன், மருமகள், மற்றும் நான்கு பேரப்பிள்ளைகள் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். மகன் வெளிநாட்டில் வேலைபார்க்கிறார். இன்னொரு குடும்பத்தில் குடும்பத் தலைவர், விதவையாகிய ஒரு மகள், திருமணமாகிய ஒரு மகன், மருமகள் மற்றும் ஒன்பது பேரப்பிள்ளைகள் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி, ஒரு மருமகள், ஒரு பேரக்குழந்தை ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். மகன் வெளிநாட்டில் வேலை பார்க்கிறார்.

முகதியர்களின் குடும்ப அமைப்பைப் பார்க்கும்போது கூட்டுக்குடும்பங்களின் தன்மை ஏனைய சாதியினரைவிடச் சற்றுக் கூடுதலாகக் காணப்படுகிறது. குறிப்பாகத் திருமணத்துக்குப்பின் வெளிநாடுகளில் வேலைப்பார்ப்பவர்களின் குடும்பங்கள் கூட்டுக் குடும்பங்களாகவே காணப்படுகின்றன. திருமணமாகாத பல நபர்களும் வெளிநாடுகளில் வேலைபார்த்து வருகிறார்கள். பொருளாதார அடிப்படையில் பார்க்கும்போது ஏனைய சாதியினரைவிடச் சற்று முன்னேறியுள்ளார்கள். பெரும்பாலானோர் வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளனர். ஒருசில குடும்பத்தினர் மட்டும் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளார்கள்.

**வண்ணார் சாதியினரின் குடும்ப அமைப்பு:**

கோவிலூரில் வண்ணார் சாதியைச் சேர்ந்த நான்கு குடும்பங்கள் மட்டுமே காணப்படுகின்றன. இந்நான்கு குடும்பங்களும் தனிக்குடும்பங்களாகும். ஒரு குடும்பத்தில் மட்டும் குடும்பத்தலைவர்

இறந்துவிட்டதால் குடும்பத்தலைவியின் இளைய சகோதரன் சேர்ந்து வாழ்கிறார். ஒரு விதவை மட்டும் வாழும் வீடும் காணப்படுகிறது. பொருளாதார நிலையில் அனைவரும் மிகவும் பின்தங்கிய நிலையில் உள்ளனர்.

**நாவிதர் சாதியினரின் குடும்ப அமைப்பு:**

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் இரண்டு நாவிதர் குடும்பங்கள் மட்டுமே காணப்படுகின்றன. ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர், தலைவி மற்றும் ஐந்து பிள்ளைகள் ஆகியோர் வாழ்ந்து வருகின்றனர். இன்னொரு குடும்பத்தில் குடும்பத் தலைவரின் இளைய சகோதரனின் மகன் சேர்ந்து வாழ்கிறார். பொருளாதார நிலையில் மிகவும் பின்தங்கியுள்ளனர்.

**பள்ளர் சாதியினரின் குடும்ப அமைப்பு:**

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் பள்ளர் சாதியைச் சேர்ந்த ஐம்பத்தாறு குடும்பங்கள் காணப்படுகின்றன. இவற்றில் பெரும்பாலானவை ஆண் தலைமையுடைய தனிக்குடும்பங்களாகும். பள்ளர் சாதியினரின் குடும்ப அமைப்பைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையில் காணலாம்.

## பள்ளர் சாதியினரின் குடும்ப அமைப்பு

| வ.எண் | மாதிரிக்குடும்பங்கள் | எண்ணிக்கை | விழக்காடு |
|---|---|---|---|
| 1. | ஆண் தலைமையுடைய தனிக் குடும்பம் | 38 | 67.85 |
| 2. | தாய், தகப்பன் மட்டும் வாழும் குடும்பம் | 7 | 12.5 |
| 3. | தாய் மட்டும் வாழும் குடும்பம் | 1 | 178 |
| 4. | தகப்பன் மட்டும் வாழும் குடும்பம் | 1 | 178 |
| 5. | குடும்பத்தலைவரின் மூத்தசகோதரி சேர்ந்து வாழும் குடும்பம் | 1 | 178 |
| 6. | இணைக்கப்பட்ட தாய் உடைய குடும்பம் | 3 | 5.35 |
| 7 | இணைக்கப்பட்ட தகப்பன் உடைய குடும்பம் | 1 | .178 |
| 8. | குடும்பத்தலைவியும் பிள்ளைகளும் வாழும் குடும்பம் | 2 | 3.57 |
| 9. | பெற்றோர், திருமணமான இரண்டு ஆண் பிள்ளைகள், மருமகள், மற்றும் திருமணமாகாத இரண்டு பிள்ளைகள் உடைய குடும்பம் | 1 | 178 |
| 10. | பெற்றோர், திருமணமான மகள், மருமகள், பேரக்குழந்தை மற்றும் திருமணமாகாத இரண்டு பெண் பிள்ளைகள் வாழும் குடும்பம் | 1 | 178 |

ஆண் தலைமையுடைய தனிக்குடும்பங்கள் 67.85 விழுக்காடு காணப்படுகின்றன. இவர்களிடையே பெரும்பாலும் திருமணமான சில நாட்களுக்குள்ளேயே தனிக்குடித்தனம் அமைத்துவிடுகின்றனர். தங்கள் பூர்வீக வீட்டில் அல்லது அண்மையிலேயே வாழ்ந்துவருகின்றனர். வெளி ஊர்களில் சென்று குடியேறுகிறவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாகும். ஆனால் திருமணத்தின் மூலம் இணைக்கப்பட்ட வெளி ஊரைச்சேர்ந்தவர்கள் பலர் இங்கு வந்து குடியேறியுள்ளனர். இதற்குக் காரணம் பள்ளர் சாதியைச் சேர்ந்தவர்கள் விவசாயக்கூலிகளாகக் காணப்படுபதும் கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் நஞ்செய் நிலங்கள் அதிகமாகக் காணப்படுவதுமேயாகும்.

வயது சென்ற பெற்றோரின் வாழ்க்கை நிலையைப் பார்க்கும்போது அவர்கள் நிரந்தரமாக ஏதாவது ஒரு மகனோடு அல்லது மகளோடு சேர்ந்து வாழாமல் இருப்பதைக் காணமுடிகிறது. பெரும்பாலும் தனித்து வாழ்வதையே விரும்புகின்றனர். சான்றாக இரத்தினம்மாள் என்ற வயது சென்ற தாயின் கணவன் இறந்துவிட்டார். அவருடைய ஒரே மகன் திருச்சியில் வசதியாக வாழ்ந்துவருகிறார். தாய் மகனோடு சேர்ந்து வாழ விரும்பாமல் மேலமாகாணத்திலேயே தனியாக வாழ்ந்துவருகிறார்கள். இன்னொரு குடும்பத்தில் குடும்பத்தலைவி இறந்துவிட்டார். அவர்களுக்கு மூன்று மகனும் ஒரு மகளும் உள்ளனர். அனைவரும் திருமணமாகித் தனிக்குடித்தனம் அமைத்துள்ளனர். வயது சென்ற தகப்பன் பெரும்பாலும் சித்தர்காடு என்ற ஊரில் காணப்படும் மகளின் வீட்டிலேயே வாழ்ந்துவருகிறார். மேலமாகாணத்தில் மூன்று மகன்கள் காணப்பட்டபோதிலும் நிரந்தரமாக இங்கு வாழ்வதில்லை. காரணம் சித்தர் காட்டில் வேலை

அதிகமாக உள்ளதால் பெரும்பாலும் அங்கேயே இருப்பதாகக் கூறுகின்றனர். குடும்பச்சொத்து இல்லாமல் இருப்பது வயது சென்ற பெற்றோரின் நிரந்தரமற்ற வாழ்க்கைக்கு முக்கியக் காரணமாகக் காணப்படுகிறது. தகப்பன் மட்டும் வாழும் குடும்பத்தை எடுத்துக் கொண்டால் அவருடைய பிள்ளைகளோடு வாழ விரும்பாமல் தனியாக வாழ்பவராகும் குடும்பம் ஆகும்.

குடும்பபத்லைவரின் மூத்த சகோதரி சேர்ந்தவாழும் குடும்பத்தை எடுத்துக்கொண்டால் மூத்த சகோதரியின் கணவன் இறந்துவிட்டதால் இவரோடு சேர்ந்து வாழ்கிறார்கள். இணைக்கப்பட்ட தாயை உடைய குடும்பங்கள் மூன்று உள்ளன. ஆனால் இணைக்கப்பட்ட தகப்பனை உடைய குடும்பங்கள் ஒன்று மட்டுமே உள்ளது. குடும்பத்தலைவியும் பிள்ளைகளும் வாழும் இரண்டு குடும்பங்களில் ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர் இரண்டாவது திருமணம் செய்து தனியாக வாழ்ந்துவருகிறார். இன்னொரு குடும்பத்தில் குடும்பத்தலைவர் இறந்துவிட்டர்.

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் காணப்படும் ஐம்பத்தாறு பள்ளர் குடும்பங்களில் இரண்டு குடும்பங்கள் மட்டும் கூட்டுக்குடும்பங்களாகக் காணப்படுகின்றன.

**பறையர் சாதியினரின் குடும்ப அமைப்பு:**

மேலமாகாணம் பகுதியில் பறையர் சாதியைச் சேர்ந்த நாற்பத்தாறு குடும்பங்கள் காணப்படுகின்றன. இவற்றில் இருபத்தொரு குடும்பத்தினர் இந்து மதத்தைச் சேர்ந்தவர்களும்

இருபத்தைந்து குடும்பத்தினர் கிறித்தவ மதத்தைச் சேர்ந்தவர்களுமாவர். இவர்களிடையே குடும்ப அமைப்பு மற்றும் பொருளாதார நிலையில் மிகுந்த வேறுபாடுகள் இல்லாவிட்டாலும் சிறு வேறுபாடுகள் உள்ளன. கிறித்தவப் பறையர்கள் தங்கள் மதப்போதகரின் உதவியோடு வங்கி மற்றும் அரசு கடனுதவி பெற்று ஓட்டுவீடு கட்டியுள்ளார்கள். குடும்ப அமைப்பை எடுத்துக்கொண்டால் கிறித்தவப் பறையர்களிடையே அனைத்து குடும்பங்களும் தனிக்குடும்பங்களாகும். இந்து பறையர்களிடையே இரண்டு குடும்பங்கள் கூட்டுக்குடும்பத்தன்மையை உடையவையாகக் காணப்படுகின்றன. வயது சென்ற பெற்றோர் சேர்ந்துவாழும் குடும்பங்கள் கிறித்தவப் பறையர்களிடையே கூடுதலாகக் காணப்படுகின்றன. இந்துப் பறையர்களிடையே இரண்டு மனைவி உடைய குடும்பங்கள் மூன்று காணப்படுகின்றன. ஆனால் கிறித்தவ பறையர்களிடையே எந்த குடும்பத்திலும் இரண்டு மனைவி இல்லை. இவர்களின் குடும்ப அமைப்பினைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையில் காணலாம்.

**பறையர்களின் குடும்ப அமைப்பு**

| வ.எண் | மாதிரிக்குடும்பங்கள் | எண்ணிக்கை இந்துக் | எண்ணிக்கை கிறித்தவர் | விழுக்காடு இந்துக் | விழுக்காடு கிறித்தவர் |
|---|---|---|---|---|---|
| 1. | ஆண் தலைமையுடைய தனிக்குடும்பம் | 11 | 15 | 23.91 | 32.60 |
| 2. | கணவன் மனைவி மட்டும் வாழும் குடும்பம் | 2 | 2 | 4.35 | 4.35 |

| | | | | |
|---|---|---|---|---|
| 3. குடும்பத்தலைவரும் திருமணமாகாத பிள்ளைகளும் வாழும் குடும்பம் | 1 | - | 2.17 | - |
| 4. குடும்பத்தலைவியும் திருமணமாகாத பிள்ளைகளும் வாழும் குடும்பம் | 1 | - | 2.17 | - |
| 5. இணைக்கப்பட்ட தாயை உடைய குடும்பம் | 1 | 2 | 2.17 | 4.35 |
| 6. இணைக்கப்பட்ட தகப்பனை உடைய குடும்பம் | - | 3 | - | 6.52 |
| 7. குடும்பத்தலைவியின் தாய் சேர்ந்துவாழும் குடும்பம் | - | 1 | - | 2.17 |
| 8. இணைக்கப்பட்ட பெற்றோரை உடைய குடும்பம் | - | 1 | - | 2.17 |
| 9. ஒரு விதவை மட்டும் வாழும் குடும்பம் | - | 1 | - | 2.17 |
| 10. குடும்பத்தலைவர் இரண்டு மனைவி மற்றும் பிள்ளைகள் வாழும் குடும்பம் | 2 | - | 4.35 | - |
| 11. இரண்டு குடும்பத் தலைவிகள் மற்றும் பிள்ளைகள் வாழும் குடும்பங்கள் | 1 | - | 2.17 | - |
| 12. பெற்றோர், திருமணமான மகன், மருமகள் மற்றும் திருமணமாகாத பிள்ளைகள் வாழும் குடும்பம் | 2 | - | 4.35 | - |

பறையர்களிடையே காணப்படும் தனிக்குடும்பங்களை எடுத்துக்கொண்டால் பெற்றோர் மற்றும் ஒரு குழந்தை மட்டும் வாழும் சிறிய குடும்பம் முதல் பெற்றோர் மற்றும் ஐந்து பிள்ளைகள் வாழும் பெரிய குடும்பங்கள் வரை காணப்படுகின்றன. வேலையின் நிமித்தம் அல்லது படிப்பின் நிமித்தம் வெளி ஊர்களில் வாழும் அங்கத்தினர்களின் எண்ணிக்கை மிகக்குறைவாகும். இருபத்தைந்து கிறித்தவப் பறையர் குடும்பங்களின் அங்கத்தினர்களில் ஒருவர் மட்டும் கேரளாவில் கூலி வேலை பார்த்து வருகிறார். இருபத்தொரு இந்துப் பறையர் குடும்பங்களின் அங்கத்தினர்களில் ஒருவர் லடாக்கில் இராணுவத்தில் வேலை பார்க்கிறார். ஒருவர் சென்னையில் கூலி வேலை பார்க்கிறார். திருமணத்தின் மூலம் இணைக்கப்பட்ட வெளி ஊர்களைச் சேர்ந்த உறவினர்களில் சிலர் மேலமாகாணம் பகுதியில் குடியேறியுள்ளனர். பறையர் சாதியினரிடையே வயது சென்ற பெற்றோரின் வாழ்க்கை நிலையைப் பார்க்கும் போது தனித்து வாழும் பெற்றோர் எவரும் இல்லை. ஒரு விதவைக்குப் பிள்ளைகள் இல்லாததால் தனித்து வாழ்கிறார்கள். ஏனைய பெற்றோர்கள் நிரந்தரமாக ஏதாவது ஒரு மகனோடு அல்லது மகளோடு சேர்ந்து வாழ்வதைக் காணமுடிகிறது. கணவனும் மனைவியும் சேர்ந்து வாழும் நான்கு குடும்பங்களும் உள்ளன. இந்துப் பறையர்களிடையே இரண்டு குடும்பங்கள் மட்டும் கூட்டுக்குடும்பங்களாகக் காணப்படுகின்றன. ஒரு குடும்பத்தில் பெற்றோர், திருமணமான ஒரு மகன், மருமகள் மற்றும் திருமணமாகாத மகன் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர். இன்னொரு குடும்பத்தில் பெற்றோர், திருமணமான இரண்டு ஆண் பிள்ளைகள், மருமக்கள், பேரப்பிள்ளைகள் மற்றும் திருமணமாகாத இரண்டு பிள்ளைகள் ஆகியோர் ஒன்றாக வாழ்கின்றனர்.

பறையர் சாதியினரின் குடும்ப அமைப்பில் கூட்டுக் குடும்பத்தில் தன்மை மிகக்குறைவாகக் காணப்படுவதற்குக் காரணம் இவர்களின் பொருளாதாரம் மற்றம் வேலையின் தன்மை ஆகியவையாகும். அனைவரும் நிலமற்ற விவசாயக் கூலிகளாகும். முன்னர்க் குறிப்பிட்டுள்ளவண்ணம் சுமார் எட்டு வருடங்களுக்கு முன் வரையில் இவர்கள் பெரும் நிலச்சுவாந்தார்களுக்கு விவசாய அடிமைகளாகக் காணப்பட்டவர்களாகும். இவர்களுக்கு விவசாயக் கூலியைத் தவிரக் குடும்ப அங்கத்தின்ர்களுக்குப் பொதுவான வருவாய் எதுவும் இல்லை. இரண்டாவது எல்லோரும் உள்ளூரிலேயே வேலைபார்ப்பதால் மனைவி, பிள்ளைகள், பெற்றோரோடு சேர்ந்து வாழவேண்டிய நிலையும் ஏற்படவில்லை. எனவே கூட்டுக்குடும்பம் மிகக் குறைவாக உள்ளன.

கோவிலூர் மேலமாகாணம் கிராமப்பகுதியில் வாழும் பல்வேறு சாதி மக்களின் குடும்ப அமைப்பைப் பார்க்கும்போது பெரும்பாலும் தனிக்குடும்படக்ளாகவே காணப்படுகின்றன. ஆனால் குறிப்பிட்ட சில சாதியினரிடம் கூட்டுக்குடும்பங்களின் தன்மையும் காணப்படுகிறது. பெரும் நிலச்சுவாந்தார்களின் குடும்பங்களில் குடும்ப அங்கத்தினர்களுக்குப் பொதுவான வருவாய் காணப்படுவதாலும் நிலங்களைக் கவனிப்பதில் சகோதரர்களுக்கிடையே ஒருவிதக் கூட்டு முயற்சி காணப்படுவதாலும் கூட்டுக்குடும்பங்களின் நிலவல் அதிகமாக உள்ளன. அவ்வாறு கூட்டுக்குடும்பங்களின் நிலவுதலுக்கு குடும்ப சொத்து மற்றும் பொருளாதாரம் மட்டும் காரணமென கூற முடியாத நிலமையும் காணப்படுகிறது. குடும்ப அங்கத்தினர்கள் வேலைபார்க்கும் இடம், வேலையின் தன்மை மற்றும் திருமணமாகாத இளைய சகோதர

சகோதரிகளுக்கு உதவவேண்டுமென்ற எண்ணம் ஆகியவையும் கூட்டுக்குடும்பத்தின் நிலவுதலுக்கு முக்கியக் காரணங்களாகின்றன. இன்னும் சிலவேளைகளில் குடும்பத்தில் முக்கிய அங்கத்தினர்களின் மரணம்; ஏனைய அங்கத்தினர்கள் பிரிந்து செல்லாமல் இருப்பதற்குக் காரணமாக அமைகிறது. குடும்பச் சொத்து மற்றும் பொருளாதார வசதியற்ற பிரிவினரிடம் கூட்டுக்குடும்பங்கள் மிகக்குறைவாகக் காணப்படுகின்றன. அத்தகைய பிரிவினரிடத்தில் வயது சென்ற பெற்றோரின் வாழ்வில் சில பிரச்சனைகள் ஏற்படுவதையும் காணமுடிகிறது. சில பெற்றோர்கள் சில நாட்கள் மகன் வீட்டிலும் சில நாட்கள் மகள் வீட்டிலுமாக வாழ்ந்து வருகின்றனர். அத்தகைய பெற்றோரின் வாழ்வில் காணப்படும் ஒருவித நிரந்தரமற்ற தன்மை குடும்பச் சொத்து மற்றும் பொருளாதார வசதிபடைத்த பிரிவினரிடத்தில் உள்ள பெற்றோரிடம் காணப்படவில்லை. சற்று பொருளாதார வசதி படைத்த குடும்பங்களில் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகள் தனிக்குடும்பம் அமைத்துப் பிரிந்து செல்வதை விரும்பாமல் உள்ளனர். அவ்வாறு பிரிந்துசெல்லும் பிள்ளைகளைப் பொறுப்பற்றவர்கள் என்றும் சுயநலவாதிகள் என்றும் கருதுகின்றனர்.

சில சூழ்நிலைகளில் தனிக்குடும்பங்கள் கூட்டுக்குடும்பங்களாக மாறுவதையும் காணமுடிகிறது. சான்றாக முகமதியர், ஆசாரி போன்ற சாதியினரில் பலர் வெளிநாடுகளுக்குச் சென்று வேலை பார்க்கின்றனர். இங்குத் தனிக்குடும்பமாக வாழும் குடும்பத் தலைவருக்கு வெளிநாட்டில் வேலை கிடைக்கும்போது தன் மனைவி பிள்ளைகளை அங்குக் கொண்டு செல்ல இயலாத நிலை ஏற்படுகிறது. இந்நிலையில் சிலர் தங்கள் மனைவி, பிள்ளைகளைத் தங்கள் பெற்றோரின் குடும்பத்தோடோ அல்லது சகோதரர்களின் குடும்பத்தோடோ சேர்த்து

வாழச்செய்கின்றனர். அப்போது தனிக்குடும்பங்கள் கூட்டுக்குடும்பங்களாகின்றன. இவ்வாறு குடும்ப அமைப்பில் ஏற்படும் மாறுதல்கள் ஒரே சீரானவை என்றும் கூற இயலாது. கூட்டுக்குடும்பங்கள் தனிக்குடும்பங்களாக மாறுவதையும், தனிக்குடும்பங்கள் கூட்டுக்குடும்பங்களாக மாறுவதையும் பார்க்கும்போது ஒருவிதச் சுழல் மாற்றம் மாகவே (Cyclic change) காணப்படுகிறது.

**குடும்ப அங்கத்தினர்களுக்கிடையிலான உறவுகள்:**

ஒரு குடும்பத்தில் அங்கத்தினர் என்பது தனிப்பட்ட ஒன்று அல்ல. அது எப்போதும் ஏனைய அங்கத்தினர்களோடு தொடர்புடையது. ஒரு குடும்பத்தில் அங்கத்தினர் என்பது ஏனைய அங்கத்தினர்களோடுள்ள உறவினால் மட்டுமே பொருளுடையதாகிறது. சான்றாக தாயும் தகப்பனும் மகன் அல்லது மகளோடுள்ள தொடர்பால் மட்டுமே பொருளுடையவர்களா கின்றனர். மனைவி என்ற சொல் கணவனோடுள்ள தொடர்பினால் மட்டுமே பொருளுடையதாகிறது.

ஒருவரின் நண்பர்கள் யார் யார் என்பதைக் கண்டு பிடிப்பதைவிட அவருடைய உறவினர்கள் யார் யார் என்பதை எளிதில் கண்டுபிடித்துவிடலாம். காரணம் உறவுமுறையானது முறைப்படி ஒப்புக்கொள்ளப்பட்ட தெளிவான விதிமுறைகளின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது. ஒருவரின் உறவுமுறை குடிவழியினை அல்லது தொடர்பினை நினைவுகூர்வது போன்று அவருடைய நண்பர்களின் தொடர்பினை நினைவு கூர்வதில்லை. குறிப்பிட்ட ஒரு சமுதாயத்தில்

வாழ்பவரின் உறவினர்கள் யார் யார் என்பது வெளிப்படையானதும் எளிதில் தெரிந்து கொள்ளக்கூடியதுமானதாகும்.

உறவானது இரண்டு முக்கிய அம்சங்களை அடிப்படையாகக் கொண்டது. ஒன்று இரத்தம், இன்னொன்று திருமணம் [illegible] உறவுமுறையானதா இல்லையா என்பதை மதிப்பிடு செய்வதற்கு இவ்விரண்டு அம்சங்களுமே அடிப்படையானவை. சிலர் உறவினர்கள் என அழைக்கப்படலாம், ஆனால் இரத்த அல்லது மணத்தொடர்பு இல்லாவிட்டால் அவர்கள் உறவினர்கள் அல்லர்.

உறவினர்களை வரையறுப்பதில் பலமுறைகள் காணப்படுகின்றன. அதாவது பல்வேறு மக்கள் பல்வேறு விதங்களில் உறவுகளை வரையறுக்கின்றனர். இவ்வாறு பல்வேறு பிரிவினர் உறவுகளை வரையறுப்பதில் அடிப்படையாகச் சில ஒற்றுமைகளும் வேறுபாடுகளும் காணப்படுவதுண்டு. அவ்வாறான ஒற்றுமைகளையும் வேறுபாடுகளையும் ஆராயும்போது உறவுமுறையானது ஒரு சமூக வலையமைப்பு (SOCIAL NETWORK) என்ற நோக்கில் ஆராய்வது மிகவும் முக்கியமானதாகும்.

மேற்கத்திய உறவுமுறை அமைப்பில் காணப்படும் தனிக் குடும்பமானது அமைப்பு நிலையில் தனிப்படுத்தப்பட்டதாகவே காணப்படுகிறது. ஆனால் சமூக ரீதியில் தனிப்படுத்தப்படவில்லை. இந்த வளைய உறவுமுறைத்தொடர்புகளைவிட பெற்றோர் பிள்ளைகளுக்கிடையிலான இணைப்பு அதிக முக்கியமானதாகக் காணப்படுகிறது. தமிழகக் கிராமங்களில் காணப்படும் [illegible] மற்றும் உறவுமுறை அமைப்புகளை எடுத்துக்கொண்டால் தனிக்குடும்பங்கள்

அதிகமாகக் காணப்பட்டாலும் அவை தனிப்படுத்தப்பட்டவையாகக் காணப்படுவதில்லை. சான்றாகக் கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் பறையர்களை எடுத்துக்கொண்டால் இரண்டு குடும்பங்களைத் தவிர அனைத்துக் குடும்பங்களும் தனிக்குடும்பங்களாகும். ஆனால் எந்த ஒரு தனிக் குடும்பமும் வெளி ஊர்களில் சென்று குடியேறியதாக இல்லை. ஒருவர் திருமணமாகித் தனிக்குடித்தனம் அமைக்கும் போது அதே தெருவிலே வாழவிரும்புகிறார். அந்த ஊரை விட்டு வெளியேச் செல்ல எவரும் விரும்புவதில்லை. இந்நிலையில் உண்ணுதல், தூங்குதல் போன்ற ஒரு சில விசயங்க்ளில் மட்டுமே தனிப்படுத்தப்படுகின்றனர். ஏனையச் செயல்பாடுகளில் உறவினர்களோடு ஒன்றாகவே வாழ்கின்றனர். பறையர் தவிர ஏனைய சாதியினரை எடுத்துக்கொண்டால் வெளி ஊர்களில் வாழும் தனிக்குடும்பங்கள் சில காணப்படுகின்றன. அவர்களும் உறவினர்களோடு போக்குவரத்து, கடிதம், உதவிமுறைகள், உறவுமுறைக் கடப்பாடுகள் ஆகியவற்றின் மூலம் நெருங்கிய தொடர்புகொண்டிருப்பதைக் காணமுடிகிறது. அவ்வாறு வெளி ஊர்களில் வாழ்பவர்களுக்கும் உறவினர்களுக்குமிடையிலான தொடர்புகளில் அவர்கள் வாழும் இடத்தின் தூரம் மிக முக்கிய காரணக்கூறாகக் காணப்படுகிறது. வெகு தூரத்தில் வாழ்பவர்களோடு போக்குவரத்துத் தொடர்பு மிகக் குறைவாகிறது. சில குடும்பங்களில் கடிதத்தொடர்பு மட்டுமே காணப்படுகிறது. அவ்வாறு தூரத்தில் வாழ்பவர்கள் சில வேளைகளில் தங்கள் உறவுமுறை கடப்பாடுகளை நிறைவேற்றுவதில் தவறிவிடுகின்றனர். சான்றாகத் திருமணம், காதுகுத்து போன்ற சடங்குகளில் கலந்துகொள்ள இயலாமல் இருப்பதைக் காணமுடிகிறது. ஆனால் அண்மையில் வாழ்பவர்கள் அத்தகைய சடங்குகளில் தவறாமல் கலந்துகொள்வதையும் உறவுமுறை

கடப்பாடுகள் மற்றம் உதவிமுறைகளை நிறைவேற்றுவதையும் காணமுடிகிறது.

வாழ்வின் முறையான அல்லது சீரான இயக்கத்திற்கு உறவுமுறைத் தொடர்புகளின் மூலம் கிடைக்கும் உதவிகள் மிக முக்கியமானதாகும். குறிப்பாகச் சமூக அடிப்படையில் அதிக ஏற்றத்தாழ்வுகளுக்கு உட்படாத நடுத்தரக்குடும்பங்களில் மகனின் வாழ்வின் முற்பட்ட பகுதியில் தகப்பனிடமிருந்து கிடைக்கும் பொருளுதவியானது குறிப்பிடத்தக்கது. புதிதாக மணம் செய்து கொண்ட தம்பதிகளை அவர்களின் பெற்றோர் தொடர்ந்து ஊக்குவிப்பதையும், பலவித பொருட்களை அளிப்பதன் மூலம் தங்கள் பாசத்தையும், கடமை உணர்வையும் வெளிப்படுத்துவதையும் காணலாம். இவ்வாறு செய்யும் உதவியானது உடனடியாகப் பலனை எதிர்பார்த்துச் செய்தது அல்ல. உண்மையிலேயே பெற்றோர் மற்றும் பிள்ளைகளுக்கிடையிலான உறவுமுறைகள் வாழ்க்கையின் பல்வேறு கட்டங்களில் பல மாறுதல்களை அடைவதுண்டு. இது இருபுறத்தின் பொருளாதாரம் மற்றும் பல சூழ்நிலைகளைப் பொறுத்தது. ஆனால் இதன் முக்கியத்துவம் நிலைத்திருப்பதைக் காணலாம்.

தனிக்குடும்பத்தில் உருவாக்க (Procreation) மற்றும் பிறப்பு (Orientation) ஆகிய கருத்துருப் பொருள்களைக் (concepts) கையாளுவதன் மூலம் குடும்ப அங்கத்தினர்களுக்கிடையிலான உறவுகளை மேலும் விளக்கமாகக் கூறலாம். உருவாக்கக் குடும்பம் (Family of Procreation) என்பது திருமணத்தின் மூலம் சந்ததியினரை (பிள்ளைகளை) ஈன்றெடுத்து உருவாக்கும் குடும்பமாகும். பிறப்புக்குடும்பம் என்பது (Family of Orientation) ஒருவர் பிறந்த

அல்லது வளர்ந்த குடும்பமாகும். இரண்டு குடும்பங்களும் தனிக்குடும்பங்களாகும். இரண்டு குடும்பத்திலும் அமைப்பு அளவில் எந்தவித வேறுபாடும் இல்லை. சுட்டபடுகிறவர் (referent) மட்டுமே மாறுகிறார். திருமணத்தின் மூலம் உருவாக்கப்பட்ட குடும்பத்தில் தாய் மற்றும் தகப்பன் முக்கியமாகச் சுட்டப்படுகிறவர்களாகின்றனர். அவர்கள்தான் குடும்பத்திற்கு எழுச்சியை அளிப்பவர்களாவர். பிறப்புக் குடும்பத்தில் மகன் மற்றும் மகள் முக்கியமாகச் சுட்டப்படுகிறவர்களாகின்றனர். அவர்கள்தான் இக்குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர்கள். தாயும் தகப்பனும் எதிர் எதிர் தொடர்பு உடையவர்கள் . (Reciprocal) அவர்கள் தான் ஆண் மற்றம் பெண் பிள்ளைகளை உருவாக்கிக் கால்வழி உண்டு பண்ணும் அங்கத்தினர்களாவர். பிறப்புக்குடும்பம் மற்றும் உருவாக்கக்குடும்பம் இரண்டும் இணைந்து தனிக்குடும்பம் முழு வடிவம் பெறுகிறது. சான்றாக ஒரு ஆண் அவருடைய ஊருவாக்கக் குடும்பத்தில் தகப்பனாகவும் அவருடைய பிறப்புக்குடும்பத்தல் அவர் ஒரு மகனாகவும் காணப்படுகிறார்.

குடும்பத்தினுள் காணப்படும் உறவுகளை ஆராயும்போது குடும்ப உறவுகளோடு தொடர்புடைய பாரம்பரியச் சமூக அமைப்பும் ஆராயப்படவேண்டும். சில சமுதாயங்களில் இரண்டு மூன்று தலைமுறையினர் சேர்ந்து வாழலாம். சில சமுதாயத்தினர் தந்தைவழி வம்சாவழியையும் தந்தை இருப்பிடத்தில் குடித்தன முறையையும் பின்பற்றலாம். சில சமுதாயங்களில் கால்வழியானது சொத்துரிமை, பட்டங்கள், சடங்குகள் ஆகியவற்றில் அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் காணப்படும். தாய்வழி வம்சாவழியைப் பின்பற்றும் சமுதாயத்தில் பெண்களுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படலாம்.

பொதுவாக எல்லா சமுதாயங்களிலும் ஒரு தனி நபரை எடுத்துக்கொண்டால் அவர் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர் என்ற உணர்வும் அவருடைய செயல்பாடுகள் அக்குடும்பத்தின் குறிக்கோள்களை நிறைவேற்றுவதைப் பற்றியதாகவும் காணப்படும். விவசாயத்தில் ஈடுபடும் ஒரு குடும்பத்தை எடுத்துக்கொண்டால் குடும்ப அங்கத்தினர் எல்லோரும் அதில் பங்கெடுப்பதால் அவர்கள் தெரிந்தோ தெரியாமலோ ஒரு வித ஒருமைப்பாடு ஏற்படுகிறது. இத்தகைய ஒருமைப்பாடு வியாபாரத்தில் ஈடுபடும் ஒரு சமுதாயத்தின் குடும்பங்களில் காணப்படுவதில்லை. அத்தகைய ஒருமைப்பாடுடைய சமுதாயத்தில் பொதுநலம் என்ற எண்ணம் மற்றும் குடும்பத்தில் ஏனையவர்களைத் தாங்கும் கடமையோடுள்ள கூட்டுக்குறிக்கோள்கள் ஆகியவை தன் நலன் மற்றும் தனித்தன்மை ஆகியவற்றிலிருந்து முந்துநிலையில் காணப்படுவதுண்டு. இத்தகைய அமைப்பில் முக்கியமாகக் குறிப்பிடவேண்டியது என்னவெனில் ஏனையவர்களைத் தாங்க வேண்டுமென்ற குடும்ப கடப்பாடு பெற்றோர்களுக்கு மட்டும் உதவுவது அல்லாமல் சகோதரர்கள் மற்றும் நெருங்கிய உறவினர்களுக்கும் உதவுவது ஆகும். குடும்பம் என்பது குடும்பத்தினர் சேர்ந்து வாழும் ஒருமம் என்றிருக்கும்போது இத்தகைய எண்ணங்களைக் கொண்டிருப்பதும் கடப்பாடுகளை நிறைவேற்றுவதும் அதிகக் கடினம் அல்ல. ஆனால் சமூகப்பொருளாதார மாறுதல்கள் நிமித்தம் மக்களின் இடப்பெயர்ச்சி ஏற்படுகிறது. இது குடும்பம் என்பது குடும்பத்தினர் சேர்ந்து வாழும் ஒருமம் என்பதைப் பிளவுப்படுத்துகிறது. இந்நிலையில் குடும்பத்தில் ஏனையவர்களைத் தாங்கும் கடமையோடுள்ள கூட்டுக்குறிக்கோள்களை நிறைவேற்ற இயலாத நிலை ஏற்படுகிறது.

புதிய தலைமுறையினரை எடுத்துக்கொண்டால் சிலர் அவர்களின் பெற்றோர் மற்றும் உறவினர்களைப்போன்று அதே சமுதாயத்தில் வாழலாம். வேறுசிலர் சுமார் 50 மைல் தூரத்துக்குள் வாழலாம். இன்னும் சிலர் 50 முதல் 100 மைல் தூரத்திலும் வாழலாம். குடும்பத்தின் அங்கத்தினர்கள் ஒருவருக்கொருவர் உதவுவதும் ஒருவரையொருவர் தாங்குவதும் கடப்பாடுகளை நிறைவேற்றுவதும் அவர்கள் சேர்ந்துவாழும்போது சந்திக்கப்பட்டது போன்று பிரிந்து வாழும்போது செய்யமுடிவதில்லை. பெற்றோரைப் போன்று அதே சமுதாயத்தில் சற்று தூரத்தில் வாழ்பவர்கள் பல தடவைகள் (வாரம் ஒருமுறை) பெற்றோரைப் பார்க்கச் செல்வார்கள். அவர்கள் குடும்பத்தின் பிரச்சனைகளை உணர்ந்துகொள்வதும் உதவிக்கு அழைக்கப்படுவதையும் காணலாம். ஆனால் தூரத்தில் வாழ்பவர்கள் மாதம் ஒரு முறை கூட பெற்றோரைச் சந்திக்க இயலாமல் போவதையும் காணலாம். இதிலிருந்து குடும்பத்தோடு சேர்ந்து வாழ்பவர்கள் மற்றும் அண்மையில் வாழ்பவர்கள் தொடர்ந்து உறவுமுறை இணைப்புக்குள் இழுக்கப்படுவதையும் தூரத்தில் வாழ்பவர்கள் குடும்பக் கடப்பாடுகளை நிறைவேற்றுவதில் சற்று அலட்சியமாக இருப்பதையும் காணலாம். ஆனால் அவ்வாறு தூரங்களில் வாழ்பவர்கள் குடும்ப காரியங்களிலிருந்து முற்றிலுமாக விலகிவிடுகிறார்கள் என்று கூற இயலாது. சிலர் பெற்றோரைத் தாங்கள் வாழும் இடத்திற்கு அழைத்துச் செல்வதன் மூலம் அத்தகைய பிரச்சனையைத் தவிர்கின்றனர். புதிய தலைமுறையினரின் வேலையைப் பொறுத்தும் அவர்களின் அந்தஸ்தைப் பொறுத்தும்கூட உறவுமுறைத் தொடர்புகளில் மாறுதல்கள் ஏற்படலாம்.

போக்குவரத்துத் தொடர்பு மட்டுமின்றிப் புதிய தலைமுறையினர் பெற்றோர் சகோதரர்கள் மற்றும் நெருங்கிய உறவினர்களுக்கு உதவும் சிக்கலான கடப்பாடு தொடர்புகளிலும் ஈடுபடுகின்றனர். பெரும்பாலும் பெற்றோருக்குச் செய்யும் உதவி பொருளாதார தன்மை உடையதாகும். அதாவது பெற்றோரின் உணவு, உடை, உறைவிடம் ஆகியவற்றை மையமாகக் கொண்டது. பெற்றோர் பிள்ளைகளுக்குச் செய்யும் உதவியானது எவ்வாறு எதிர்பாராத உதவியாகக் காணப்படுகிறதோ அவ்வாறே பெற்றோருக்குப் பிள்ளைகள் செய்யும் உதவியும் ஒருவழி உதவியாகும். (Unidirectional) அதாவது பெற்றோரிடமிருந்து பிள்ளைகளுக்கு வராமல் பிள்ளைகளிடமிருந்து பெற்றோருக்கு வருதல் அவ்வாறான உதவிகள் சமுதாயத்தில் ஒத்துக்கொள்ளப்பட்ட வாழ்க்கை முறையாகவும் பல குறியீடுகளுக்கு அப்பாற்பட்டு செயல்படுவதாகவும் காணப்படுகிறது. அத்தகைய உதவிகள் பெரும்பாலும் சகோதரர்களின் எண்ணிக்கையைப் பொறுத்தோ அல்லது மூத்த - இளைய வேறுபாட்டைப் பொறுத்தோ மாறுபடுவதில்லை. சகோதரர்களில் இளையவர் இத்தகைய பொறுப்புகளிலிருந்து விடுபட்டவராகத் தோன்றலாம். ஆனால் பெரும்பாலும் அவ்வாறிருப்பதில்லை. புதிய தலைமுறையினரின் சமூகப் பொருளாதார குறியீடுகளான கல்வி, பதவி போன்றவைகூட பெற்றோருக்குச் செய்யும் உதவியின் முறையில் குறிப்பிடத் தக்க மாறுதல்களை ஏற்படுத்துவதில்லை. புதிய தலைமுறையினர் பெற்றோருக்குச் செய்யும் இத்தகைய உதவியைப் பெற்றோர் பிள்ளைகளுக்குச் செய்யும் பண உதவியோடு ஒப்பிடலாம். இரண்டுமே ஒருவழி உதவியாகும். இவ்விரு ஒருவழி உதவிகளும் சற்று வேறுபடுவதுண்டு. பெரும்பாலும் பெற்றோருக்கு உதவுவது

இயற்கையானதாகவும் அதை ஒருகடமையாகவும் கருதுகின்றனர். வேறு சிலர் பெற்றோரிடமிருந்து ஆசீர்வாதம் மனநிறைவு போன்ற உணரமுடியாத நன்மைகள் கிடைப்பதாகக் கருதுகின்றனர். அதைத்தவிர வேறு எதையும் எதிர்பார்க்காமலும் காணப்படுகின்றனர். ஆனால் இத்தகைய ஒருவழி உதவியை பெற்றோருக்கு மட்டுமல்லாமல் அவர்களுடைய உறவினர்களுக்கும் செய்வதைத் தேவையற்ற தவிர்க்கமுடியாத சுமையாகவும் கருதுகின்றனர். இன்னும் சிலர் பெற்றோருக்கு உதவுவதற்கு மூன்று முக்கிய காரணங்கள் உள்ளன. 1. பாரம்பரியக் கட்டளை. 2. ஆவியின் அச்சம். 3. பெற்றோரின் ஏழ்மை மற்றும் வயது சென்ற நிலையின் காரணமாக உதவுதல்.

மேலும் சில குடும்பங்களில் உதவி தேவையென்று கேட்கும் வரை காத்திருக்காமல் உதவவேண்டுமென்று எதிர்பார்க்கின்றனர். இதற்குப் பின்னணியாக இருப்பது பாரம்பரியக் குடும்பத்தின் சமூக ஒத்துழைப்பும் ஒருமைப்பாட்டு உணர்வும் சட்டமாகக் காணப்பட்டதேயாகும். ஒரு தனி நபர் தன் குடும்பத்தின் அங்கத்தினர்களிடம் உதவி கேட்க வேண்டியதில்லை. இத்தகைய உதவி முறைகள் புதிய தலைமுறையினரின் பொருளாதாரப் பார்வையில் அதிக சுமையாகக் காணப்படுவதுண்டு. ஆனால் பெரும்பாலோர் இதை ஒரு சுமையாகக் கருதுவதில்லை. நகர்புற வளர்ச்சி அதிகரிக்கும்போது தனிக்குடும்பத்துக்கு அதிக முக்கியத்துவம் ஏற்படுகிறது என்பது பொதுவான கருத்து என்றாலும் தனிக் குடும்பங்கள் பெற்றோரைக் கவனிப்பதை விட்டுவிடுவதில்லை. இது சகோதரர்களையும் உறவினர்களையும் விட்டுவிட நாடுகிறது.

பெற்றோர் மற்றும் பிள்ளைகளுக்கிடையிலான உறவுகள் ஒருவிதத்தில் அல்லது இன்னொரு விதத்தில் நிலைத்திருப்பதைக்

காணலாம். பாசத்தின் அடிப்படையிலான இணைப்புகள் வலுவிழந்து காணப்பட்டாலும் பொதுவான கடப்பாடுகள் பெற்றோரோடுள்ள தொடர்பினை ஏதாவது வழிகளில் தக்க வைக்கிறது.

பெற்றோர் மற்றும் வயது வந்த பிள்ளைகளுக்கிடையே நிலவும் உறவானது மிகப்பரந்த ஒன்றாகும். அவர்களிடையே காணப்படும் செயலெதிர் செயல்கள் (Interaction) அவற்றின் அடுக்கு நிகழ்வு (frequency) காலம், குறிப்பிட்ட பண்டமாற்றுதல் ஆகியவை சில காரணக்கூறுகளின் அடிப்படையிலானவை. குறிப்பாக வாழும் பகுதியின் தன்மை, குடும்பத்தின் நிலை ஆகியவற்றின் அடிப்படையிலானவை. ஒழுங்கான செயலெதிர் செயல்களுக்குப் போக்குவரத்து முக்கியக் காரணக்கூறாக அமைகிறது. இது பல்வேறு இடைவெளிகளில் நடைபெறும். இதனால் தலைமுறைகளுக்கிடையிலான தொடர்புகள் நிலைநிற்கிறது. அவ்வாறான போக்குவரத்தின் நோக்கமானது வெ... பொழுது போக்கிற்காக அல்ல. ஒருவருக்கொருவர் நல்லது கெட்... து மற்றும் ஏனைய செய்திகளையும் தெரிந்துகொள்ளவுமாகம். கடப்பாடுகள் அதிகமாக இருக்கும்போது போக்குவரத்து அதிகமாக நடைமுறையில் இருப்பதையும் அது இன்பமானதாக இருப்பதையும் காணலாம். இத்தகைய போக்குவரத்து நண்பர்களுக்கிடையிலான போக்குவரத்தைப் போன்று நேரடியான பொழுதுபோக்கு மட்டும் அல்ல என்பது குறிப்பிடத்தக்கது. முக்கியமான எந்த ஒரு தீர்மானம் எடுக்கும்போதும் பெற்றோரை கலந்து ஆலோசிப்பதும் அவர்களுக்கு அறிவிக்காமல் எந்த முடிவும் எடுக்காமல் இருப்பதும் வழக்கம். சில பெற்றோர் மகனின் குடும்பத்தைவிட மகளின் குடும்பத்தோடு அதிக தொடர்புகள் கொண்டிருப்பதைக் காணலாம்.

வளர்ந்துவரும் புதிய தலைமுறையினருக்குப் பலவித உறவுமுறை கடப்பாடுகள் இருப்பது அவர்களின் வளர்ச்சியைத் தடைசெய்வதாகத் தோன்றலாம். ஆனால் தென்னிந்தியச் சமுதாயத்தில் சகோதரர்களுக்கிடையே காணப்படும் ஒற்றுமை அல்லது கூட்டுமுயற்சி மேல்நாடுகளில் சகோதர்களிடையே காணப்படும் நட்புறவைவிட மிகச்சிறந்ததாகக் காணப்படுகிறது. சிலவேளைகளில் சொந்தக் குடும்பத்தின் சுமை அதிகமாக இருந்தால் சகோதர்களுக்கு உதவி செய்ய இயலாத நிலை ஏற்படுகிறது. ஒருவர் சொந்தமாகக் குடும்பம் நடத்துவதற்கான நிலையை அடையும் வரை தன் பெற்றோர் அல்லது சகோதர்களைச் சார்ந்து வாழ்வதையும் காணலாம். எனவே புதிய தலைமுறையினரில் குடும்பத்தில் தங்கள் மனைவி, பிள்ளைகள் தவிர அவர்களோடு சேர்ந்து வாழும் சகோதரர், அல்லது பெற்றோர் இருப்பதைக் காணலாம். இவ்வாறு இணைந்து வாழ்பவர்கள் பெரும்பாலும் இளைய சகோதர்களோ அல்லது மூத்த சகோதர சகோதரிகளின் பிள்ளைகளாகவோ இருப்பதுண்டு. இத்தகைய உறவினர்களின் உணவு, உடை ஆகியவற்றிற்கு புதிய தலைமுறையினரே பொறுப்பாக இருப்பதும் உண்டு. அதோடு அவர்களின் கல்விச் செலவையும் இவர்களே பார்க்கவேண்டிய நிலையும் ஏற்படுவதுண்டு. இத்தகைய சுமையான கடப்பாடுகளைப் பெரும்பாலோர் எளிதாகவே கருதுகின்றனர். இவ்வாறு இளைய சகோதர்களுக்குச் செய்யும் உதவியைச் சிலர் தாங்கள் மூத்த சகோதரர்களிடமிருந்து பெற்ற உதவிக்குப் பதிலாகச் செய்வதாகக் கருதுகின்றனர். இந்நிலையில் இளைய சகோதரர்களுக்குப் பெருமளவு கடப்பாடுகள் காணப்படுவதில்லை.

பெற்றோர்-பிள்ளைகள் உறவைப்போன்று சகோதர்களுக் கிடையிலான உறவும் முதல்நிலை உறவில் வந்துவிடுகிறது. அத்தகைய

உறவு சகோதர்களுக்கிடையிலான அந்தஸ்து நிலை வேறுபாட்டைச் சமப்படுத்துவதற்கு உதவியாக அமைவதுண்டு. எனவே உறவுமுறை மற்றும் சமூகப்பொருளாதார நிலையில் ஏற்படும் மாறுதல்களை ஆராயப் பெற்றோர் மற்றும் சகோதரர்களோடுள்ள உறவு நல்ல ஒரு பகுதியாகக் காணப்படுவதில்லை. அத்தகைய ஆய்வுக்கு உண்மையான பகுதியானது பெற்றோரின் உறவினர்களும் அடங்கிய விரிவான குடும்ப நபர்களோடுள்ள உறவுகளாகும். அதாவது பெற்றோரின் சகோதர, சகோதரிகள் ஒன்றுவிட்ட சகோதர, சகோதரிகள் ஆகியோரோடுள்ள உறவுகள். பாரம்பரியக் குடும்ப அமைப்பில் கூட்டுக்குடும்பமாகவும் பொதுநலம் மற்றும் கூட்டுமுயற்சி ஆகியவை முதல்நிலை உறவினர் இரண்டாவது நிலை உறவினர் என்ற பாகுபாடின்றி எல்லோரையும் ஒருவருக்கொருவர் உதவத்தூண்டியது.

பெற்றோரின் மறவை அவர்களின் உறவினர்களுக்கும் தங்கள் பிள்ளைகளுக்குமிடையிலான தொடர்புகளைத் துண்டிப்பதாகக் காணபபடுகிறது. காரணம் குடும்பத் தொடர்புகளில் பெற்றோர்கள் அவர்களின் உறவினர்களையும் பிள்ளைகளையும் இணைக்கும் நபர்களாகப் பங்கேற்கின்றனர். பெற்றோரின் மறைவு மற்றும் குடும்ப அமைப்பில் ஏற்படும் மாறுதல்களினால் சில வேளைகளில் பெற்றோரின் உறவினர்களோடு எந்தவித உறவும் இல்லாமல் காணப்படுவதுண்டு. ஆனால் தங்குமிடத்தைப் பொறுத்துப் பெற்றோரின் உறவினர்களோடுள்ள தொடர்பு வே றுபடுகிறது. உறவினர் ஒன்றாக வாழ்வதாக இருந்தால் பெற்றோரின் மரணத்துக்குப் பின் அவர்களின் உறவினர்களோடுள்ள தொடர்பு குறைவதில்லை.

உறவினர்களோடு தொடர்ந்து தொடர்பு காணப்படுவதற்கு ஒரு காரணம் உறவினர்கள் பெற்றோர்கள் வாழும் பகுதியிலேயே காணப்படுவதாகும். ஒருவர் பெற்றோரைப் பார்க்கச்செல்வதென்றால் உறவினரையும் பார்க்கச் செல்வதாகும். மேலும் ஒரு நபரை அவருடைய உறவினர்கள் வந்து பார்ப்பதன் மூலம் உறவினர்களோடுள்ள தொடர்பு பலப்படுகிறது. ஒருவர் தான் இளம் வயதில் வளர்க்கப்பட்ட இடம், இளம் வயதில் குடும்பத்தினரோடுள்ள தொடர்பு ஆகியவற்றைப் பொறுத்தும் அவருடைய உறவினர்களோடுள்ள தொடர்பு வேறுபடுவதுண்டு. ஒருவர் தன் உறவினர் மத்தியில் அல்லது உறவினர்களால் வளர்க்கப்பட்டால் பெற்றோரால் அல்லது உறவினர் அல்லாதவர்களால் தனியான இடத்தில் வளர்க்கப்படுவதை விட உறவினர்களோடு அதிக ஈடுபாடு காணப்படலாம்.

உறவினர்களுக்கு உதவுவது பெரும்பாலும் பணம் அல்லது ஆடை அன்பளிப்பாக வழங்குதல், உறவினர்களின் பிள்ளைகள் கல்வி கற்க உதவுதல் மற்றும் உறவினர் நோய்வாய்ப்பட்டால் சென்று பார்த்து உதவுதல் ஆகியவையாகும், இவ்வாறான உதவிகள் உதவினர்களோடுள்ள வலுவான இணைப்பாகக் காணப்படுகிறது. இத்தகைய உதவிகள் சிலவேளை கணவனின் பெற்றோரின் உதவினர்களோடு நின்றுவிடுவதுண்டு. இதற்கு முக்கியக்காரணம் பெரும்பாலான பெண்களுக்குத் தங்களுக்கென வருவாய் இல்லாதிருப்பதும் தந்தைவழி சொத்துரிமையுமாகும்.

புதிய தலைமுறையினரை எடுத்துக்கொண்டால் அவர்கள் ஒரே சீரான பிரிவினர் அல்லர். ஒரே சாதியை எடுத்துக் கொண்டாலும்

அதில் அரசு ஊழியர்கள், வணிகர்கள், பாரம்பரியத் தொழிலில் ஈடுபடுகிறவர்கள் மற்றும் அரசியல்வாதிகள் போன்று பலதரப்பட்ட மக்கள் காணப்படுகின்றனர். குறிப்பாக அரசு ஊழியர்கள் குடும்பத்தை விட்டு தூரத்தில் வேலைபார்க்கும்போது பெற்றோரைச் சென்று பார்த்தல், உறவுமுறை கடப்பாடுகளை நிறைவேற்றுதல் ஆகியவற்றில் சற்று அலட்சியமாக இருப்பதைக் காணலாம். ஏனைய பிரிவினரைவிட அரசு உழியர்களின் மனைவிமார்களின் பலர் வேலைபார்ப்பவர்களாகக் காணப்படுவதுண்டு. அவ்வாறு குடும்பத்தைவிட்டு தூரத்தில் வாழும்போது உறவினர்களின் போக்குவரத்தும் மிகக் குறைவாகவே காணப்படும். மேலும் அரசு ஊழியர்கள் ஓரளவு நிரந்தரமான பதவியை வகிப்பதால் அவர்கள் தானாகவே உறவினர்களிடமிருந்து சற்று விடுதலை பெற்றவர்களாகவும் குடும்பக் காரியங்களில் விரிவாக ஈடுபடுவதை ஒரு கடமையாகவும் கருதுவதைக் காணலாம்.

வாணிபத்தில் ஈடுபடுகிறவர்களை எடுத்துக்கொண்டால் பெரும்பான்மையான வணிகர்கள் மிககுக்றைந்த வருவாயோடு தங்கள் தொழிலை ஆரம்பிக்கின்றனர். அவர்கள் முதலில் ஓரளவு குடும்ப அங்கத்தினர்களைச் சார்ந்துதான் காணப்படுவார்கள். வளரும் வணிகர்கள் மூலதனத்திற்காக உறவினர்களைச் சார்ந்திருக்க வேண்டியுள்ளது. ஆனால் இவர்கள் தொடர்ந்து உறவினர்களைச் சார்ந்திருக்கவேண்டிய தேவையில்லை.

அரசியலில் தன்மை அரசியல்வாதிகளை ஏனையமக்களையும் குறிப்பாக உறவினர்களையும் சார்ந்துவாழச்செய்கிறது. அவர்கள் நிலைநிற்பதற்கு அத்தகைய உறவுமுறை மிக முக்கியமாகக்

காணப்படுவதால் அரசியல்வாதிகள் மிக விரிவான உறவுமுறைத் தொடர்பு மற்றும் சமூக உறவுகளில் ஈடுபடுகின்றனர். அரசியல் வாதிகளின் பதவி நிரந்தரமற்றதாகக் காணப்படுவதால் அவர்கள் உறவினர்களோடு நெருங்கிய சமூகத்தொடர்பு கொண்டிருக்கின்றனர். பாரம்பரியத் தொழில்களில் ஈடுபடுகிறவர்கள் பெரும்பாலும் குடும்பத்தோடு சேர்ந்து வாழ்வதால் அவர்கள் தொடர்ந்து உறவுமுறை இணைப்புக்குள் காணப்படுகின்றனர். இவ்வாறு வெவ்வேறு பிரிவினர்களுக்கிடையிலான வேறுபாடுகள் வேலையின் தன்மை, வேலைபார்க்கும் இடத்தின் தூரம் ஆகியவற்றைப் பொறுத்தும் வேறுபடுகின்றன.

திருமணத்தின்மூலம் இணைக்கப்பட்டுப் புதிதாக அமைக்கப் பட்ட குடும்பத்தின் ஒற்றுமை அல்லது வேற்றுமையை விவாதிக்கும் போது குடும்ப வாழ்வின் ஒரு முக்கிய பகுதியான மகப்பேறு குறித்தும் குறிப்பிடவேண்டும். இது திருமண இசைவில் முக்கியப் பங்கை வகிப்பதோடு. பாரம்பரியக் குடும்பங்களுக்கம் தற்போதைய குடும்பங்களுக்குமிடையேயுள்ள வேறுபாட்டையும் காட்டுகிறது. அதாவது பாரம்பரியச் சமூதாயத்தின் குடும்பங்களில் அதிகமான பிள்ளைகள் இருப்பதை ஒரு சமூக அந்தஸ்தாகக் கருதினர். ஆனால் புதிய தலைமுறையினர் பிள்ளைகள் குறைவாக இருப்பதைச் குடும்பத்துக்கு ஒத்ததாகக் கருதுகின்றனர் எனவே ஒருவரின் பிறப்புக்குடும்பத்துக்கும் அவருடைய திருமணத்தின்மூலம் உருவாக்கப்பட்ட குடும்பத்திற்குமிடையே மிகுந்த வேறுபாடுகள் காணப்படுகின்றன. இன்னும் சிலர் குழந்தைகளின் எண்ணிக்கை குறைவாக இருப்பது தகுந்தது எனக் கருதாமல் அதற்கெல்லாம் கடவுளும் சூழ்நிலையும்தான் காரணமெனவும் கருதுகின்றனர். சிலர்

ஒரு பிள்ளை இருப்பதையும் சிலர் இரண்டு அல்லது மூன்று பிள்ளைகள் இருப்பதையும் தகுந்தது எனக் கருதலாம். இன்னும் சிலர் பிள்ளை பெறுவதை ஒரு தேவையற்ற சுமையெனவும் கருதலாம்.

புதிய தலைமுறையினரின் திருமண வாழ்க்கையின் ஒற்றுமையிலும் பல மாறுதல்களைக் காணலாம். பாரம்பரியச் சமூதாயத்தில் பெண்களை வீட்டோடு அடக்கி வைக்கும் நிலை மாறிக் கணவர்களே பெண்களை வெளியே அழைத்து செல்லும் பழக்கம் ஏற்பட்டுள்ளது. பொருளாதாரத்தை எடுத்துக் கொண்டால் மனைவியின் பெயரில் வங்கிக் கணக்கு வைத்திருத்தல், மனைவியின் பெயரில் சொத்து வாங்குதல் ஆகியவற்றையும் காணலாம். பிரச்சனைகள் வரும்போது அல்லது முக்கியகாரியங்களுக்கு மனைவியின் ஆலோசனையை ஏற்றுக்கொள்ளுதல் போன்றவையும் புதிய தலைமுறையினரிடம் காணப்படுகிறது. மனைவியோடு சேர்ந்து உண்ணுதல், சேர்ந்து கடவுளைத் தொழுதல் சடங்குகளில் கலந்துகொள்ளுதல் ஆகியவையும் புதிய சமுதாயத்தில் ஏற்பட்டுவரும் மாறுதல்களாகும்.

**சகோதர உறவு:**

உறவுமுறை அமைப்பில் காணப்படும் முக்கியமான வேறுபாடுகளைத் தெளிவாக விளக்குவதற்குச் சகோதர உறவில் காணப்படும் வேறுபாடு ஒரு முன்மாதிரியாகக் காணப்படுகிறது. சகோதர உறவின் முக்கியமான ஒரு கூறு யாதெனில் பெற்றோர் உறவைப்போன்று நீடித்து நிலவும்உறவாகும். பெரும்பாலானோரும் தங்கள் சகோதரர்களோடு நேரடியான தொடர்பு கொள்வதைக்

காணலாம். நேருக்குநேர் சந்திக்க முடியாவிட்டாலும் கடிதத் தொடர்பு கொள்வதையும் ஒருவர் நலன் பற்றி அடுத்தவர் தெரிந்து கொள்வதையும் காணலாம். ஒருவர் பிறந்துவளர்ந்த குடும்பத்தினரோடுள்ள இணைப்பு மற்றும் தான் அக்குடும்பத்தின் அங்கத்தினர் என்ற எண்ணம் ஆகியவை ஒருவிதச் சமூக உறவை நிலைக்கச் செய்வதாய் உள்ளன.

சகோதர உறவானது நீடுநிலவுவது குறிப்பிடத்தக்கதல்ல என தோன்றலாம். ஆனால் இது உறவுமுறை அல்லாத உறவுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக உள்ளது. இது Schneider -ன் கருத்தை வலியுறுத்துவதாக உள்ளது. அதாவது மேற்கத்தியச் சமுதாயத்தில் இரத்த உறவு அடிப்படையிலான உறவுகள் ஏனையச் சமூகக்கூறுகளின் அடிப்படையிலான உறவுகளைவிட நீடுநிலவுவதாகக் குறிப்பிட்டுள்ளார். இந்த உறவானது முற்றிலுமாக அழிக்கமுடியாதது. ஒருவருக்கு முன்னாள் நண்பர் அல்லது முன்னாள் உடன் வேலைபார்த்தவர் ஆகியோர் இருக்கலாம். ஆனால் முன்னாள் சகோதரன் இருக்க முடியாது.

சகோதர உறவில் இரண்டாவதாகக் குறிப்பிடத்தக்கது எதுவெனில் பெரும்பாலும் பரந்த ஒரேவிதமான விதிமுறைகளின் அடிப்படையிலானது ஆகும்.

சகோதர உறவானது ஏனைய உறவுகளால் பலவிதங்களில் பாதிக்கப்படுவதுண்டு. நேரடித் தொடர்பில்லாத சகோதரர்களைப் பற்றிய செய்திகளை அறிவதற்கு இடைப்பட்ட உறவினர்கள் முக்கியப் பங்கேற்கின்றனர். முதல்நிலைக் குடும்ப உறவுகளின் நடுநிலையில்

காணப்படும் தாய் முக்கியப் பங்கேற்கிறாள். பல உறவுமுறைத் தொடர்புகளிலும் ஏனைய உறவினர்களைப்பற்றிய செய்திகளும் வீண் பேச்சுகளும் முக்கியமான பகுதிகளாகும்.

சிதறியிருக்கும் சகோதரர்கள் ஒருவரையொருவர் சந்திப்பதற்கும் ஒருவர் நலனை மற்றவர் தெரிந்துகொள்வதற்கும் பெற்றோரின் வீடு ஒரு மையமாக அமைகிறது. சிலவேளைகளில் சிதறியிருக்கும் பிள்ளைகள் ஒன்றாகக் கூடுவதற்குப் பெற்றோர் வழிவகுத்துக்கொடுப்பதும் உண்டு. பெற்றோரின் மறைவானது சகோதரர்களுக்கிடையிலான உறவுகளை வலுவிழக்கச் செய்வதையும் காணலாம். பெரும்பாலும் சில சகோதரர்கள் ஒரே பகுதியில் வாழ்வார்கள். பொதுவாகப் பெற்றோரின் வீட்டுக்கு அருகாமையில் வாழ்வார்கள். வேறு சிலர்வேறு இடங்களுக்குச் சென்று வாழலாம். தூரத்தில் வாழ்பவர்கள் சில நாட்கள் பெற்றோரோடோ அல்லது குறிப்பிட்ட ஒரு சகோதரறோடோ தங்கியிருப்பதையும் அந்நாட்களில் ஏனைய சகோதரர்களைச் சந்திப்பதையும் காணலாம்.

புதிய தலைமுறையைச் சார்ந்த ஒருவருக்கும் அவருடைய சகோதர்களுக்குமிடையே உள்ள உறவுகளின் அமைப்பின் முக்கியத்துவத்தை ஆராய்வதற்கு அவர்களின் அந்தஸ்து நிலையை ஒப்பிட்டுப்பார்ப்பது நன்று. மேல்நாடுகளின் வகுப்புச் சமுதாயங்களில் சகோதர்களுக்கிடையே கல்வி மற்றும் வேலை நிலைகளில் மிகச்சிறிய வேறுபாடுகள்தான் காணப்படும். இத்தகைய சமுதாயங்களில் பிள்ளைகள் பிறப்பு மற்றும் பயிற்சியின் மூலம் ஒரு வகுப்பில் சேர்க்கப்படுகின்றனர். இங்கு சகோதரர்களுக்கு இடையிலான உறவு பொருளாதார இணைப்பு அல்லது உதவியைவிட

ஒருவித நட்பாகும். இதற்கு நேர்மாறாக தென்னிந்தியச் சமுதாயங்களில் சகோதரர்களுக்கிடையே சமூகப்பொருளாதார அந்தஸ்து நிலையில் மிகுந்த வேறுபாடு காணப்படுகிறது. அதாவது சகோதரர்களில் ஒருவர் அதிக கல்வி கற்றவராகவும் ஒருவர் முதல்நிலைக்கல்வி மட்டும் கற்றவராகவும் இருப்பதுண்டு. இன்னும் சிலர் கல்வி அறிவே இல்லாதவராகவும் இருக்கலாம். இவ்வாறு கல்வி நிலையில் குடும்பங்களுக்கிடையிலும் சகோதரர்களுக்கிடையிலும் மிகுந்த வேறுபாடு காணப்படும். சகோதரர்களுக்கிடையே கல்வியில் காணப்படும் மிகுந்த இடைவெளி அவர்களின் வேலைநிலையிலும் புகுந்துவிடுகிறது. எனவே புதிய தலைமுறையினர் மிகக்குறைவான கல்வி கற்ற சிறிய வேலையில் அல்லது வேலையற்ற குறைந்த வருவாயுடைய சகோதர, சகோதரிகளை உடையவர்களாகக் காணப்படுவதுண்டு. திருமணமாகிய கல்வி அறிவற்ற சகோதரிகளோடு அதிக தொடர்பு இல்லாமலிருப்பதையும் காணலாம். இந்நிலையில் சகோதரர்களோடுள்ள உறவுகளின் தொடர்பு பெற்றோருக்குச் செய்வது போன்று பொருளாதாரக் கடப்பாடாகக் காணப்படுகிறது.

**சகோதர உறவில் காணப்படும் வேறுபாடுகள்:**

சகோதர உறவை எடுத்துக்கொண்டால் பெரும்பாலும் ஒரேவிதமான விதிமுறைகளுக்கு உட்பட்டுக் காணப்படுகிறது. எனவே வெவ்வேறு சகோதரர்களுக்கிடையிலான உறவுகளிலும் அதிக வேறுபாடுகள் காணப்படுவதில்லை. இருப்பினும் வெவ்வேறு சமூகச் சூழல்களில் சகோதரர்களுக்கிடையிலான உறவின் தன்மையிலும் வேறுபாடுகள் காணப்படுவதுண்டு. அத்தகைய

வேறுபாடுகளுக்குப் பலவிதச் சமூகச்சூழல்கள் மற்றம் சமூக அமைப்புகள் காரணமாகச் செயல்படுகின்றன. குறிப்பாகச் சகோதரர்கள் வெவ்வேறு பகுதிகளில் வாழுதல், பெற்றோரின் செல்வாக்கு, குடும்பச் சொத்து ஆகியவற்றைச் கூறலாம் இது மட்டுமின்றிப் பல காரணங்களும் உள்ளன. சான்றாகச் சகோதரர்கள் வெவேறு இடங்களில் வாழ்வதால் மட்டுமின்றி அவர்கள் வாழும் இடத்தைப் பொறுத்தும் அவர்களுக்கிடையிலான இணைப்புகளின் தன்மை மாறுபடுகிறது. சகோதரர் அண்மையில் வாழும் போது தூரத்தில் வாழும் சகோதரர்களை வழக்கமாகச் சென்று சந்திப்பதைப் போன்று முறைப்படி சந்திப்பதில்லை. காரணம் தற்செயலாக அவர்கள் ஒருவருக்கொருவர் அடிக்கடி சந்திக்க நேரிடும். இத்தகைய திட்டமிடாத சந்திப்புகளின் மூலம் அவர்களிடையிலான தொடர்பு நிலைத்திருக்கும். எனவே அவர்களின் ஒற்றுமையின் வலுவைத் திட்டமிட்ட அல்லது செயல்நோக்கிலான சந்திப்புகள் மூலம் வெளிப்படுத்த வேண்டியதில்லை.

சகோதரர்களுக்கிடை யே வயது வேறுபாடு அதிகமாக இருந்தாலும் அவர்களுக்கிடையிலான உறவு பாதிக்கப்படுவதுண்டு. அவர்கள் நெருங்கிப் பழகுவதில்லை. காரணம் வயதில் இளையவர் வளர்ந்துவரும்போது வயதில் மூத்தவர் பெற்றோரின் வீட்டை விட்டுப் பிரிந்து தனிக்குடித்தனம் நடத்துவார். இந்நிலையில் அவர்களுக்கிடை யிலான தொடர்பு அல்லது நெருக்கம் மிகவும் பாதிக்கப்படுகிறது.

வாழ்க்கையில் பல நிலைகளில் காணப்படும் வேறுபாடும் சகோதர உறவைப் பாதிக்கிறது. சான்றாக ஒருவர் தன் குழந்தைகளை

வளர்ப்பவராகவும் இன்னொருவர் குழந்தைகள் இல்லாத நிலையில் காணப்படும்போது அவர்களுக்கிடையிலான தொடர்புகள் குறைவதுண்டு. இத்தகைய சகோதரர்களிடையே வயது சென்ற நிலையிலும் வேறுபாடு ஏற்படுவதுண்டு.

குடும்பச் சொத்து சில வேளைகளில் சகோதரர்களுக்கு இடையிலான உறவுகளில் இடையூறு ஏறப்டுத்துவதைக் காணலாம். குறிப்பாகப் பெற்றோரின் செல்வாக்குக் குறையும்போது அல்லது பெற்றோர் இறந்துவிட்டால் சொத்தைப் பங்கிடுதல், சொத்தின் வருமானத்தைப் பங்கிடுதல் ஆகியவற்றில் எற்படும் பூசல்கள் சகோர்தரர்களுக்கிடையிலான உறவைப் பாதிப்பதைக் காணலாம்.

சமூக ஏற்றத்தாழ்வினாலும் சகோதரர்களுக்கிடையிலான உறவில் வேறுபாடு ஏற்படுவதுண்டு. சகோதரர்களுக்கிடையே சமூக அந்தஸ்து நிலையில் வேறுபாடு ஏற்படும்போது அவர்களுக்கிடையிலான தொடர்புகளிலும் வேறுபாடு ஏற்படுவதை காணலாம். சகோதரர்களுக்கிடையிலான போட்டி மனப்பான்மையும் இதற்கு முக்கிய காரணமாகும்.

ஒருவரின் வாழ்க்கைத் துணைக்கும் (மனைவிக்கும்) தன் சகோதரிகளுக்குமிடையிலான உறவு மற்றும் எண்ணங்கள் சகோதர உறவில் வேறுபாட்டை உருவாக்குகின்றன. இது உறவுமுறையானது சமூக உறவுகளின் வலையமைவு (network) என்பதற்குச் சான்றாகக் காணப்படுகிறது. வாழ்க்கைத்துணை மற்றும் சகோதரர்களுக்கிடையிலான உறவு சகோதரர்களை நெருங்கி வரச்செய்வதும் உண்டு. சிலவேளைகளில் இதற்கு மாறாக நடைபெறுவதும் உண்டு. சில

பெண்கள் தங்கள் சகோதரர்களின் வீட்டிற்குச் செல்லாமல் இருப்பதற்க்குக் காரணம் அவர்களின் மனைவிகளோடுள்ள பூசல்களாகும். உடன்பிறந்தவர்களுக்கு இடையிலான உறவு கடுமையாக பாதிக்கப்படுவதற்கு உடன்பிறந்தவர்களின் கணவன் அல்லது மனைவி முக்கியக் காரணமாக காணப்படுகின்றனர்.

சில சூழ்நிலைகளில் சகோதரர்களிடையே வழக்கமாக நிலவுகின்ற உறவைவிட அதிக இணைப்பும் ஒற்றுமையும் ஏற்படுவதைக் காணலாம். தொழில் அடிப்படையில் சகோதரர்களிடையே அதிக நெருக்கம் ஏற்படுவதுண்டு. பெரிய கூட்டுக்குடும்பங்களில் அதிக வயது வேறுபாடு இல்லாத உடன் பிறந்தவர்களிடையே அதிக இணைப்புகள் காணப்படுவதுண்டு. சகோதரன் ஒருவர் இறந்து விட்டால் அவருடைய குழந்தைகளைக் கவனிக்க முன்வருவது சகோதர உறவின் வலுவையும் தன்மையையும் காட்டுகிறது.

**இரண்டாவது நிலை உறவினர்களோடுள்ள உறவுகள்:**

இரண்டாவது நிலை உறவினர்களை முதல்நிலை உறவினர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது மக்களின் உறவுமுறைத் தொடர்புகளில் இரண்டாவது நிலை உறவினர்கள் அதிக முக்கியத்துவம் அற்றவர்களாகக் காணப்படுகின்றனர். குறிப்பாக மேற்கத்திய சமுதாயங்களில் இரண்டாவது நிலை உறவினர்களோடுள்ள தொடர்பும் அவர்களைப் பற்றிய அறிவும் மிகக்குறைவாகக் காணப்படுகின்றன. இது பல சமூகக் காரணிகளின் அடிப்படையில் வேறுபடுகிறது. தொழில்மயமாக்கப்பட்ட

சமுதாயங்களில் வாழும் ஒருவரின் உறவுமுறைத் தொடர்பினை எடுத்துக் கொண்டால் ஒன்றுவிட்ட சகோதரர்கள் மற்றும் அவர்களின் முதல்நிலைக் குடும்பத்தினரோடு நின்றுவிடுகிறது. வம்சாவழி அடிப்படையில் தூரத்து உறவினர்களோடு எந்தவிதத் தொடர்பும் இருப்பதில்லை. சாவுச்சடங்கு அல்லது ஒரே பகுதியில் வாழ்தல் ஆகியவற்றின்போது மட்டுமே இரண்டாவது நிலை உறவினர்களோடு தொடர்பு ஏற்படுகிறது.

தூரத்து உறவினர்களோடு எந்தவிதத் தொடர்பும் இல்லாமல் இருப்பதற்குக் காரணம் இவர்கள் ஒன்றாகச் சந்திப்பதற்கான சூழ்நிலைகள் இல்லாதிருப்பதாகும். இதற்கு மாறாக இரண்டாவது நிலை உறவினர்களிடையே தொடர்புகள் இருப்பதுண்டு. காரணம் சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் அவர்கள் சந்திக்க வாய்ப்புகள் உள்ளன. இங்கு மூன்று முக்கியமான விதிமுறைகள் உள்ளன. முதலாவது மக்களிடையே காணப்படும் வாழ்க்கைச் சடங்குகள் மக்களை உறவினர்களோடு பெரிதும் ஈடுபடச்செய்கிறது. அத்தகைய சடங்குகளுக்கு உறவினர்களை அழைக்கும் போது இயல்பாகவே அவர்களும் அத்தகைய சடங்குகளுக்கு அழைப்பார்கள். அப்போது பல உறவினர்கள் ஒன்றாக சந்திப்பதற்கு தருணம் கிடைக்கிறது. இரண்டாவதாக, இரண்டாவது நிலை உறவினர்கள் மூலம் அவர்களின் முதல்நிலை மற்றும் இரண்டாவது நிலை உறவினர்களோடு தொடர்பு ஏற்படுகிறது. மேற்கத்திய சமுதாயத்தில் பாரம்பரியமாக கிறித்துபிறப்பு பண்டிகையின்போது உறவினர்கள் ஒன்றாகச் சேர்வதையும் ஒருவரையொருவர் சந்திப்பதையும் காணலாம். மூன்றாவது விதிமுறையானது உறவினர்கள் சந்திப்பதற்கான வாய்ப்புடைய அமைப்பை உடையது இது குறிப்பாக

நிரந்தரமாக ஒரே பகுதியில் வாழும் மக்கள் மத்தியில் காணப்படும். அத்தகைய மக்கள் அண்மையில் வாழும் ஏராளம் இரண்டாவது நிலை உறவினர்களை உடையவர்களாக இருப்பார்கள். இவர்கள் ஒரே இடத்தில் இருப்பதால் அவர்களுக்கிடையிலான தொடர்புகள் மற்றும் சந்திப்பு ஆகியவை திட்டமிட்டதாக இருக்காது. ஆனால் அவ்வப்போது நடைபெறும்.

இரண்டாவது நிலை அல்லது தூரத்து உறவினர்களாக இருந்தாலும் ஒரே இடத்தில் (குறிப்பாக வீட்டுக்கு பக்கத்தில் இல்லாமல் வெளி ஊர்களில்) வேலை பார்ப்பதன் மூலம் அதிக இணைப்பு அல்லது நெருக்கம் ஏற்படுகிறது. இங்கு உறவினர் என்ற நிலையில் மட்டும் அல்லாமல் வேறு பல இணைப்புகளும் ஏற்படுகிறது.

மாமி, மாமா, சித்தப்பா, சித்தி போன்ற பல உறவுகளை எடுத்துக்கொண்டால் அவர்களோடு தொடர்புகள் ஏற்படுவது முக்கியமாக தொடர்புபடுத்தும் உறவினர்கள் மூலமாகும்.

தனித்து வாழ்பவர்கள் அல்லது குழந்தைகள் இல்லாது விதவைகளாய் இருப்பவர்கள் ஆகியோரின் நெருங்கிய உறவினர்களுக்கு அவர்களைப் பற்றிய பொறுப்பு உண்டு. இத்தகைய பொறுப்பினை மனப்பூர்வமாக விரும்பாவிட்டாலும் தங்களின் கடமை என்று ஏற்றுக் கொள்ளுகின்றனர். உறவினர்களுக்கிடையிலான இணைப்புகள் அல்லது கடப்பாடுகள் ஏனைய உறவினர்களால் வரையறுக்கப்படும்போது தனிப்பட்ட விருப்பமானது அதிக முக்கியத்துவம் அற்றதாகக் காணப்படுகிறது.

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் மக்களின் குடும்ப அங்கத்தினர்களுக்கிடையிலான உறவுகளைப் பார்க்கும்போது பல்வேறு சாதியினருக்கிடையே சில வேறுபாடுகள் இருப்பதைக் காணமுடிகிறது அவ்வாறான வேறுபாடுகளுக்கும் பொருளாதாரம், வேலையின் தன்மை மற்றும் குடும்ப அமைப்பு ஆகியவை முக்கியக் காரணக்கூறுகளாக காணப்படுகின்றன.

பிராமணர்களின் குடும்ப அங்கத்தினர்களுக்கிடையிலான உறவுகளைப் பார்க்கும்போது ஏனைய அங்கத்தினர்களைத் தாங்கவேண்டும் என்ற எண்ணமும் ஒருவிதக் கூட்டு முயற்சியும் அவர்களிடையே காணப்படுகிறது. அவர்களிடையே கூட்டுக்குடும்பங்களின் தன்மை அதிகமாகக் காணப்படுவதற்கு ஒரு முக்கியக் காரணம் யாதெனில் திருமணமாகாத இளைய சகோதரர்கள் மற்றும் பெற்றோர்களைத் தாங்கவேண்டிய பொறுப்பு அதிகமாகக் காணப்படுவதாகும். இப்பகுதியில் வாழும் பிராமணர்கள் பொருளாதார அடிப்படையில் அதிக வசதியற்றவர்கள். தங்கள் பூர்வீகத் தொழிலாகிய அர்ச்சகர் தொழிலில் ஈடுபடாதவர்கள் கல்வி கற்று ஏதாவது ஒரு வேலையில் அமரும்வரை தங்கள் குடும்ப அங்கத்தினர்களின் உதவியை நாடவேண்டிய நிலையில் உள்ளார்கள். சான்றாக ஒரு குடும்பத்திலுள்ள திருமணமான இரண்டு சகோதரர்கள் சென்னையில் குடும்பமாக வாழ்கிறார்கள். அவர்களோடு திருமணமாகாத இரண்டு இளைய சகோதரர்கள் சேர்ந்து வாழ்கிறார்கள். அவ்வாறு சேர்ந்து வாழும் இளைய சகோதரர்கள் ஒரு வேலையில் அமரும்வரை அவர்களின் உணவு, உடை, கல்வி ஆகியவற்றிற்கு மூத்த சகோதரர்களே பொறுப்பாக உள்ளனர். மேலும் ஏனயை சாதியினரோடு ஒப்பிட்டுப்பார்க்கும் போது

பிராமணர்களிடையே பெற்றோர்கள் பெரும்பாலும் தனித்துவிடப்படாமல் இருப்பதைக் காணமுடிகிறது. கோ விலூர் பகுதியில் வாழும் எட்டுப் பிராமணர் குடும்பங்களில் எந்த ஒரு குடும்பத்திலும் பெற்றோர்கள் தனித்து வாழவில்லை.

முக்கியமான குடும்ப அங்கத்தினர்கள் திடீரென இறந்து விட்டால் ஏனைய குடும்ப அங்கத்தினர்களிடையே ஒருவித ஒருமைப்பாடும் விழிப்புணர்ச்சியும் ஏற்படுவதைக் காணமுடிகிறது. சான்றாகக் குடும்பத்தலைவர் இறந்துவிட்டால் பிள்ளைகளிடையே ஒருவித ஒற்றுமை ஏற்படுவதுண்டு. குடும்பப் பொறுப்புகளை ஏற்று நடத்தவேண்டிய பொறுப்பு மற்றும் தகப்பனை இழந்த துயரம் ஆகியவை அத்தகைய ஒருமைப்பாட்டை உருவாக்குகிறது. கோவிலூர்ப் பகுதியில் வாழும் வெள்ளாளர்களிடையே இரண்டு குடும்பங்கள் கூட்டுக் குடும்பங்களாகக் காணப்படுவதற்கு முக்கியக் காரணம் ஒரு குடும்பத்தில் குடும்பத்தலைவர் இறந்துவிட்டதும் இன்னொரு குடும்பத்தில் குடும்பத்தலைவி இறந்துவிட்டதுமாகும். இன்னும் சில குடும்பங்களில் குடும்பத் தலைவர் இறந்துவிட்டதில் மூத்த மகன் தன் இளைய சகோதரர் மற்றும் சகோதரிகளைத் தாங்கவேண்டுமென்ற எண்ணத்தோடு தனிக்குடித்தனம் அமைக்காமல் இருப்பதையும் காணமுடிகிறது. குடும்பத்தில் பொருளாதார வசதியில்லாது காணப்பட்டாலும் தங்களால் முடிந்தவரை உறவுமுறைக் கடப்பாடுகளை நிறைவேற்றுவதையும் பெற்றோர்களுக்கு உதவுவதையும் காணமுடிகிறது.

ஆசாரி சாதியினரிடையே சிலர் வெளிநாடுகளில் வேலை பார்க்கின்றனர். இதனால் முன்னர்க் குறிப்பிட்டுள்ளவண்ணம்

அவர்களின் குடும்ப அமைப்பில் சில மாறுதல்கள் ஏற்படுகின்றன. அதோடு குடும்ப அங்கத்தினர்களிடையே உள்ள உறவுகளிலும் சில மாறுதல்கள் ஏற்படுகின்றன. அதாவது வெளிநாடுகளில் வேலை பார்ப்பவர்கள் அனுப்பும் பணத்தினால் குடும்ப அங்கத்தினர்கள் சுகபோகமாக வாழ முயல்வதையும் அதனால் குடும்ப அங்கத்தினர்களிடையே மனப்பூசல்கள் ஏற்படுவதையும் காணமுடிகிறது.

கள்ளர் சாதியில் கூட்டுக்குடும்பங்களாகக் காணப்படும் ஒரு சில குடும்பங்களில் சகோதரர்களிடையே ஒருவித ஒருமைப்பாடும் கூட்டு முயற்சியும் காணப்படுகிறது. ஒரு சிலர் அரசு அல்லது தனியார் ஊழியர்களாகக் காணப்பட்டாலும் எல்லோரும் தங்கள் பாரம்பரியத் தொழிலாகிய விவசாயத்தில் அதிக ஈடுபாடுடையவர்களாகக் காணப்படுகின்றனர். எனவே அவர்களிடையே ஒருவித கூட்டுமுயற்சியும் காணப்படுகிறது. நிலங்கள் பங்கிடப்படாமல் இருப்பதால் குடும்பத்தலைவர் ஆதிக்கம் செலுத்துவதையும் காணமுடிகிறது. அதோடு பெற்றோரின் வயது சென்ற நிலையிலும் அவர்களை மதிப்பதும அவர்களின் சொற்படி ஏனைய அங்கத்தினர்கள் செயல்படுவதையும் காணமுடிகிறது. இக்குடும்பங்களில் பிள்ளைகளின் திருமணத்துக்குப்பின் அவர்கள் தனிக்குடித்தனம் அமைத்துப் பிரிந்து செல்வதைப் பெற்றோரும் விரும்புவதில்லை. அவ்வாறு பிரிந்து செல்பவர்களைச் சுயநலவாதிகள் என்றும் பெற்றோர் அவர்களை வெறுப்பதையும் காணலாம் இத்தகைய கூட்டுக்குடும்பங்களில் புதிய தலைமுறையினர்களுக்கு வயது சென்ற பெற்றோர் ஒரு பாரமாகத் தோன்றுவதில்லை.

முகமதியர்களிடையே குடும்ப அங்கத்தினர்களுக்கிடையிலான உறவுகளைப் பார்க்கும்போது பல குடும்பங்களில் பொருளாதார அடிப்படையிலான ஒருமைப்பாடுகள் இருப்பதைக் காணமுடிகிறது. பலர் வெளிநாடுகளில் வேலைபார்ப்பதால் பொருளாதார நிலையில் சற்று வசதிபடைத்தவர்களாகக் காணப்படுகின்றனர். வெளிநாடுகளில் வேலைபார்ப்பவர்களின் ஏனைய குடும்ப அங்கத்தினர்கள் ஒன்றாக சேர்ந்து வாழ்வதையும் காணமுடிகிறது. அவ்வாறு வெளிநாடுகளில் வேலைபார்ப்பவர்கள் தங்கள் சகோதரர்கள் மற்றும் நெருங்கிய உறவினர்களையும் வெளிநாடுகளுக்கு அழைத்துச் செல்வதையும் பொருளாதார நிலையில் ஏனைய அங்கத்தினர்களைத் தாங்குவதையும் காணமுடிகிறது. வயது சென்ற பெற்றோர்களும் மதிப்பாக நடத்தப்படுகின்றனர்

பள்ளர், பறையர் ஆகிய சாதி மக்களின் குடும்ப அங்கத்தினர்களுக்கிடையிலான உறவுகளைப் பார்க்கும்போது கூட்டுமுயற்சி, ஒருமைப்பாடு போன்றவை மிககுறைவாகவே காணப்படுகிறது. ஒரு சில குடும்பங்களைத் தவிர வேறு அனைத்து குடும்பத்தினரும் நிலமற்ற, கல்வி அறிவற்ற விவசாயக்கூலிகளாகும். பிள்ளைகள் சற்று வளர்ந்து தானாக உழைத்துச் சம்பாதிக்கும் பருவத்தை எட்டியவுடனேயே திருமணம் செய்துகொள்ளுகின்றனர். அவ்வாறு திருமணமானவுடனேயே தனிக்குடித்தனமும் அமைத்துவிடுகின்றனர் இவர்களிடையே கல்வி கற்று வேலையில் அமரும் வரை ஏனைய குடும்ப அங்கத்தினர்களைச் சார்ந்து வாழும் பழக்கம் மிககுறைவு. அவ்வாறு திருமணம் செய்த உடனேயே தனிக்குடித்தனம் அமைப்பதைப் பெற்றோரும் விரும்புகின்றனர் காரணம் அவர்கள் ஒன்றாக வாழ்வதற்குத் தேவையான பொருளாதார

வசதி இல்லாததாகும் இதேப்போன்று வயது சென்ற பெற்றோருக்கு பிள்ளைகள் செய்யவேண்டிய கடப்பாடுகளை ஒழுங்காக நிறைவேற்ற இயலாது காணப்படுகின்றர் பெற்றோர்களும் வயது சென்ற நிலையிலும் கூலி வேலைசெய்து தனித்து வாழ்வதையே விரும்புகின்றனர். காரணம் பொருளாதார வசதியற்றவர்களாகக் காணப்படுவதேயாகும். பல குடும்பங்களில் வயது சென்ற பெற்றோர்கள் துன்பப்படுவதையும் காணமுடிகிறது. தனிக்குடும்பங்களாகப் பிரிந்து வாழ்ந்தாலும் எவரும் வெளி ஊர்களுக்கோ அல்லது வேறு இடங்களுக்கோ சென்று குடியேறுவதில்லை. பெரும்பாலோரும் அதே தெருவில் தானே தனி குடித்தனம் அமைக்கின்றனர். இதனால் அவர்கள் பிரிந்து வாழ்ந்தாலும் உறவுமுறை அடிப்படையிலான இணைப்புகள் அதிகமாகக் காணப்படுகின்றன ஒரு சில குடும்பங்களிலிருந்து வேலையின் காரணமாக வெளி ஊர்களில் வாழ்பவர்களும் குடும்ப அங்கத்தினர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளனர் ஆனால் பொருளாதார அடிப்படையிலான இணைப்புகள் மிகக்குறைவாகவே காணப்படுகின்றன. மேலும் இவர்களிடையே இளைய சகோதரர்களின் கல்வி, தொழில் ஆகியவற்றிற்கு உதவுதல் மிகக்குறைவாகவே காணப்படுகறது சேர்ந்து வாழும் உறவிலை பெரும்பாலும் இருப்பதில்லை

இவ்வாறு குடும்ப அங்கத்தினர்களுக்கிடையிலான உறவுகளைப் பார்க்கும்போது சாதி அடிப்படையிலும் சில வேறுபாடுகள் உள்ளன. அத்தகைய வேறுபாடுகளுக்கு முக்கியக் காரணம் பொருளாதாரமாகும் அதோடு கல்வி, வேலைபார்க்கும் இடம், வேலையின் தன்மை ஆகியவைகளும் சில வேறுபாடுகளை உருவாக்குகின்றன

# வாழ்க்கைச்சடங்குகளில் உறவினர்களின் பங்கு

முதல்நிலை உறவினர் மட்டுமல்லாமல் இரண்டாவது நிலை, மூன்றாவது நிலை மற்றும் தூரத்து உறவினர்கள் ஒன்றாகச் சந்திப்பதற்கு வழிவகுப்பது வாழ்க்கைச் சடங்குகளாகும். குறிப்பாகத் திருமணம் மற்றும் சாவுச்சடங்குகளில் அனைத்து உறவினர்களும் கலந்துகொள்வது வழக்கம். ஒரு குடும்பத்தின் சடங்குகளுக்குக் குறிப்பிட்ட உறவினர்களை அழைக்கும்போது அவர்களும் தங்கள் குடும்பங்களில் சடங்குகள் வரும்போது இவர்களை அழைப்பது வழக்கம். அவ்வாறு உறவினர்கள் ஒன்றாகச் சந்திப்பது மட்டுமல்லாமல் முக்கியமான உறவுமுறை கடப்பாடுகளை நிறைவேற்றுவதும் வாழ்க்கைச் சடங்குகளிலாகும். வாழ்க்கைச் சடங்குகளில் இரத்த உறவினர். மண உறவினர் மட்டுமல்லாமல் மத குருக்கள், மத சார்பான மக்கள் மற்றும் வேறு சாதியினர் ஆகியோரும் பங்கேற்பதுண்டு.

தமிழகக் கிராமங்களை எடுத்துக்கொண்டால் முக்கியமாகப் பிறப்பு, காதுகுத்தல், பூப்புச்சடங்கு, திருமணம், சாவு ஆகிய சடங்குகள் காணப்படுகின்றன. அதோடு முகமதியர்களிடையே சுன்னத்துவிழா என்ற சடங்கும் காணப்படுகிறது.

**பிறப்புச்சடங்கு:**

அனைத்துச் சாதியினரிடையேயும் முதல் மகப்பேறுக்கு பெண்ணின் தாய்வீட்டுக்குச் செல்லும் பழக்கம் காணப்படுகிறது. அவ்வாறு செல்லும்போது பெண்ணின் தாய், தகப்பன், மூத்த சகோதர சகோதரரிகள் அகியோர் வந்து அழைத்துச் செல்வதும் அனுபவம் மிக்க பெண்கள் உதவியாக இருப்பதும் வழக்கம். பெரும்பாலும் பங்காளி உறவில் உள்ளவர்களாக இருப்பார்கள். ஆனால் தற்போது பெரும்பாலும் எல்லா சாதியினரும் மகப்பேறின் போது மருத்துவமனைக்குச் செல்லும் பழக்கம் காணப்படுகிறது. குழந்தைக்குப் பெயர் சூட்டுவது பெரும்பாலும் குழந்தையின் தகப்பன் வீட்டில் நடைபெறுகிறது. குழந்தை பிறந்ததை குழந்தையின் தகப்பன் வீட்டார் பார்க்கச்செல்லும்போது வெகுமதிகளுடன் செல்வது வழக்கம். குறிப்பாகக் குழந்தையின் தகப்பனின் சகோதரிகள் மற்றும் நெருங்கிய உறவினர்கள் குழந்தைக்குத் துணி மற்றும் வெகுமதிகள் வழங்கவேண்டும். சற்று வசதி படைத்தவர்கள் குழந்தை பிறந்து சுமார் மூன்று மாதங்கள் கழித்தபின் தாய் வீட்டு ஊர்க் கோவிலில் வழிபாடு நடத்துவார்கள். அப்போது தாய் வீட்டார் தகப்பன் வீட்டார் ஆகியோரோடு பிற சாதி மக்களும் கலந்துகொள்வதும் பண உதவி அளிப்பதும் வழக்கம். குழந்தையின் தாய் வீட்டார் குழந்தைக்கு நகை, ஆடை போன்ற வெகுமதிகள் அளிக்கவேண்டும். இதற்குக்

குழந்தையின் தாய் மாமன் முக்கிய பொறுப்புடையவராவர். மூன்று அல்லது ஐந்து மாதங்களுக்குப் பின் தகப்பனின் குடும்பத்தினர் சென்று குழந்தையையும் தாயையும் அழைத்து வருவார்கள். அவ்வாறு அழைத்துவரச் செல்லும்போது குழந்தைக்கு நகை மற்றும் வெகுமதிகள் வழங்குவார்கள். குழந்தையின் பெற்றோர் அல்லது நெருங்கிய உறவினர்கள் பெயர் சூட்டுவது வழக்கம். அவ்வாறு பெயர் சூட்டுவதற்கு முன் சோதிடரையோ அல்லது அய்யரையோ கலந்து ஆலோசிப்பதுண்டு. ஆனால் தற்போது சில சாதியினரிடம் குறிப்பாக அரிசனர்களிடையே அரசியல் தலைவர்களிடம் கொடுத்து பெயர் சூட்டும் பழக்கம் ஏற்பட்டுள்ளது. கிறித்தவர்கள் தங்கள் மதகுருவிடம் குழந்தையைக் கொடுத்துப் பெயர் சூட்டுவது வழக்கம். இவ்வாறு ஒரு பிறப்புச் சடங்கை எடுத்துக்கொண்டால் நெருங்கிய உறவினர்கள் பங்கெடுப்பதோடு மதகுருக்கள், பிற சாதியினர், நெருங்கிய நண்பர்கள், அரசியல் தலைவர்கள் ஆகியோரும் பங்கெடுப்பதைக் காணமுடிகிறது.

முகமதியர்களிடையேயும் மேலே குறிப்பிட்டது போன்ற பெரும்பாலான உறவினர்களும் பிறப்புச்சடங்கில் பங்கெடுக்கின்றனர். ஆனால் குழந்தை பிறந்தவுடன் தொழுகைக்காக மக்களை அழைக்கும் அழைப்பாகிய 'பாங்கு இக்காமத்தை'க் கூறிவிடுவார்கள். ஆனால் தொழுகை நடைபெறுவதில்லை. சாவுச்சடங்கின்போது தான் தொழுகை நடைபெறும். குழந்தை பிறந்த 40வது நாள் குழந்தையையும் தாயையும் குழந்தையின் தகப்பன் வீட்டிற்கு அழைத்துச்சென்று விடுவார்கள். தகப்பனின் பெற்றோர், சகோதரர்கள் மற்றும் நெருங்கிய உறவினர்கள் வெகுமதிகளுடன் குழந்தையை அழைப்பதற்குச் செல்வார்கள். தகப்பன் வீட்டில் சென்றதும் மதக்குருவை வரவழைத்துக் குழந்தைக்குப் பெயர் சூட்டுவார்கள்.

**காதுக்குத்துச் சடங்கு:**

இச்சடங்கில் குழந்தையின் தாய்மாமன் மிக முக்கியப் பங்கு வகிக்றிரார். அவர் நிறைவேற்றவேண்டிய கடப்பாடுகள் பல காணப்படுகின்றன. அதாவது குழந்தைக்குத் தேவையான நகை, ஆடை மற்றும் ஏனைய பொருட்களுடன் வரவேண்டும். குழந்தைக்குக் காதுகுத்தும் போது தாய்மாமன் மடியில் உட்காரவைத்துத்தான் [illegible]த்துவார்கள். காதுகுத்தும்போது குழந்தையை வீட்டிலிருந்து [illegible]ழைத்துவருவதும் குத்தியபின் பந்தலிலிருந்து வீட்டுக்கு [illegible]சல்வதும் தாய்மாமன் தான் வண்ணான் அல்லது [illegible]து வழக்கம். பந்தல் கட்டுவது நாட்டாமை அல்லது [illegible]த்த உறவினர்களின் கடமையாகும். பந்தலுக்குத் [illegible] வண்ணானின் பொறுப்பு. இச்சடங்கின் குழந்தையின் [illegible]வில் உள்ள அனைவரும் கலந்துகொண்டு மொய்யளிகள் [illegible]க்கம். காதுகுத்தும்போது குழந்தையின் தாய்மாமன் [illegible] கொண்டுவந்த இனிப்பு கலந்த அரிசியைக் குழந்தை[illegible] ஏனையோருக்கும் வழங்குவார்கள். அதையும் தாய்மாம[illegible] துவக்கி வைப்பார். உறவினர்கள் ரூபாய் மற்றும் [illegible]ளிக்கும்போதும் முதலில் தாய்மாமன்தான் துவக்கி [illegible] குழந்தையின் தகப்பன் தாய்மாமனுக்கும் அவருடைய மனைவிக்கும் துணி வாங்கிக் கொடுக்கவேண்டும். இச்சடங்கு குழந்தையின் தகப்பனின் வீட்டில்தான் நடைபெறும் அதற்கான அழைப்பு கொடுக்கும்போது முதல் முதலில் தாய்மாமனுக்குத்தான் கொடுக்கவேண்டும். பொதுவாக இச்சடங்கின் தேதியும் தாய்மாமன்தான் நிச்சயிப்பார். இச்சடங்கு முகமதியர்கள் தவிர அனைத்துச் சாதி மக்களிடையேயும் காணப்படுகிறது

அரிசனர்களிடையே இச்சடங்கு மேலும் சிறப்பாக நடைபெறுகிறது. இதில் ஊர்ப் பஞ்சாயத்தார் அல்லது நாட்டாமைக்காரரும் முக்கியப் பங்கு வகிப்பதைக் காணமுடிகிறது. தாய்மாமன் வரும்போது அவரையும் அவரோடு வருகிறவர்களையும் வரவேற்றல், விருந்து நடத்துதல், ரூபாய், வெகுமதிகளைச் சேகரித்தல், போன்றவற்றைப் பொறுப்பேற்று நடத்துவது நாட்டாமையின் கடமையாகும். தாய்மாமனையும் அவரோடு வந்தவர்களையும் வரவேற்பதில் குழந்தையின் தகப்பனின் சகோரிகள் முக்கியப் பங்கு வகிக்கின்றனர். தாய்மாமன் வரும்போது தட்டு, குடம், செம்பு ஆகியவற்றில் விளக்குகளுடன் தாய்மாமனை மூன்றுமுறை வலம்வந்து முதலில் தாய்மாமனுக்கும் பின்னர் ஏனையோருக்கும் திருநீறு பூசி வரவேற்பார்கள். இச்சடங்கில் மதக் குருக்களின் பங்கு ஏதுவும் காணப்படவில்லை ஏனைய சாதியினர் நெருங்கியவர்களாக இருந்தால் அவர்களும் கலந்துகொள்வதுண்டு. இவ்வாறு காதுகுத்துச் சடங்கில் தாய்மாமன் முக்கியப் பங்கு ஆற்றுவதையும் தன் உறவுமுறைக் கடப்பாடுகளை நிறைவேற்றுவதையும் காணமுடிகிறது.

**பூப்புச்சடங்கு:**

இச்சடங்கு எல்லாச் சாதி மதத்தவரிடமும் காணப்படுகிறது. ஆனால் உறவினர்களின் பங்கு, சடங்ககின் முறைகள் ஆகியவற்றில் வெவ்வேறு சாதியினருக்கிடையே வேறுபாடுகள் காணப்படுகின்றன. பெரும்பாலான சாதியினரிடையேயும் ஒரு பெண் வயதுக்கு வந்தவுடன் முதலில் அப்பெண்ணின் தாய்மாமனுக்கு ஊர் வண்ணான் மூலம் செய்தி அனுப்புவார்கள். தாய்மாமன் வந்த பிறகுதான் பெண்ணை நீராட்டுவார்கள். அவ்வாறு நீராட்டும்போது

தாய்மாமனின் மனைவிதான் முதலில் பெண்ணின் தலையில் தண்ணீர் விடவேண்டும். தாய்மாமன் குடும்பதினர் வரும்போது துணி, இனிப்பு, பழம் போன்ற வெகுமதிகளோடு வருவார்கள். 16-வது நாள் திரும்பவும் நீராட்டுவார்கள். அன்று தாய்மாமன் மற்றும் அவருடைய பங்காளிகளும் பெண்ணின் தகப்பனின் பங்காளிகளும் கூடி வந்து துணி, ரூபாய் போன்ற வெகுமதிகளை வழங்குவது வழக்கம். அன்று பருவமடைந்த பெண் அணியவேண்டிய துணியை ஊர் வண்ணான் தான் கொண்டுவரவேண்டும். இச்சடங்கில் நாவிதருக்கு எந்தப் பங்கும் இல்லை. கோவிலிலும் எந்தவிதச் சடங்கும் நடத்துவதில்லை. ஏனைய சடங்குகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது இச்சடங்கில் நாவிதர், மதகுருக்கள் ஆகியோருக்குக் குறிப்பிடத்தக்க பங்கு எதவும் இல்லாது இருப்பது குறிப்பிடத்தக்கது.

முகமதியர்களிடையே பெண்கள் பருவமடைந்தால் சிறுவர்கள் மூலம் உறவினர்களுக்குச் செய்தியனுப்புவார்கள். முதல்நாளும் ஏழாவது நாளும் பருவமடைந்த பெண்ணை நீராட்டுவார்கள். இதில் குறிப்பிட்ட உறிவர்கள் எவரும் முக்கியப் பங்கேற்பதில்லை. முதல் ஏழு நாட்களும் அப்பெண் குரானைத் தொடவோ உச்சரிக்கவோ கூடாது. வசதி உடையவர்கள் விருந்து வைப்பார்கள். இச்சடங்கில் மதத்தலைவரின் பங்கு மற்றும் தொழுகை எதுவும் இல்லை.

**திருமணச்சடங்கு:**

முன்னர் குறிப்பிட்டுள்ளவண்ணம் கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் அனைத்துச் சாதி மக்களிடையேயும் மாமன் மகள், அத்தைமகள், அக்காமகள் ஆகியோரைத் திருமணம்

செய்துகொள்ளும் வழக்கம் காணப்படுகிறது. அதோடு முதல்மனைவிக்குக் குழந்தைகள் இல்லாதிருந்தால் முதல் மனைவியின் சம்மதத்தோடு இரண்டாவது திருமணம் செய்துகொள்ளும் வழக்கமும் பெரும்பாலான சாதியினரிடமும் காணப்படுகிறது. அதோடு, குறிப்பாக அரிசர்களிடையே வடகிளை, தென்கிளை என்ற பிரிவுகளும் காணப்படுகின்றன. ஒரு கிளையைச் சேர்ந்தவர்கள் இன்னொரு கிளையைச் சேர்ந்தவர்களோடு திருமணத்தொடர்பு கொள்வதில்லை. காரணம் வடகிளையைச் சேர்ந்தவர்கள் சற்று உயர்ந்தவர்கள் என்று கருதுகின்றனர். அதோடு அரிசனர்களிடையே முற்காலத்தில் தாய்மாமனுக்கு ஒரு பெண் கொடுக்கவேண்டும் என்ற ஒழுங்கு காணப்பட்டது. காரணம் காதுகுத்துச் சடங்கு, பூப்புச்சடங்கு ஆகிய சடங்குகளின் போது தாய்மாமன் ஏராளம் செலவுசெய்திருப்பதால் அவர் தான் முதல்பெண்ணுக்கு உரிமையாளர் என்ற கருத்து காணப்பட்டது. முதல்பெண்ணை வேறு யாராவது கூடுதல் பரிசம் கொடுத்துத் திருமணம் செய்வதாக இருந்தால் அப்பெண்ணின் தாய்மாமன் கடத்திச்சென்று விடுவதும் காணப்பட்டது. ஆனால் ஒரு பெண்ணின் முறை மாப்பிள்ளை அவளைக் கட்ட மறுத்தால் விட்டுவிடுவது வழக்கம். தற்போது கல்வி, வரதட்சணை முறை ஆகியவற்றின் காரணமாக இத்தகைய திருமணமுறைகளில் பல மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. சொத்து, பணம், படிப்பு, அழகு ஆகியவையும் இத்தகைய திருமணங்களில் முக்கிய மாறுதல்களை ஏற்படுத்தியுள்ளன. ஆனால் பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு நெருங்கிய உறவினர்களிடையே திருமணத்தொடர்பு கொள்வது நல்லது என்று கருதுகின்றனர். அதனால் மாமியார் மருமகள்களுக்கு இடையிலான பூசல்கள் எற்படுவதில்லை என்று கூறுகின்றனர். உறவினர் அல்லாத

ஒரு பெண்ணைத் திருமணம் செய்தால் அவள் கணவனின் பெற்றோரை மனப்பூர்வமாக மாமா, மாமி என்று அழைப்பதில்லை என்றும் கூறுகின்றனர். திருமணமாகிவரும் பெண் உறவினராக இருந்தால் குடும்பத்தின் ஏனைய அங்கத்தினர்களோடு பழகும்போதும் பூசல்கள் ஏற்படுவதில்லை. பாசபந்தத்தோடு இருப்பார்கள். கணவனும் சந்தேகப்படுவதில்லை என்று கூறுகின்றனர். ஆனால் புதியதலைமுறையினரிடையே இத்தகைய திருமண முறைகளைத் தவிர்க்கும் எண்ணம் உருவாகிவருகிறது.

அனைத்துச் சாதி மக்களிடையேயும் திருமணம் நிச்சயிப்பதில் பெற்றோர் மற்றும் சகோதரச் சகோதரிகள் கலந்துகொண்டாலும் தாய் மாமனின் சம்மதத்தோடுதான் நிச்சயம் நடைபெறும். ஆண் வீட்டார் பெண்வீட்டிற்கு வந்து நிச்சயம் பண்ணுவது வழக்கம். பெரும்பாலான திருமணங்களிலும் திருமணத்தை நடத்திவைப்பது அய்யர்தான். மணமக்களை வாழ்த்துவது, பட்டம் கட்டுவது, பணம், வெகுமதிகள் வழங்குவது போன்ற சடங்குகளை முதலில் தாய்மாமன்தான் துவக்கிவைப்பார். திருமணச்சடங்கில் நாவிதர், வண்ணான் ஆகியோருக்கும் முக்கியப் பங்கு காணப்படுகிறது. இதைப்போன்று அகமுடையார், கள்ளர், செட்டியார் போன்ற சாதி மக்களின் திருமணங்களில் அரிசனர்கள் பணிபுரிவதுண்டு. ஆனால் இவர்களுக்குத் தனியாகத்தான் உணவு கொடுப்பார்க்ள்.

அரிசனர்களிடையே ஆண் வீட்டார்தான் பெண் தேடிச் செல்லவேண்டும். அவ்வாறு பெண் தேடுவதில் முக்கியப் பங்கு வகிப்பவர்கள் பெற்றோரும் தாய்மாமனுமாவர். முதலில் பெண் தேடிச்செல்லும்போது பெண் வீட்டார் பெண்ணின் தாய்மாமனைக்

கேட்கும்படிச் சொல்வார்கள். திருமணம் நிச்சயிக்கும்போது பஞ்சாயத்தார், தாய்மாமன் மற்றும் நெருங்கிய உறவினர்கள் கலந்து கொள்வதுண்டு. திருமணம் நிச்சயித்தபின் மணமகனின் அல்லது மணமகளின் தாய்மாமன் உறவில் உள்ளவர்கள் இவர்களை அழைத்துச்சென்று விருந்துகொடுக்கும் பழக்கமும் காணப்படுகிறது. திருமண அழைப்பிதழ் கொடுக்கும்போது முதலில் தங்கள் ஊர்ப் பொதுக் கோவிலுக்கு ஒரு மரக்கால் நெல், ஒரு ரூபாய், வெற்றிலைச் சீவல் ஆகியவற்றை அக்கோவில் பூசாரியிடம் கொடுத்து வேண்டிக்கொள்வார்கள். தஞ்சாவூரிலிருந்து சுமார் 25 கி.மீ. தூரத்திலுள்ள பண்டாரவாடை என்ற கிராமத்தில் வாழும் அரிசனர்களிடையே இன்னொரு பழக்கமும் காணப்பட்டுள்ளது. திருமண அழைப்பிதழ் கொடுக்கும்போது ஊர்க் கோவிலில் வேண்டிக்கொண்டதின் பிறகு 'பாப்பானுக்கு பாக்கு வைத்தல்' என்ற ஒரு பழக்கம் காணப்பட்டுள்ளது. அதாவது இரண்டு வெற்றிலையும் ஒரு பாக்கும் எருக்குச் செடியின் பக்கத்தில் வைத்துவிட்டு வருவார்கள். அரிசனர்கள் கொடுக்கும் வெற்றிலைப் பாக்கை பிராமணர்கள் வாங்கமாட்டார்கள் என்பதால் அவ்வாறு செய்வதாகக் கூறுகிறார்கள். தற்போது பண்டாரவாடையில் பிராமணர்கள் யாரும் இல்லை. கடவுளுக்கு அடுத்தபடியாக பிராமணர்கள் என்ற ஒரு எண்ணம் அவர்களிடையே காணப்படுவதால் இவ்வாறு செய்கிறார்கள் என்றும் கருதலாம். இப்பழக்கம் பண்டாரவாடையிலும் கோவிலூர் மேலமாகாணம் பகுதியிலும் இப்போது நடைமுறையில் இல்லை. அடுத்தாகத் தாய்மாமனுக்கு நேரில் சென்று அழைப்பிதழ் கொடுப்பார்கள். பின்னர் ஏனைய உறவினர்களுக்கு அழைப்பிதழ் கொடுப்பார்கள். தாய் மாமனுக்கு அழைப்பிதழ் எடுத்துச்செல்லும்போது தங்கள் குலதெய்வத்துக்குப் படைத்து வேண்டுதல் செய்து கொள்வார்கள்.

திருமணத்துக்கு நெல் வேகவைக்கும்போதும், தாய்மாமன் வந்து முதல்முதலில் தண்ணீரில் நெல் போடுவார். இது திருமணத்துக்கு 9 நாட்களுக்கு முன் நடைபெறும். இவ்வாறான பணிகளில் நெருங்கிய உறவினர்கள் உதவியாக இருப்பார்கள். முற்காலத்தில் பங்காளிகளிடம் (கால்வழி உறுப்பினர்) வீட்டுக்கு 6 மரக்கால் நெல் வீதம் கொடுத்துவிடுவார்கள். அவர்கள் அதனை வேகவைத்து அரிசியாக்கிக் கொடுப்பார்கள். திருமணப்பந்தல் போடுவது கிராமப் பஞ்சாயத்தாரின் பொறுப்பாகும். திருமணத்துக்கு மூன்று நாட்களுக்குமுன் இரு வீட்டிலும் பஞ்சாயத்தார், வீட்டார் ஆகியோர் சேர்ந்து பந்தலுக்குக் கால் நாட்டுவார்கள். திருமணத்துக்கான தாலி செய்வது ஆண் வீட்டார் பொறுப்பாகும். மேலமாகாணம் பகுதியில் வாழும் அரிசனர்கள் முற்காலத்தில் கள்ளர் சாதியைச் சேர்ந்த பெரும் நிலச்சுவாந்தார்களிடம் சென்று உங்கள் ஞாபகமாக என் மகனுக்குத் தாலி செய்து கொடுங்கள் என்று கேட்பார்கள். அவர்கள் அதைப் பெருமையாகக் கருதிப் பணத்தைப் பார்க்காமல் தாலி செய்து கொடுக்கும் பழக்கம் காணப்பட்டுள்ளது. அவ்வாறு தாலி செய்து கொடுக்கக் கேட்காவிட்டால் மணமகனுக்கும் மணமகளுக்கும் துணி வாங்கிக்கொடுக்குமாறு கேட்பார்கள். இப்போதும் கள்ளர் சாதியினரின் நிலத்தில் பணிபுரிபவர்களுக்கு வேட்டி, துண்டு, ஒரு புடவை ஆகியவற்றை வாங்கிக்கொடுக்கும் பழக்கம் காணப்படுகிறது.

திருமணத்தன்று ஆண்வீட்டார், பெண் வீட்டுக்குச் செல்லும்போது பெண்ணுக்கு மற்றும் பெண்ணின் தாய், தாய்மாமன், சகோதரன் ஆகியோருக்கு துணி வாங்கிச் செல்லவேண்டும். பெண் வீட்டில் நாட்டாமை, ஓடும் பிள்ளை, மற்றும் பெண்ணின் தகப்பன் ஆகியோர் மணமகனையும் அவரோடு வருகிறவர்களையும்

வரவேற்பார்கள். பெண்ணின் தாயார் மணமகனுக்கு காலில் 'மிஞ்சு' போடவேண்டும். பெண்ணின் சகோதரன் மணமகனின் கையில் மோதிரம் அணிவார். பின்னர் பெண்ணின் சகோதரி உறவில் உள்ளவர்கள் மணமகனுக்கு 'ஆராத்தி' எடுத்து வரவேற்பார்கள். மணமகனோடு பெண் வீட்டிற்குச் செல்பவர்கள் பெரும்பாலும் மணமகனின் மண உறவினராவர். மணமகன் மணமகள் வீட்டிற்குச் செல்லும்போது மணமகளின் பெற்றோர், சகோதரர், சகோதரிகள் மற்றும் ஊர் நாட்டாமை ஆகியோர் ஒவ்வொருவிதத்தில் மணமகனை வரவேற்கும் முறையைக் காணமுடிகிறது. இங்கு ஒவ்வொரு உறவினருக்கும் ஒரு பங்கு இருப்பதைக் காணலாம். மணமகன் தாலி கட்டும்போது அவருடைய சகோதரி உதவியாக இருக்க வேண்டும். திருமணம் நடத்திவைப்பதற்கு அரிசனர்களுக்கு என்று தனியாகக் குருக்கள் இருக்கிறார்கள். உறவினர்களும் நண்பர்களும் மணமக்களுக்கு வெகுமதிகள் வழங்கி வாழ்த்தும்போது முதலில் பெண்ணின் தாய்மாமன்தான் ஆரம்பித்துவைப்பார். மணமகனும் அவரோடுவந்தவர்களும் மணமகளும் திரும்பிச் செல்லும்போது நாட்டாமை, ஓடும் பிள்ளை மற்றம் உறவினர்கள், ஊர் எல்லை வரையிலும் சென்று வழியனுப்பி வைப்பார்கள்.

ஏனைய சாதி மதத்தவரும் அரிசனர்களின் திருமணங்களில் கலந்துகொள்வதுண்டு. ஆனால் உயர்ந்த சாதியினர் பெரும்பாலும் உண்பதில்லை. இவர்களின் வண்ணான் பந்தலுக்குத் துணிக்கட்டுதல் போன்ற வேலைகளையும் நாவிதர் மணமகனுக்குச் சவரம் செய்தல் போன்ற வேலைகளையும் செய்வார்கள். அதற்கான கூலிகள் அளிக்கப்படுகின்றன.

மேலமாகாணம் பகுதியில் வாழும் அரிசனர்களிடையே தந்தை பெரியாரின் கொள்கைகளின் தாக்கம் சற்று அதிகமாக இருப்பதைக் காணலாம். இதன் விளைவாக வாழ்க்கைச் சடங்குகளின் ஒரு சில பகுதிகளிலும் சில மாறுதல்கள் காணப்படுகின்றன. சான்றாகக் குருக்களை வைத்துத் திருமணம் நடத்துவதற்குப் பதிலாக அரசியல் தலைவர்களை வைத்துத் திருமணம் நடத்தும் பழக்கம் ஏற்பட்டுள்ளது. அதோடு குழந்தைகளுக்குப் பெயர் சூட்டும்போதும் குருக்கள் சோதிடர் ஆகியோரைக் கலந்து ஆலோசிப்பதை விட்டுவிட்டு அரசியல் தலைவர்களிடம் குழந்தையைக் கொடுத்துப் பெயர் சூட்டும் பழக்கம் காணப்படுகிறது.

கிறித்தவ அரிசனர்களும் பெரும்பாலான பாரம்பரியத் திருமணச்சடங்குகளைப் பின்பற்றிவருகின்றனர். ஆனால் சிலவற்றில் வேறுபடுகின்றனர். திருமண அழைப்பிதழ் கொடுக்கும்போது முதலில் பாதிரியாரிடம் (Priest) அனுமதி பெற்ற பின்தான் தாய்மாமனுக்குக் கொடுப்பார்கள். திருமணம் ஆலயத்தில் நடைபெறும்போது பாரம்பரியச் சடங்குகளில் சில தடைபடுவதைக் காணலாம்.

முகமதியர்களிடையே தகப்பனின் உடன்பிறந்தவர்களின் பிள்ளைகள் தாயின் உடன்பிறந்தவர்களின் பிள்ளைகள் ஆகியோரைத் திருமணம் செய்துகொள்ளும் பழக்கம் காணப்படுகிறது. ஆனால் தற்போது அவ்வாறு திருமணம் செய்துகொள்ளும் பழக்கம் குறைந்து வருகிறது. காரணம் சகோதரி என்ற எண்ணம் உருவாகி வருகிறது. ஒன்றுவிட்ட சகோதரியின் மகளைத் திருமணம் செய்துகொள்வார்கள். ஆனால் சகோதரியின் மகளைத் திருமணம் செய்து கொள்வதில்லை. முகமதியர்களிடையேயும் ஆள்விட்டார்

தான் பெண் தேடிச்செல்லவேண்டும். முதலில் ஆண் வீட்டைச் சேர்ந்த பெண்கள்தான் பெண்ணைப் பார்க்கச் செல்வார்கள். அவர்கள் விரும்பினால் இரு வீட்டு ஆண்களும் சந்தித்துப் பேசுவார்கள் திருமணம் நிச்சயித்தபின் இரு வீட்டாரும் மறுப்புத் தெரிவிப்பதில்லை. அவ்வாறு மறுத்தால் பரிபாலனச் சபைக்குத் தெரியப்படுத்துவார்கள். திருமணத்துக்குமுன் பெண் வீட்டார் ஆண் வீட்டிற்குச் செல்வதில்லை. திருமணத்துக்குச் சுமார் ஒரு வாரத்துக்கு முன் பள்ளிவாசலுக்குத் திருமணப் பத்திரிகை கொடுத்து அறிவிக்கவேண்டும். திருமண்த்துக்கு முன் பள்ளிவாசலுக்குச் செய்யவேண்டிய கடமைகள் ஏதாவது இருந்தால் அவற்றை நிறைவேற்றவேண்டும். இல்லையேல் திருமணம் தடை செய்யப்படும். கோவிலூர்ப் பகுதியில் இதுவரை எந்த ஒரு திருமணமும் தடைசெய்யப்பட்டதாகத் தகவல் இல்லை. திருமணத்துக்கு முன் தினம் மணமகளின் சகோதரிகள், சகோதரனின் மனைவி ஆகியோர் மணமகனுக்கு மருதாணி போடும் பழக்கம் காணப்படுகிறது. திருமணம் வீட்டில் அல்லது பள்ளிவாசலில் நடைபெறும். பள்ளிவாசலில் திருமணம் நடைபெற்றாலும் பெண் பள்ளிவாசலுக்குச் செல்வதில்லை. திருமணத்தின்போது பள்ளிவாசல் குழு அங்கத்தினர்களான 'ஜமாத்மார்கள்', 'கஜிரத்மார்கள்' இருப்பார்கள். திருமணத்தன்று பள்ளிவாசல் திருமணப் பதிவேட்டில் இருவருடைய பெயரையும் பதிவுசெய்வார்கள். திருமணத்தில் பெண்ணுக்கு வக்காலத்தாக ஒருவர் இருப்பார். பெரும்பாலும் பெண்ணின் தகப்பன் அல்லது தகப்பனின் சகோதரன் அல்லது தாயின் சகோதரன் இருப்பார். அவர் மூலமாகத்தான் பெண் தன் சம்மதத்தைத் தெரிவிப்பாள். பெண்ணின் தகப்பன் மணமகளின் கையைப் பிடித்து எனது மகளாகிய இன்னாரை (பெயர் சொல்லி) இத்தனை ரூபாய் மகர்

தொகைக்கு இன்ன சாட்சிகளின் முன் மற்றும் சபையில் இருப்பவர்கள்முன் உனக்கு மனைவியாகக் கொடுக்கிறேன் என்று சொல்வார். மணமகனும் அப்பெண்ணை எப்போதும் என் மனைவியாக ஏற்றுக்கொள்கிறேன் என்று சபையோர்முன் கூறவேண்டும். பின்னர் கஜிரத் (Priest) குத்பா ஓதுவார். பின்னர் மனமகன் வீட்டைச் சேர்ந்த பல பிள்ளைகள் பெற்று கணவனோடு மகிழ்ச்சியாய் வாழும் வயதுசென்ற ஒரு பெண் மணமகளுக்குத் தாலிகட்டுவாள். பின்னர்த் திருமணம் பள்ளிவாசலில் நடைபெற்றால் மணமகனை பெண்வீட்டிற்கு அழைத்துச்செல்வார்கள். பெண்வீட்டார் மணமகனுக்கு வெகுமதிகளை வழங்குவார்கள். திருமணச் சடங்குகளைப் பொறுப்பேற்று நடத்துவது தகப்பனின் சகோதரர்கள் அல்லது மூத்த சகோதரியின் கணவன் ஆகியோராகும். குறிப்பிட்ட நபர்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கும் பழக்கம் இல்லை. வேறு சாதி மதத்தைச் சேர்ந்த நண்பர்கள் திருமணத்தில் கலந்துகொள்வதுண்டு. வண்ணானுக்கு எந்தவிதப் பங்கும் இல்லை. நாவிதர் மணமகனுக்கு சவரம்ச் செய்வார். மணமகன் நீராடும்போது பயன்படுத்திய துணிகைளை அவருடைய தலையைச்சுற்றி வைத்துவிடுவார்கள். அவற்றை நாவிதர் எடுத்துச்செல்வார்.

**சாவுச்சடங்கு:**

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் கள்ளர், அகமுடையார், வெள்ளாளர் போன்ற பெரும்பான்மையான சாதி மக்களிடையே ஒருவர் இறந்து விட்டால் ஊர் அரிசனம் வகுப்பில் ஒரு பிரிவினரான வெட்டியான் என்பவர்கள் மூலம் உறவினருக்கு அறிவிப்பார்கள். இறந்தவரை நீராட்டுவதற்கு அவருடைய பங்காளி

உறவில் உள்ளவர்கள் ஆற்றிலிருந்து தண்ணீர் கொண்டுவருவார்கள். அவ்வாறு தண்ணீர் கொண்டுவரும்போது மேலே துணி பிடிப்பது இறந்தவரின் மண உறவினர்கள்தான் பிடிக்க வேண்டும். அதோடு மண உறவினர் வரும்போது வாய்க்கரிசிக் கூடை எடுத்து வருவார்கள். ஆனால் பங்காளி உறவினர் (இரத்த உறவினர்) கொண்டுவருவதில்லை. இறந்தவர் பெண்ணாக இருந்தால் தகப்பன் குடும்பத்தார் வரும்போது புதுத்துணி கொண்டு வரவேண்டும். பாடையைத் தூக்கிச் செல்வது பங்காளி உறவினர்தான். பாடை கட்டுதல் போன்ற வேலைகளை அரிசனர்கள் செய்வார்கள். பிணத்தை எரிக்கும்போது இறந்தவரின் மூத்த மகன்தான் தீ வைப்பார். எரித்தபின் ஊரின் முக்கிய இடத்தில் வண்ணான் கொண்டுவந்த துணியை விரித்து அதன்மேல் அமர்ந்து காசு கொடுக்க வேண்டியவர்களுக்கு கொடுப்பார்கள். இறந்தவருக்குச் சவரம் செய்தல், கொள்ளிப் பானையை உடைத்தல் போன்ற வேலைகளை நாவிதர் செய்வார். இறந்தவர் வீட்டில் அன்று சமையல் நடைபெறாது. அண்மையிலுள்ள மண உறவினர்கள் சமைத்துச் கொண்டுவரும் உணவைத்தான் உண்டார்கள். மூன்றாவது நாள் கடவுளுக்குப் படைப்பார்கள். அதற்குவேண்டிய பலகாரங்களும் மணஉறவினர்தான் கொண்டுவருவார்கள். 16-வது நாள் இறுதிச்சடங்கு நடைபெறும். அன்று அய்யரை வரவழைப்பார்கள். முன்தினம் படைத்துவேண்டுதல் செய்வார்கள். அதற்கான பலகாரங்களும் மணஉறவினர்தான் கொண்டு வருவார்கள். கருமாதியில் பங்காளி உறவில் உள்ளவர்களுக்கு அதிக பொறுப்பு காணப்படுகிறது. கருமாதி செய்தவருக்கு முதலில் தாய்மாமனும் பின்னர் ஏனைய மணஉறவினரும் துணி அல்லது நகை போடுவார்கள். மறுநாள் அல்லது இரண்டாவது நாள் எண்ணெய் தேய்த்தல் நடைபெறும். அன்றையச் செலவுகளையும் மணஉறவினர்தான்

பகிர்ந்து கொள்ளவேண்டும். கொள்ளி வைத்தவருக்கு அவருடைய தாய்மாமன்தான் எண்ணெய் தேய்ப்பார். பின்னர் பங்காளிகள் எண்ணெய் தேய்த்துக் குளிக்கவேண்டும்.

அரிசனர்களிடையே ஒருவர் இறந்துவிட்டால் முதலில் இறந்தவரின் தாய்மாமன் குடும்பத்துக்குச் செய்தி அனுப்புவார்கள். முற்காலத்தில் இவர்களிடையே காணப்பட்ட வெட்டிச் சேவகர் என்பவர்கள் மூலம் செய்தி அனுப்புவார்கள். இப்போது உறவினர்களே செல்வது வழக்கம். தாய்மாமன் இல்லாதிருந்தாலும் அவருடைய குடும்பத்தினர் புதுத்துணி (கோடி) கொண்டுவந்து இறந்தவருக்குப் போடவேண்டும். இறந்தது பெண்ணாக இருந்தால் பிறந்த ஊருக்கு முதலில் செய்தியனுப்புவார்கள். பிறந்த ஊரார் வரும் போது ஏனைய பொருட்களோடு ஒரு செம்பு நிறைய தண்ணீரும் கொண்டுவருவார்கள். அதாவது பிறந்தஇடத்துத் தண்ணீரால் நீராட்டவேண்டும் என்பதற்காக அவ்வாறு செய்கிறார்கள்.. நீராட்டுவதற்குப் பங்காளிமார் தான் தண்ணீர் கொண்டுவரவேண்டும். குழி தோண்டுவது, பாடை கட்டுவது போன்ற வேலைகளை வெட்டியான் செய்வார். பாடையைத் தூக்கிச் செல்வது இறந்தவரின் பிள்ளைகள் அல்லது பங்காளிமார்தான். இறந்தது தாயாக இருந்தால் தலைமகனும் (மூத்தமகன்) தகப்பனாக இருந்தால் கடைசி மகனும் கொள்ளிவைக்கவேண்டும். மகன் இல்லாவிட்டால் நெருங்கிய பங்காளிகளில் மகன் முறையில் இருப்பவர்கள் கொள்ளி வைப்பார்கள். அவ்வாறு பங்காளி கொள்ளி வைத்தால் இறந்தவரின் சொத்தில் கால் பகுதி அவருக்குக் கொடுக்கவேண்டும். வண்ணான், நாவிதர் ஆகியோரும் இச்சடங்கில் முக்கியப் பங்கு வகிக்கிறார்கள். இறந்தவரை நீராட்டுவது, நகைகளை கழட்டுவது ஆகியவை

வண்ணானின் பொறுப்பாகும். தற்போது வெட்டியான் இல்லாவிட்டால் பாடைகட்டுவதும் வண்ணான் நாவிதர் ஆகியோரின் பொறுப்பாகும். இறந்தவரை எரித்தபின் வண்ணான் கொண்டுவந்த துணியை விரித்து அதில் அமர்ந்து சடங்கில் பங்குகொண்ட தொழில் பிரிவினருக்குப் பணம் கொடுப்பார்கள். அப்போது முதலில் தாய்மாமன் குடும்பத்தினர் பணம் கொடுக்கவேண்டும். தாய்மாமன் குடும்பத்தினர் பலர் வாய்க்கரிசி கொண்டு வருவார்கள். அதில் வண்ணான், நாவிதர்களுக்கும் பங்கு கொடுப்பார்கள். அண்மையில் வாழும் மணஉறவினர் ஏதாவது சமைத்து எடுத்துவருவார்கள். அதைத்தான் எல்லோரும் உண்பார்கள். மூன்றாவது நாள் பால் தெளித்தல் என்ற சடங்கு நடைபெறும். அன்று பங்காளிகள் மற்றும் மணஉறவினர் பால் பலகாரம் ஆகியவை கொண்டுவருவார்கள். 16-வது நாள் கருமாதி நடைபெறும். அன்று கொள்ளிவைத்தவருக்கு அவருடைய தாய்மாமன் முதலில் வேட்டிக் கட்டவேண்டும். இத்துடன் ஒருவருக்கு தாய்மாமன் செய்யவேண்டிய உறவுமுறைக் கடப்பாடுகளும் முடிவடையும்.

முகமதியர்களிடையே ஒருவர் இறந்துவிட்டால் உறவினர்களுக்கும் பள்ளிவாசலுக்கும் தெரியப்படுத்துவார்கள். மதக்குரு வந்து 'துவா' ஓதியபின் நீராட்டவேண்டும். நெருங்கிய உறவினர்கள்தான் நீராட்டுவார்கள். வண்ணான், நாவிதர் போன்ற சாதியினருக்கு எந்தவிதப்பங்கும் இல்லை. குழி தோண்டுவதும் முகமதியர்கள்தான் தோண்டுவார்கள். இறந்தவர்கள் ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் பள்ளிவாசலுக்குக் கொண்டு செல்வார்கள். அங்கு 'சலாத்து ஜனாஜா' என்ற தனித் தொழுகை நடைபெறும். இறந்தவர் ஆணாக இருந்தால் நெருங்கிய உறவினர் யார்

வேண்டுமானாலும் தூக்கிச்செல்லலாம்.
இருந்தால் அவள் திருமணம் செய்துகொ...
இல்லாதவர்கள் தான் தூக்கிச் செல்லவேண்டும். கணவன் இறந்த...
மனைவி 'இத்தா' இருக்கவேண்டும். அதாவது 30 நாட்களுக்கு மாமன் சகோதரர்கள் ஆகியோரைத் தவிர வேறு எந்த ஆண் முகத்தையும் பார்க்கக்கூடாது. மண உறவினர்களின் வீட்டில் சமையல் செய்து கொண்டுவரும் பழக்கம் இவர்களிடையேயும் காணப்படுகிறது. மூன்றாவது நாள் பாவமன்னிப்புக்காக மதக்குரு சென்று 'துவா' ஓதுவார். 7-வது நாள் 40-வது நாள் ஆகிய நாட்களில் வீட்டில் தொழுகை நடத்துவார்கள். குறிப்பாக ஏழைகளுக்கு விருந்து நடத்துவார்கள்.

கிறித்தவப் பறையர்களிடையே தங்கள் பாரம்பரியச் சடங்குகளில் மத ஒழுங்கிற்கேற்றாப்போல சில மாறுதல்களைக் காணலாம். ஆனால் உறவினர்களின் பங்கில் குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் எதவும் இல்லை. இவர்கள் இறந்தவர்களைப் புதைப்பதால் கொள்ளிவைத்தல் இல்லை.

மேலே குறிப்பிடப்பட்டுள்ள பாரம்பரிய வாழ்க்கைச் சடங்குகளில் பல மாறுதல்கள் ஏற்பட்டுவருகின்றன. அப்பகுதியில் வாழும் அரிசனர்கள் மற்றும் ஏனைய சாதியினர் பெரும்பாலும் எதாவது ஒரு அரசியல் கட்சியைச் சேர்ந்தவர்களாகக் காணப்படுகின்றனர். தற்போது திருமணங்களில் தங்கள் அரசியல் கட்சிப் பிரமுகர்களை வரவழைத்து அவர்கள் முன்னிலையில் தாலிகட்டும் பழக்கம் ஏற்பட்டுள்ளது. அவர்கள் திருமண ஒப்பந்தம் எழுதிக் கையெழுத்து வாங்கித் தாலிகட்டச் செய்வார்கள். இவ்வாறு

அரசியல் வாதிகளை வரவழைத்து திருமணம் நடத்தும்போது பாரம்பரியமாகத் திருமணம் நடத்தி வந்த குருக்களுக்குத் திருமணத்தில் பங்கு இல்லாமல் போகிறது. மேலும் தற்போது விருப்பத் திருமணங்கள் சில நடைபெற்று வருகின்றன. இத்தகைய திருமணங்கள் பெரும்பாலும் கோவில்களில் நடைபெறுகின்றன. மேலும் படித்துத் தூர இடங்களில் வேலை பார்ப்பவர்கள் திருமணம் போன்ற சடங்குகளில் பெரும்பாலும் கலந்து கொள்வதில்லை. அவர்கள் தாங்கள் கொடுக்க வேண்டிய வெகுமதியை (மொய்ப்பணம்) ரூபாயாக அனுப்பிவிடுகின்றனர். திருமணத்தின்போது மேல் சாதியினரின் உதவியை நாடுவது குறைந்துவருகிறது. இத்தகைய மாறுதல்கள் எல்லாச் சாதியினரிடமும் ஏற்பட்டுவருவதைக் காணலாம்.

அனைத்துச் சாதி மக்களின் வாழ்க்கைச் சடங்குகளிலும் தாய்மாமனுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. ஒருவர் பிறந்தது முதல் இறக்கும்வரை அவருடைய தாய்மாமன் செய்யவேண்டிய கடப்பாடுகள் ஏனைய உறவினர்களை விட மிக அதிகமாகக் காணப்படுகின்றன. இதனால் ஒருவரின் பொருளாதாரத்தில் ஒரு பகுதி அவருடைய சகோதரியின் குடும்பத்தைச் சென்றடைகிறது. அதோடு ஒவ்வொரு சடங்குகளிலும் இரத்த உறவினர், மண உறவினர் என்ற பாகுபாடு தெளிவாகக் காணப்படுகிறது. இரத்த உறவினரின் பங்கும் மணஉறவினரின் பங்கும் வேறுபடுகின்றன.

திருமணத்தின்போது அரிசனர்கள் மேல்சாதி மக்களின் உதவியை நாடுதல், மேல்சாதி மக்கள் அரிசனர்களின் திருமணத்தில்

கலந்துகொள்ளுதல், அரிசனர்கள் மேல் சாதி மக்களின் திருமணத்தில் பணிபுரிதல் ஆகியவை கிராம விவசாய உற்பத்திமுறையின் அடிப்படையிலானவையாகும். அதாவது அரிசனர்கள் மேல்சாதி நிலச்சுவாந்தார்களின் குத்தகைக்காரர்களாகவும், விவசாயக் கூலிகளாகவும், பண்ணையாட்களாகவும் இருப்பதுவே காரணமாகும். அரிசனர்களின் வாழ்க்கைச்சடங்குகளில் அவர்களின் உற்பத்திப் பொருளாகிய நெல், அரிசி ஆகியவை அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகக் காணப்படுகின்றன. சான்றாக மகப்பேற்றில் உதவி செய்தவர்களுக்கு அரிசி, காய்கறி வழங்குதல், குழந்தையைத் தகப்பன் வீட்டிற்கு அனுப்பும் போது அரிசி, காய்கறிகளுடன் அனுப்புதல், பரிசனம் கொடுக்கும்போது 3 கலம் அல்லது 5 கலம் நெல் கொடுத்தல், பணிவிடைச் சாதியினரான வண்ணான், நாவிதர் ஆகியோருக்குக் கூலியாக நெல், அரிசி வழங்குதல் ஆகியவற்றைக் கூறலாம். இங்கு, காத்தலின் காப் (1979) தஞ்சாவூர் உறவுமுறை அமைப்பை விவரிக்கும்போது தஞ்சாவூர் உறவுமுறையானது விவசாய உற்பத்தியோடு தொடர்புடையது என்று குறிப்பிட்டிருப்பது குறிப்பாக அரிசனர்களிடையே மிகவும் பொருத்தமாகக் காணப்படுகிறது.

முகமதியர்களின் வாழ்க்கைச் சடங்குகளைப் பார்க்கும்போது அவர்களிடையே இரத்த மற்றும் மண உறவினர் என்ற பாகுபாடு மிகக் குறைவாகவே காணப்படுகிறது. பெரும்பாலான சடங்கு களையும் குடும்ப அங்கத்தினர்களே பொறுப்பேற்று நடத்துகின்றனர். வண்ணான், நாவிதர் போன்ற பிறசாதி மக்களின் ஈடுபாடும் மிகக்குறைவாகக் காணப்படுகிறது. ஏனைய சாதியினரிடம் காணப்படுவது போன்று தாய்மாமனுக்கு அதிக முக்கியத்துவம்

அளிப்பதில்லை. தாய்மாமன் செய்யவேண்டிய கடப்பாடுகளும் அதிகமாக இல்லை. இதற்கு முகமதியர்களிடையே பெண்களுக்கும் சொத்துரிமை உண்டு என்ற பழக்கம் காணப்படுவது ஒரு முக்கியக்காரணமாக இருக்கலாம். மதக்குருக்களின் ஈடுபாடும் பள்ளிவாசலோடுள்ள இணைப்பும் அதிகமாக உள்ளன. ஆனால் இவர்கள் வாழும் பகுதியில் ஏனைய சாதியினரிடம் உள்ள சில பண்பாட்டுக்கூறுகளும் இவர்களிடையே காணப்படுகின்றன. குறிப்பாக முதல் மகப்பேற்றிற்குத் தாய் வீட்டிற்கு அனுப்புதல், திருமணத்துக்கு முன் பெண்ணுக்குப் பரிசப்புடவை வழங்குதல், திருமணத்தன்று மணமகன் நீராடும்போது பயன்படுத்திய துணிகளை நாவிதர் எடுத்துச்செல்லுதல் ஆகியவற்றைக் கூறலாம். அதோடு சித்தப்பா, பெரியப்பா பிள்ளைகளைத் திருமணம் செய்வதைச் சகோதரி என்ற எண்ணத்தால் தவிர்த்தல், இறந்தவர்களின் வீட்டிற்கு அவர்களின் மண உறவினர் வீட்டில் சமைத்து எடுத்துச்செல்லுதல் ஆகியவை அவர்கள் வாழும் பகுதியில் பண்பாட்டைப் பிரதிபலிப்பதாகக் காணப்படுகின்றன.

கோவிலூர், மேலமாகாணம் பகுதியில் வாழும் அனைத்துச் சாதிமதத்தவரின் உறவுமுறையும் இருபுற உறவாகும். அதாவது தந்தையின் வழியிலும் தாயின் வழியிலும் சீராக விரிவடைகிறது இரத்த உறவினர், மணஉறவினர் என்ற இருபுறப்பாகுபாடு முகமதியர்களிடையே கூடுதலாகக் காணப்படாவிட்டாலும், ஏனைய சாதியினரிடம் தெளிவாகக் காணப்படுகிறது. அரிசனர்களின் சாவுச்சடங்கில் தாயாக இருந்தால் தலைமகனும், தகப்பனாக இருந்தால் கடைசி மகனும் கொள்ளி வைக்கவேண்டும் என்ற முறை காணப்படுவது தந்தைவழி, தாய்வழி என்ற பாகுபாட்டை மேலும் தெளிவுபடுத்துகிறது.

# உறவுமுறைச் சொற்கள்

மக்களின் அன்றாட வாழ்வில் மொழியைப் பயன்படுத்தும் போது பலவிதமான உறவினர்களைக் குறிப்பிடும் விதம் மிக முக்கியமானதாகும். எனவே உலகின் பல்வேறு பகுதிகளில் வாழும் மக்கள் தங்கள் உறவினர்களை எவ்வாறு குறிப்பிடுகிறார்கள், அல்லது எவ்வாறு அழைக்கிறார்கள் என்பதை விளக்கும் நூல்களும், கட்டுரைகளும் ஆய்வேடுகளும் பல உள்ளன. உறவுமுறை அமைப்பு மற்றும் உறவுமுறைச் சொற்கள் என்பது அனைத்து மொழிகளுக்கும் உரிய ஒரு கூறாகும். காரணம் ஒரு சமூக அமைப்பில் உறவுமுறையானது மிக முக்கியமானதாகக் காணப்படுகிறது. சில சமுதாயங்களில் உறவுமுறை அமைப்புகள் ஏனைய அமைப்புகளை விட வலுவானதாக இருக்கலாம். ஆனால் அனைத்து உறவுமுறை அமைப்புகளும் பால், வயது, தலைமுறை, இரத்த உறவு மற்றும் மண உறவு ஆகிய கருத்துருக்களை உடையனவாகவே காணப்படுகின்றன.

இக்கருத்துருக்கள் தெளிவாகவும் உடனடியாகத் தெளிவுபடுத்தக்கூடியதாகவும் இருப்பது ஆய்வாளர்களின் கவனத்தை ஈர்ப்பதற்குக் காரணமாகக் காணப்படுகின்றன. எனவே ஒரு குறிப்பிட்ட உறவைக் குறிப்பிடுவதற்கு மக்கள் பயன்படுத்தும் சொற்களை மேலே கூறப்பட்ட கருத்துருக்களோடு திட்டவட்டமாகத் தொடர்புபடுத்தலாம்.

உறவினர்களைக் குறிப்பிடும் சொற்களைப் பயன்படுத்துவதில் சில சிக்கல்களும் ஏற்படுவதுண்டு. சான்றாக ஒருவரின் தகப்பன், தாயின் சகோதரன், தாயின் சகோதரரியின் கணவன் ஆகியோரைக் குறிப்பிடும்போது அவர் பல சொற்களைக் கையாளுகிறார். ஆனால் அச்சொற்களில் அடங்கியிருக்கும் பொருள்களை மனதில் கொள்ளாமலே பயன்படுத்துகிறார். சான்றாக ஆங்கிலத்தில் ஒருவரின் தகப்பனின் தகப்பனையும் தாயின் தகப்பனையும் Grand Father என்ற ஒரே சொல்லால் அழைக்கின்றனர். ஆனால் அச்சொல்லில் Father என்ற இன்னொரு சொல்லும் அடங்கியிருக்கிறது. ஒருவரின் சகோதரனின் மனைவியின் தகப்பன் நேரடியான சொல்லால் குறிப்பிடப்படுவதில்லை. உறவுமுறைச் சொல்லாட்சியில் சகோதரனின் மனைவியின் தகப்பன் போன்ற உறவுகளை ஒரு தனிப்பட்ட சொல்லால் குறிப்பிடாமல் விளக்கமுறையில் குறிப்பிடுவதைக்காணலாம்.

சில வேளைகளில் ஒரு குறிப்பிட்ட உறவுமுறை அமைப்பின் அனைத்துக் கூறுகளையும் உறவுமுறைச்சொற்களின் மூலம் முற்றிலுமாக வரையறுக்க முடிவதில்லை. பல உறவுமுறைச் சொற்களை முற்றிலுமாக உறவுமுறையற்ற நபர்களைக்

குறிப்பிடுவதற்குப் பயன்படுத்துவதைக் காணலாம். சான்றாகப் பலதரப்பட்ட சமூக உறவுகளில் உள்ள நபர்களையும் உறவுமுறைச் சொற்களால் அழைப்பதைக் காணலாம். இன்னொரு புறத்தில் பார்க்கும்போது அவை மீண்டும் மீண்டும் வழக்கில் வருவதைக் காணலாம் சான்றாக 'மாமா' என்கிற சொல் தாயின் சகோதரன், தகப்பனின் சகோதரியின் கணவன், மூத்த சகோதரியின் கணவன் ஆகியாரைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப் படுகிறது. அதோடு சிலவேளைகளில் உறவுமுறையற்ற நபர்களைக் குறிப்பிடுவதற்கும் பயன்படுத்தப்படுகிறது. சான்றாகக் குழந்தைகள் தங்கள் பெற்றோரின் நெருங்கிய நண்பர்களை மாமா என்ற சொல்லால் அழைக்குமாறு பழக்கப்படுத்தியிருப்பதைக் காணலாம். இங்கு, குடிவழித் தொடர்பு (Genealogical relationship) உடையவர்களையும் குடிவழித்தொடர்பு இல்லாதவர்களையும் 'மாமா' என்ற சொல்லால் அழைக்கின்றனர். குடிவழித் தொடர்பு இல்லாதவர்களை அதாவது பெற்றோரின் நண்பர்களை 'மாமா' என்ற சொல்லால் அழைக்கும் போது ஒரு விளிச் சொல்லாக (addressing terms) மட்டுமே பயன்படுத்தப்படுகிறது. ஆனால் குடிவழித் தொடர்பு உடையவர்களை அச்சொல்லால் அழைக்கும் போது அது தாயின் சகோதரன், அல்லது தகப்பனின் சகோதரியின் கணவன் போன்ற பொருள்களை உடையதாகக் காணப்படுகிறது. இதைப்போன்று ஆங்கிலத்தில் உள்ள 'father' என்ற சொல்லை எடுத்துக்கொண்டால் அது தகப்பனையும் மதப்போதர்களையும் அழைப்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது. ஆனால் மதப்போதகரைக் குறிப்பிடும்போது father என்னும் சொல் ஒரு விளிச்சொல்லாக மட்டுமே பயன்படுத்தப்படுகிறது. ஆனால் ஒருவர் தன் தகப்பனை father என்று குறிப்பிடும்போது அவருடைய ஆண் பெற்றோர், மதவழிகாட்டி, சமூக மற்றும் பொருளாதார

அதிகாரி போன்ற பல உண்மைகளை வெளிப்படுத்துவதைக் காணலாம். இவ்வாறு குடிவழித்தொடர்பு இல்லாத நபர்களை உறவுமுறைச் சொல்லால் அழைக்கும்போது அது வெறும் விளிச்சொல்லாக மட்டுமே காணப்படுகிறது. ஆனால் எல்லா விளிச்சொற்களும் உறவுமுறைச் சொற்கள் அல்ல. சான்றாக 'அய்யா' 'பெரியவரே' போன்ற சொற்களை எடுத்துக்கொள்ளலாம். அதேப் போல் எல்லா உறவுமுறைச் சொற்களும் விளிச் சொற்களாகப் பயன்படுத்தப்படுவதில்லை. சான்றாகக் கணவன், மனைவி போன்ற சொற்களை எடுத்துக் கொள்ளலாம். எனவே உறவுமுறைச்சொற்கள் எந்தப் பண்பாட்டு அடிப்படையில் பயன்படுத்தப்படுகின்றன என்பதன் அடிப்படையில் ஆராயப்படவேண்டும்.

உலகின் பல சமூதாயங்களிலும் ஒரே உறவுமுறைச் சொல்லானது பலதரப்பட்ட உறவுகளைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படுவதைக் காணலாம். இது வெவ்வேறு சமுதாயங்களில் வேறுபட்ட நிலையில் காணப்படுவதும் உண்டு. Hudson (1980) என்பவர் குறிப்பிடும்போது பலதரப்பட்ட அமைப்புகளைப் புரிந்து கொள்வதற்குத் திறவுகோலாகச் சில கருத்துருக்களும் (concept) சில சமமதிப்பீடு விதிமுறைகளும் (Equivalence rules) இருப்பதாகக் கருதவேண்டும் என்று குறிப்;டுள்ளார். அதாவது சகோதரர்கள் அனைவரும் சமம், ஒன்றுவிட்ட சகோதரர்களும் சகோதரர்களும் சமம், தகப்பனும் தகப்பனின் சகோதரனும் சமம் போன்ற விதிமுறைகளைக் கூறியுள்ளார்.

சமூகநிலைகளில் மாறுதல்கள் ஏற்படும்போது அது உறவுமுறை அமைப்பு மற்றும் உறவுமுறைச் சொற்களிலும் பிரதிபலிப்பதைக்

காணலாம். Ronald wardhaugh (1986: 222) குறிப்பிடும்போது சென்ற நூற்றாண்டில் ரஷ்யச் சமுதாயத்தில் ஏற்பட்ட துரிதமான சமூக மாறுதல்களினால் உறவுகளைக் குறிப்பிடும் முறையிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டுள்ளதைச் சுட்டிக்காட்டியுள்ளார். முற்காலத்தில் சில மண உறவினர்களை வெவ்வேறு சொற்களால் குறிப்பிடுவது மிக முக்கியமானதாகக் காணப்பட்டது. ஒருவரின் மனைவியின் சகோதரனைக் குறிப்பிடுவதற்கு 'Shurin' என்ற சொல்லும் ஒருவரின் சகோதரனின் மனைவியைக் குறிப்பிடுவதற்கு 'nevetka' என்ற சொல்லும் காணப்பட்டது. தற்போது இத்தகைய சொற்கள் முற்றிலுமாகப் பயன்படுத்தப்படுவதில்லை. பதிலாக விளக்க முறையில் அதாவது மனைவியின் சகோதரன் மற்றும் சகோதரனின் மனைவி போன்ற தொடர்கள் பயன்படுத்தப்படுகின்றன. இதேப்போன்று கணவனின் சகோதரனின் மனைவியைக் குறிப்பிடும் 'yatrov' என்ற சொல் முற்றிலுமாக மறைந்துவிட்டது. 'Sroyok' என்ற சொல் எந்த ஒரு ஆண் மண உறவினரையும் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படுகிறது. முற்காலத்தில் இச்சொல் ஒருவரின் மனைவியின் சகோதரியின் கணவனைக் குறிப்டுவதற்கு மட்டுமே பயன்படுத்தப்பட்டது. தற்போது அத்தகைய உறவினர்களைச் சீராகக் குறிப்பிடவேண்டும் என்பது இல்லை. குடும்ப அமைப்பில் ஏற்பட்டுவரும் மாறுதல்கள் உறவினர்கள் தினமும் தொடர்புகொள்வதை அகற்றிவிட்டது. புதிய நீண்ட தொடர்வடிவிலான உறவுமுறைச் சொற்கள் சில உறவுகள் அதன் முக்கியத்துவத்தை இழப்பதைச் சுட்டிக்காட்டுகின்றன.

சிக்கலான உறவுமுறை அமைப்பை உடைய சமுதாயத்தில் திருமணத்தின் மூலம் ஏற்பட்ட சமூக இணைப்பானது மிகவும் தூரமானதாகவும் சில வேளைகளில் தெளிவுபடுத்த இயலாததாகவும்

காணப்படுகின்றன. அதோடு உறவினர்களைக் குறிப்பிடும் சொற்களில் தெளிவற்ற நிலையையும் காணலாம். சான்றாக மாமன்முறை திருமணமுறையும் மூத்த சகோதரரியின் மகளைத் திருமணம் செய்துகொள்ளும் முறையும் ஒரே சமுதாயத்தில் காணப்படும்போது திருமணமுறையில் ஏற்படும் சிக்கல்கள் உறவுமுறைச் சொற்களிலும் பிரதிபலிப்பதைக் காணலாம் அதாவது ஒரே நபர் மாமன் முறையாகவும் கணவன் முறையாகவும் வருவதுண்டு. அதைப்போன்று ஒரே நபர் அக்காவாகவும் மாமியாராகவும் வருவதுண்டு. தாத்தாவாகவும் மாமனாராகவும் வருவதுண்டு. இந்நிலையில் உறவுமுறைச் சொற்கள் குறைவாகவே தேவைப்படுவதையும் உறவுமுறைச் சொற்களைப் பயன்படுத்தும் முறையில் ஒரு தெளிவற்ற நிலையையும் காணமுடிகிறது. உறவினர்களின் தூரம் அதிகரிக்கும்போதும் உறவுமுறைச் சொற்களில் தெளிவற்ற தன்மை காணப்படுகிறது.

உறவுமுறைச் சொற்கள் சமுதாயத்தின் இயக்கத்தோடு நெருங்கிய தொடர்புடையதெனக் கருதப்படுகிறது. ஆனால் சமுதாயத்தின் நிலைகளை அதாவது சிறிய சாதாரண (Simple Society) சமுதாயத்தையும் பெரிய சிக்கலான கலப்புச் சமுதாயத்தையும் (Complex society) ஒப்பிட்டுப்பார்க்கும்போது உறவுமுறை சொல்லமைப்பில் குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் இல்லை. சமுதாயத்தின் பொதுவான விரிவுறுதலில் உறவுமுறைச் சொற்களுக்கு முக்கியத்துவம் இல்லையா அல்லது சமுதாய விரிவுறுதலுக்கும் உறவுமுறை சொல்லமைப்புக்குமிடையே முக்கியமான செயல்பாட்டளவிலான தொடர்புகள் ஏதும் இல்லையா என்பதும் கேள்விக்குரியவையாகும்.

உறவுமுறைச் சொற்களை அந்தஸ்துச் சொற்கள் (Status Terms) என்ற பொதுவான பிரிவில் ஒரு உபப் பிரிவாகச் சேர்க்கலாம். அந்தஸ்துச் சொற்கள் என்ற விரிவான வகைச்சொற்களை ஒரு சமுதாயத்தின் எல்லாப் பகுதிகளோடும் எல்லாவிதச் சமுதாயங்களோடும் தொடர்பு படுத்தலாம். உறவுமுறைச் சொற்கள் சமுதாயத்தில் குடும்பம் என்னும் சிறிய ஒரு அமைப்போடு தொடர்புடையது. அதாவது பெரிய சிக்கலான சமுதாயத்தின் ஒரு சிறிய பகுதியாகிய குடும்பத்தோடு தொடர்புடையது. பொதுவாகச் சமுதாயம் வளர்ந்து பெரிய சிக்கலான (complex) சமுதாயமாக மாறும்போது அந்தஸ்துச் சொற்கள் எண்ணிக்கையிலும் தரத்திலும் அதிகமாவதை வெளிப்படையாகக் காணலாம். மேலும் புதுவிதமான சமூக உறவுகள் ஏற்படும்போது புதிய அந்தஸ்துச் சொற்களும் தோன்றுவதைக் காணலாம். ஆனால் சமுதாயம் வளர்ந்து சிக்கலான பெரிய சமுதாயமாக மாறும்போது புதிய உறவுமுறைச் சொற்கள் தோன்றுவதில்லை.

மக்கள் தங்கள் உறவினர்களைப் பலதரப்பட்ட பிரிவினர்களாகப் பிரித்து அவர்களைக் குறிப்பிடுவதற்கும் அழைப்பதற்கும் பலதரப்பட்ட உறவுமுறைச் சொற்களையும் பயன்படுத்துகின்றனர். உறவுமுறைச் சொற்களின் பொருள்களை வரையறுப்பதற்குக் குடும்பத்தின் தன்மை மற்றும் குடிவழிப் பட்டியலில் உறவினர்களின் தூரம் மற்றும் தொடர்புபடுத்தும உறவினர்களின் பால் ஆகியவை மிக முக்கியக் கூறுகளாகக் காணப்படுகின்றன. ஒரு மொழியில் காணப்படும் பலதரப்பட்ட சொற்களில் உறவுமுறைச் சொற்கள் மிக முக்கியமானவையாகும். காரணம் உறவுமுறைச் சொற்கள் அம்மொழி பேசும் மக்களின்

பண்பாட்டில் பெரும்பகுதியைப் பிரதிபலிக்கின்றன. குறிப்பாக உறவுமுறைச் சொற்கள் அச்சமுதாயத்தின் திருமணமுறையைப் பிரதிபலிப்பதைக் காணலாம்.

திராவிட உறவுமுறையில் இரண்டு அல்லது மூன்று விதமான உறவுகளை ஒரே சொல்லால் குறிப்பிடுவதைக் காணலாம். தமிழகத்தின் சில ப்குதிகளில் 'மாமா' என்னும் சொல் தாயின் சகோதரன், தகப்பனின் சகோதரியின் கணவன், மற்றும் மனைவியின் தகப்பன் அகியோரைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படுகிறது. அதேப்போன்று 'அத்தை' என்னும் சொல் தாயின் சகோதரனின் மனைவி, தகப்பனின் சகோதரி ஆகியோரைக் குறிப்பிடுவதாகக் காணப்படுகிறது. இத்தகைய உறவுமுறைச் சொற்களை வகைபடு உறவுமுறைச்சொற்கள் (classificatory Kinship terms) எனக்குறிப்பிடுவர். ஆனால் சில உறவுமுறைச் சொற்கள் குறிப்பிட்ட ஒரு உறவை மட்டும் குறிப்பிடுவதாகக் காணப்படும். சான்றாகக் கணவன், மனைவி, தகப்பன் போன்ற சொற்களைக் கூறலாம். இத்தகைய சொற்களை விளக்க உறவுமுறைச் சொற்கள் (descriptive terms) எனக் குறிப்பிடுவர். இருவிதமான உறவுகள் ஒரே சொல்லால் குறிப்பிடப்படுமேயானால் அச்சமூக அமைப்பில் இரு உறவுகளுக்குமிடையே சில ஒருமைப்பாடுகள் இருக்கின்றன என்பதைப் புரிந்துகொள்ளலாம். சான்றாகத் தாயின் சகோதனையும் தகப்பனின் சகோதரியின் கணவனையும் 'மாமா' என்று குறிப்பிடுகின்றனர். இங்கு இரு தரப்பட்ட உறவினர்களின் பிள்ளைகளையும் திருமணம் செய்து கொள்ளலாம் என்ற முறை இருப்பதைக்காணலாம். அதோடு மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கம் காணப்படுகின்ற சமுதாயத்தில் மூத்த சகோதரியின் கணவனையும்

'மாமா' என்று குறிப்பிடுவதைக் காணலாம். ஆனால் இளைய சகோதரியின் கணவனை 'மாமா' என்று குறிப்பிடுவதில்லை. இளைய சகோதரியின் மகளைத் திருமணம் செய்வதற்கான வாய்ப்பு இல்லாததால் அவ்வாறு 'மாமா' என்று குறிப்பிடுவதில்லை. தமிழகத்தின் சில பகுதிகளில் மனைவியின் தகப்பன் மற்றும் கணவனின் தகப்பன் ஆகியோரை 'மாமனாரு' என்று வேறுபடுத்தி குறிப்பிடுகின்றனர். அதேபோன்று கணவனின் தாய் மற்றும் மனைவியின் தாய் ஆகியோரை 'மாமியாரு' என்று வேறுபடுத்திக் குறிப்பிடுகின்றனர். இந்தோ ஆரிய உறவுமுறை அமைப்பில் தாயின் சகோதரனையும் மனைவியின் தகப்பனையும் வெவ்வேறு சொற்களால் குறிப்பிடுகின்றனர். இந்தோ ஆரிய உறவுமுறை அமைப்பில் மாமன் மகள் திருமண முறை தடைசெய்யப்பட்டிருப்பதால் அவ்வாறு வேறுபடுத்திக் குறிப்பிடுகின்றனர். அதோடு உறவுமுறைச் சொற்கள் வயது, பால், தலைமுறை ஆகிய பொருளியல் அடிப்படையிலான கூறுகளையும் உடையதாகக் காணப்படுகின்றன.

சமூக அமைப்பு மற்றும் மொழி மாற்றம் ஆகியவற்றின் விதிமுறைகளை ஆராய்ந்துள்ள அறிஞர்கள் பலர், உறவுமுறைச்சொற்களானது ஒரு சமூக அமைப்பில் மிகவும் மெதுவாக மாறக்கூடிய ஒரு பகுதி என்று குறிப்பிட்டுள்ளனர். பிற மொழி மற்றும் பண்பாட்டுத்தாக்கம் ஏற்படும்போது மொழியின் பிற சொற்கள் மற்றும் ஏனைய பண்பாட்டுப்பகுதிகள் எளிதில் மாறிவிடுவதுண்டு. ஆனால் உறவுமுறைச் சொற்கள் எளிதில் மாறுவதில்லை. ஒரு மொழியை ஆராயும்போதும் அம்மொழியில் காணப்படும் உறவுமுறைச் சொற்கள் மொழி ஆய்வுக்கு மிக முக்கிய பகுதியாகக் காணப்படுகின்றன. குறிப்பாக, முழு வளர்ச்சியடையாத பழங்குடி

மக்களின் மொழியை ஆராயும்போது அம்மொழி எந்த மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது என்பதை உறுதிப்படுத்துவதற்கு உறவுமுறைச் சொற்கள் மிகவும் உதவியாக அமைவதுண்டு.

பல தரப்பட்ட பழங்குடி மக்கள் மற்றும் சாதிப் பிரிவுகளின் மொழி ஆய்விலும் இனவரலாற்றியல் ஆய்விலும் உறவுமுறைச் சொற்களின் பட்டியல் மற்றும் அவற்றைப் பயன்படுத்தும் விதம் குறித்த விளக்கங்கள் காணப்படுகின்றன. ஆனால் உறவுமுறை ஆய்வின் தரம் மற்றும் அளவு அதோடு நின்றுவிடுவதில்லை. உறவுமுறை அமைப்பு சமுதாயத்தைப் பற்றிய பல செய்திகளையும் உடையதாகும். அண்மையில் உறவுமுறைச் சொற்களை ஆராய்வதற்குப் பலவிதிமுறைகளும் உத்திகளும் கையாளப்பட்டு வருவதைக் காணலாம். உறவுமுறைச் சொற்களின் ஆய்வில் திருமணத்தொடர்புகள் மிக முக்கிய வழிகாட்டிகளாகும்.

ஒரு சமுதாயத்தில் காணப்படும் உறவுமுறைச்சொற்கள் அச்சமுதாயத்தில் காணப்படும் சமூக உறவுகள் மற்றும் இணைப்புகளைப் புரிந்துகொள்வதற்குப் பெரிதும் உதவுகின்றன. அதாவது உறவுமுறைச்சொல் ஒருவரைக் குறிப்பிடுவதற்கு மட்டுமின்றி அச்சொல்லால் அழைப்பதால் எத்தகைய பொருளைக்கொடுக்கிறது என்பதையும் வெளிப்படுத்துகிறது. திருமணத்தொடர்புகள் உறவுமுறைத் தொடர்புகளில் சில மாறுதல்களைக் கொண்டுவருவதையும் சில உறவுமுறைச் சொற்களைப் பயன்பாட்டளவில் கொண்டுவருவதையும் காணலாம்.

இனி, கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் வெவ்வேறு சாதி மக்களிடையே உறவுமுறைச் சொற்களில்

காணப்படும் வேறுபாடுகள், இருவழிப்பிரிவு உறவுச்சொற்களில் காணப்படும் வேறுபாடுகள், மூத்த-இளைய வேறுபாட்டைக் குறிப்பிடும் உறவுமுறைச்சொற்கள், உறவுமுறைச்சொற்களைப் பயன்படுத்தும் விதம் ஆகியவற்றை ஆராயலாம்.

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் பல்வேறு சாதி மக்களின் உறவுமுறைச் சொற்களில் காணப்படும் வேறுபாடுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ஒலியளவில் வேறுபடும்சொற்களும் கொடுக்கப்பட்டுள்ளன. கீழே கொடுக்கப்பட்டுள்ள அனைத்துச் சொற்களும் உறவினர்களைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படும் சொற்களாகும் அவற்றில் சில சொற்கள் விளிச்சொற்களாகவும் பயன்படுத்தப்படுகின்றன. தெலுங்குமொழி பேசும் ஒரு குடும்பத்தினரும் உருதுமொழி பேசும் ஒரு குடும்பத்தினரும் அப்பகுதியில் காணப்படுகின்றனர். அவர்களின் உறவுமுறைச்சொற்கள் இங்குச் சேர்க்கப்படவில்லை

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | தாய் | ஆயி / ஆயா | - | பறையர் |
| | | அம்மா | - | ஏனையோர் |
| 2 | தாயின் தாய் | ஆத்தா | - | கள்ளர் |
| | | அம்மாச்சி | - | அகமுடையார் |
| | | நாணி | - | முகமதியர் |
| | | பாட்டி | - | பிராமணர் |
| | | அம்மாயி | - | ஏனையோர் |

| | | |
|---|---|---|
| 3. தாயின் தாயின் சகோதரன் | மாமா-தாத்தா | - பிராமணர் |
| | தாத்தா | - ஏனையோர் |
| 4. தாயின் தாயின் தாய் | கொள்ளுப்பாட்டி | - பிராமணர் |
| | நாணி | - முகமதியர் |
| | பாட்டி | - ஏனையோர் |
| 5. தாயின் தாயின் தாயின் தாய் | எள்ளுப்பாட்டி | - பிராமணர் |
| | முப்பாட்டி | - கள்ளர், வெள்ளாளர் |
| | பாட்டி | - ஏனையோர். |
| 6. தாயின் தகப்பன் | அய்யா | - செட்டியார் |
| | அப்பா | - முகமதியர் |
| | தாத்தா | - ஏனையோர் |
| 7. தாயின் சகோதரன் | அம்மான் | - பிராமணர் |
| | மாமா | - ஏனையோர் |
| 8. தாயின் சகோதரனின் மனைவி | அம்மாயி | - பிராமணர் |
| | மாமி | - முகமதியர் |
| | அத்தை | - ஏனையோர் |
| 9. தாயின் மூத்த சகோதரி | பெரியாயி | - பறையர் |
| | பெரியம்மா | - ஏனையோர் |
| 10. தாயின் இளைய சகோதரி | சித்தி | - பிராமணர் |
| | சின்னாயி | - பறையர் |
| | சின்னம்மா | - ஏனையோர் |

| | | |
|---|---|---|
| 11. தகப்பன் | அண்ணன் | - அகமுடையார் |
| | வாப்பா / அத்தா | - முகமதியர் |
| | அப்பா | - ஏனையோர் |
| 12. தகப்பனின் தாய் | பாட்டி | - பிராமணர், முகமதியர் |
| | ஆத்தி | - கோனார் |
| | அப்பாயி | - ஏனையோர் |
| 13. தகப்பனின் தகப்பன் | அய்யா | - பறையர் |
| | தாதா | - முகமதியர் |
| | அப்பச்சி | - பள்ளர் |
| | தாத்தா | - ஏனையோர் |
| 14. தகப்பனின் தகப்பனின் தகப்பன் | தாத்தா | - பறையர் |
| | கொள்ளுத் தாத்தா | - பிராமணர் |
| | தாதா | - முகமதியர் |
| | பாட்டன் | - ஏனையோர் |
| 15. தகப்பனின் தகப்பனின் தகப்பனின் தகப்பன் | எள்ளுத்தாத்தா | - பிராமணர் |
| | முப்பாட்டன் | - கள்ளர் |
| | தாத்தா | - ஏனையோர் |
| 16. தகப்பனின் மூத்த சகோதரன் | பெரியத்தா | - முகமதியர் |
| | பெரியப்பா | - ஏனையோர் |
| 17. தகப்பனின் இளைய சகோதரன் | சின்னத்தா | - முகமதியர் |
| | சித்தப்பா | - ஏனையோர் |

| | | |
|---|---|---|
| 18. தகப்பனின் மூத்த சகோதரனின் மனைவி | பெரியாயி | - பறையர் |
| | பெரியம்மா | - ஏனையோர் |
| 19. தகப்பனின் இளைய சகோதரனின் மனைவி | சின்னாயி | - பறையர் |
| | சித்தி | - பிராமணர் |
| | சின்னம்மா | - ஏனையோர் |
| 20. தகப்பனின் சகோதரி | குப்பி/புப்பி/மாமி | - முகமதியர் |
| | அத்தெ | - ஏனையோர் |
| 21. தகப்பனின் சகோதரியின் கணவன் | அத்திம்பேர் | - பிராமணர் |
| | புப்பா | - முகமதியர் |
| | மாமா | - ஏனையோர் |
| 22. மூத்த சகோதரன் | பாயி | - முகமதியர் |
| | அண்ணன் | - ஏனையோர் |
| 23. இளைய சகோதரன் | தம்பி | - எல்லோரும் |
| 24 மூத்த சகோரதனின் மனைவி | மதனி | - பிராமணர் |
| | பாபி | - முகமதியர் |
| | அண்ணி | - ஏனையோர் |
| 25. இளைய சகோதரனின் மனைவி | மச்சினி | - பிராமணர் |
| | அத்தாச்சி | - செட்டியார் |
| | கொழுந்தியா | - ஏனையோர் |

| | | | |
|---|---|---|---|
| 26. மூத்த சகோதரி | அக்கா | - | எல்லோரும் |
| 27 இளைய சகோதரி | தங்கச்சி | - | எல்லோரும் |
| 28. மூத்த சகோதரியின் கணவன் | அத்திம்பேர் | - | பிராமணர் |
| | மாமா | - | பறையர், பள்ளர் |
| | மச்சான் | - | முகமதியர் |
| | அத்தான்/மாமா | - | ஏனையோர் |
| 29. இளைய சகோதரியின் கணவன் | மச்சினன் | - | பிராமணர் |
| | மச்சான் | - | முகமதியர் |
| | மாப்ளெ/அத்தான் | - | ஏனையோர் |
| 30. மனைவி | வீட்டுக்காரி | - | கள்ளர் |
| | சம்சாரம் | - | கோனார் |
| | பீபி | - | முகமதியர் |
| | பொண்டாட்டி | - | ஏனையோர் |
| 31. மனைவியின் தாய் | அத்தெ/மாமி | - | பறையர் |
| | மாமியாரு | - | கள்ளர், செட்டியார் |
| | அத்தெ | - | ஏனையோர் |
| 32. மனைவியின் தகப்பன் | மாமா | - | அகமுடையார் |
| | மாமனாரு | - | ஏனையோர். |

| | | | |
|---|---|---|---|
| 33. மனைவியின் மூத்த சகோதரன் | அத்தான் | - | அகமுடையார் |
| | மச்சான் | - | கள்ளர், முகமதியர் |
| | மச்சினன் | - | ஏனையோர். |
| 34. மனைவியின் இளைய சகோதரன் | மாப்ளெ | - | அகமுடையார் |
| | மச்சான் | - | கள்ளர், முகமதியர் |
| | மச்சினன் | - | ஏனையோர் |
| 35. மனைவியின் மூத்த சகோதரி | மச்சினி | - | பிராமணர் |
| | கொளுந்தியா | - | ஏனையோர் |
| 36. மனைவியின் இளைய சகோதரி | மச்சினி | - | பிராமணர் |
| | கொளுந்தியா | - | முகமதியர், அகமுடையார் |
| | மச்சினியா | - | கள்ளர் |
| | மச்சினிச்சி | - | ஏனையோர் |
| 37 கணவன் | புருசன் | - | பிராமணர், செட்டியார் |
| | மச்சான் | - | முகமதியர் |
| | மாப்ளெ | - | அகமுடையார் |
| | வீட்டுக்காரரு | - | ஏனையோர் |
| 38. கணவனின் தாய் | மாமியா | - | செட்டியார் |
| | அத்தெ | - | அகமுடையார் |
| | மாமியாரு | - | ஏனையோர் |

| | | | |
|---|---|---|---|
| 39. கணவனின் தகப்பன் | மாமனாரு | - | அனைவரும் |
| 40. கணவனின் மூத்த சகோதரன் | அத்தான் | - | அகமுடையார் |
| | பெரிய - கொளுந்தனாரு | - | ஏனையோர் |
| 41. கணவனின் இளைய சகோதரன் | அத்தான் | - | அகமுடையார் |
| | மச்சினன் | - | பிராமணர் |
| | (சின்ன) கொளுந்தன் | - | ஏனையோர் |
| 42. கணவனின் மூத்த சகோதரி | அத்தாச்சி | - | செட்டியார் |
| | மச்சி | - | முகமதியர் |
| | (பெரிய) நாத்தனாரு | - | ஏனையோர் |
| 43. கணவனின் இளைய சகோதரி | அத்தாச்சி | - | செட்டியார் |
| | மச்சி | - | முகமதியர் |
| | (சின்ன) நாத்தனா | - | ஏனையோர் |
| 44. கணவனின் மூத்த சகோதரனின் மனைவி | ஓர்ப்படி | - | பிராமணர் |
| | அக்கா | - | அகமுடையார் |
| | கொளுந்தியா | - | முகமதியர் |
| | (பெரிய) ஓப்படியா | - | ஏனையோர் |

| | | |
|---|---|---|
| 45. கணவனின் இளைய சகோதரனின் மனைவி | ஓர்ப்படி | - பிராமணர் |
| | தங்கச்சி | - அகமுடையார் |
| | கொழுந்தியா (சின்ன) | - முகமதியர் |
| | ஓப்புடியா | - ஏனையோர் |
| 46. கணவனின் மூத்த சகோதரியின் கணவன் | பாயி | - முகமதியர் |
| | அண்ணன் | - ஏனையோர் |
| 47. கணவனின் இளைய சகோதரியின் கணவன் | தம்பி | - அனைவரும் |
| 48. மகன் | மகன் | - அனைவரும் |
| 49 மகனின் மனைவி | மாட்டுப்பொண்ணு | - பிராமணர் |
| | மருமகா | - ஏனையோர் |
| 50. மகனின் மனைவியின் தாய் | சம்மந்தியம்மா | - பிராமணர் |
| | சம்மந்தி | - ஏனையோர் |
| 51 மகனின் மனைவியின் தகப்பன் | சம்மந்தி | - அனைவரும் |
| 52. மகனின் மகனின் மகள் | கொள்ளுப்பேரன் | - பிராமணர் |
| | பேரன் | - ஏனையோர் |

| | | | |
|---|---|---|---|
| 53 மகள் | [மகள்] | - | அனைவரும் |
| 54. மகளின் கணவன் | [மாப்ளே/ மருமகன்] | - | அனைவரும் |

கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் அனைத்துச் சாதி மக்களின் உறவுமுறையும் இருவழி உறவாகும். இது தகப்பனின் வழியிலும் தாயின் வழியிலும் சமமாகப் பரவுவதைக் காணலாம். இருவழிகளிலுள்ள தாத்தாக்களும் அதாவது தாயின் தகப்பனும் தகப்பனின் தகப்பனும் ஒரேவித உறவினராகக் காணப்படுகின்றனர். ஆனால் சிலருக்குத் தகப்பனின் தகப்பன், தாயின் தகப்பனைவிட நெருங்கியவராகத் தோன்றலாம். வேறு சில சமுதாயங்களில் தகப்பனின் தகப்பனை விடத் தாயின் தகப்பன் நெருங்கியவராகத் தோன்றலாம். இத்தகைய வேறுபாடுகளுக்கு முக்கியமாகக் கால்வழி மற்றும் குறிப்பிட்ட உறவுமுறை அமைப்பில் காணப்படும் ஏனைய காரணக்கூறுகளுமாகும். சான்றாகத் தந்தைவழிச் சொத்துரிமை உடைய சமுதாயத்தில் தாயின் தகப்பனைவிடத் தகப்பனின் தகப்பனுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படலாம். அதே சமயத்தில் தாய்வழிச் சொத்துரிமை உடைய சமுதாயத்தில் தகப்பனின் தகப்பனைவிடத் தாயின் தகப்பனுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படலாம். ஆனால் பெரும்பாலான சமுதாயங்களிலும் இருவழி உறவினர்களையும் சமமாகக் கருதுவதைக் காணமுடிகிறது. கோவிலூர் மேலமாகாணம் பகுதியில் வாழும் பெரும்பாலான சாதியினரும் இருவழி உறவினர்களையும் சமமாகவே கருதுவதையும் அவ்வாறான உறவுமுறைச் சொற்களையே பயன்படுத்துவதையும் காணமுடிகிறது. ஆனால் ஒரு

சில சாதியினர் தாயின் தகப்பனையும் தகப்பனின் தகப்பனையும் வேறுபடுத்திக் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. குறிப்பாகப் பறையர் சாதியினர் தகப்பனின் தகப்பனை **அய்யா** என்றும் தாயின் தகப்பனைத் **தாத்தா** என்றும் குறிப்பிடுகின்றனர். அதேப்போன்று பள்ளர் சாதியினர் தகப்பனின் தகப்பனை **அப்பச்சி** என்றும் தாயின் தகப்பனைத் **தாத்தா** என்றும் குறிப்பிடுகின்றனர். இங்கு **அய்யா, அப்பச்சி** ஆகிய சொற்கள் **தாத்தா** என்னும் சொல்லைவிட அதிக நெருக்கத்தைக் காட்டுவதாகக் காணப்படுகின்றன. முகமதியர்கள் தாயின் தகப்பனைக் குறிப்பிடுவதற்கு **அய்யா/அப்பா** என்ற சொல்லையும் தகப்பனின் தகப்பனைக் குறிப்பிடுவதற்குத் **தாதா** என்ற சொல்லையும் பயன்படுத்துகின்றனர். ஏனைய சாதியினர் தகப்பனின் தகப்பனையும், தாயின் தகப்பனையும் **தாத்தா** என்றே குறிப்பிடுகின்றனர். செட்டியார் சாதியினர் தாயின் தகப்பனையும் தகப்பனின் தகப்பனையும் **அய்யா** என்றே குறிப்பிடுகின்றனர். தஞ்சாவூரிலிருந்து சுமார் 10 கி.மீ. தூரத்திலுள்ள வல்லம் என்ற கிராமத்தில் வாழும் மூப்பனார், வள்ளுவர், உடையார் ஆகிய சாதி மக்களும் தகப்பனின் தகப்பனை **அய்யா** என்றும் தாயின் தகப்பனைத் **தாத்தா** என்றும் குறிப்பிடுகின்றனர். மேலே குறிப்பிட்ட பகுதிகளில் வாழும் அனைத்துச் சாதி மதத்தவரும் தந்தைவழி உரிமை உடைவர்களாவர் அதாவது சொத்துரிமை, குலம் அல்லது கோத்திரம் ஆகிய உரிமைகளுக்குத் தந்தைவழி முறையைப் பின்பற்றுபவர்கள். குறிப்பிட்ட சில சாதியினராவது தாயின் தகப்பனைவிடத் தந்தையின் தகப்பனிடம் உள்ள அதிக நெருக்கதை உறவுமுறைச் சொல்லளவிலும் வெளிப்படுத்துவதற்குக் காரணம் அவர்களிடையே காணப்படும் தந்தைவழி உரிமையாகவும் இருக்கலாம் ஆனால் தாய்வழி உரிமை உடைய ஒரு சமுதாயத்தில்

தாயின் தகப்பனிடம் அதிக பாசமாக அல்லது நெருக்கமாகக் காணப்படலாம்.

கோனார் சாதியினர் தாயின் தாயை **ஆத்தா** என்றும் தகப்பனின் தாயை **ஆத்தி** என்றம் வேறுபடுத்தி குறிப்பிடுகின்றனர். முகமதியர்கள் தாயின் தாயை **நாணி** என்றும் தகப்பனின் தாயைப் பாட்டி என்றும் குறிப்பிடுகின்றனர். பிராமணர்கள் தாயின் தாயையும் தகப்பனின் தாயையும் பாட்டி என்றே குறிப்பிடுகின்றனர். ஏனைய சாதியினர் பெரும்பாலும் தகப்பனின் தாயை **அப்பாயி** என்றும் தாயின் தாயை **அம்மாயி** என்றும் வேறுபடுத்திக் குறிப்பிடுகின்றனர்.

மேலே குறிப்பிட்டவண்ணம் தாய்வழி மற்றும் தந்தைவழி உறவினர்களை 'மேல்' தலைமுறையில் வேறுபடுத்திக் குறிப்பிடுவது போன்று பெற்றோரின் தலைமுறையினரை வேறுபடுத்துவது பிராமணர் மற்றம் முகமதியர்களிடையே மட்டும் காணப்படுகிறது. அதாவது பெரும்பாலான சாதியினரும் தாயின் சகோதனையும் தகப்பனின் சகோதரியின் கணவனையும் மாமா என்ற சொல்லாலே குறிப்பிடுவதையும் அழைப்பதையும் காணலாம். பிராமணர்கள் தாயின் சகோதனை **அம்மான்** என்ற சொல்லாலும் தகப்பனின் சகோதரியின் கணவனை **அத்திம்பேர்** என்றும் குறிப்பிடுகின்றனர். இதேபோன்று முகமதியர்கள் தாயின் சகோதனை **மாமா** என்றும் தகப்பனின் சகோதரியின் கணவனைப் **புப்பா** என்றும் குறிப்பிடுகின்றனர். முன்னர் குறிப்பிட்டுள்ளவண்ணம் அனைத்துச் சாதியினரும் வாழ்க்கைச் சடங்குகளில் தாய்மாமனுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கின்றனர். பிராமணர் தவிர அனைவரும்

தாயின் சகோதரனின் மனைவியையும் தகப்பனின் சகோதரியையும் ஒரே சொல்லால் குறிப்பிடுகின்றனர். பிராமணர்கள் தகப்பனின் சகோதரியை அத்தெ என்றும் தாயின் சகோதரனின் மனைவியை அம்மாமி என்றும் வேறுபடுத்திக் குறிப்பிடுகின்றனர்.

மேலே குறிப்பிட்டுள்ளவண்ணம் தாயின் தகப்பனையும் தகப்பனின் தகப்பனையும் வேறுபடுத்திக் குறிப்பிடுவது, தாய்மாமனையும் தகப்பனின் சகோதரியின் கணவனையும் வேறுபடுத்திக் குறிப்பிடுவது மற்றும் தாயின் தாயையும் தகப்பனின் தாயையும் வேறுபடுத்திகுறிப்பிடுவது ஆகியவை தாய்வழித் தந்தைவழி கணக்கிடல் மற்றும் இரத்த உறவு, மணஉறவுப் பாகுபாடு ஆகியவற்றோடு நெருங்கிய தொடர்புடையதாகும். சுப்பாரெட்டி (1984) இரத்தஉறவு மணஉறவு பாகுபாடு குறித்த டுமாண்டின் கருத்துக்களை விவாதிக்கும்போது கீழ்கண்டவாறு கூறியுள்ளார்.

"தாயின் தகப்பனையும் தந்தையின் தகப்பனையும் குறிப்பிடுவதற்கு ஏன் ஒரு சொல் காணப்படுகிறது என்ற கேள்வி டுமான்டை மேலும் சிக்கலான வகைப்படுத்தலுக்குத் தூண்டுகிறது மாமன்முறைத் திருமணம் இருதாத்தாக்களுக் இடையில் ஒரு மணஉறவு இணைப்பு இருப்பதாகக் கருதத் தூண்டுகிறது. இதுதான் இருவரையும் வேறுபடுத்த இயலாமல் ஒரே சொல்லால் குறிப்பிடுவதற்குக் காரணமாகும். ஒரு விதத்தில் இருவரும் இரத்த உறவினராகவும் இன்னொரு விதத்தில் இருவரும் மண உறவினராகவும் உள்ளனர். ஒருவருக்கு தாயும் தகப்பனும் இரத்த உறவினர். எனவே தாயின் தகப்பனும் தகப்பனின் தகப்பனும் இரத்த உறவினராகும் அதே சமயம் அவர்கள் ஒரு திருமணத்

தொடர்புடையவர்கள் எனவும் கூறுகிறார். எந்த ஒரு உறவினர்களும் ஒரே வேளையில் இரத்த உறவினராகவும் மண உறவினராகவும் இருப்பது திராவிட உறவுமுறையின் போக்குக்கு எதிராகச் செல்கிறது". இத்தகைய இடற்பாடுகள் தகப்பனின் தகப்பனையும் தாயின் தகப்பனையும் வெவ்வேறு சொற்களால் குறிப்பிடும் சமுதாயத்தில் சற்றுக் குறைவாகக் காணப்படலாம்.

கணவனின் மூத்த சகோதரனையும் இளைய சகோதரனையும் குறிப்பிடும்போது பிராமணர்கள் மூத்த இளைய வேறுபாட்டை வெவ்வேறு சொற்களால் குறிப்பிடுகின்றனர். அதாவது கணவனின் மூத்த சகோதரனை கொளுந்தனாரு என்றும் கணவனின் இளைய சகோதரனை மச்சினன் என்றும் குறிப்பிடுகின்றனர். அகமுடையார் சாதியில் கணவனின் மூத்த சகோதரனையும் இளைய சகோதரனையும் அத்தான் என்றே குறிப்பிடுகின்றனர் ஏனைய சாதியினர் கணவனின் மூத்த சகோதரனைக் கொளுந்தனாரு என்றும் கணவனின் இளைய சகோதரனைக் கொளுந்தன் என்றும் குறிப்பிடுகின்றனர். அதோடு மூத்த, இளைய வேறுபாட்டைக் குறிப்பிடுவதற்குப் பெரிய, சின்ன என்ற பெயரடைகளைப் பயன்படுத்துகின்றனர். இதேப்போன்று கணவனின் மூத்த, இளைய சகோதரிகளைக் குறிப்பிடும்போது பெரிய, சின்ன என்ற பெயரடைகளை முறையே நாத்தனாரு, நாத்தனா ஆகிய சொற்களோடு இணைத்துக் குறிப்பிடுகின்றனர் மூத்த சகோதரனின் மனைவியைக் குறிப்பிடும் மதனி என்ற சொல் பிராமணர்களிடையே மட்டுமே காணப்படுகிறது. பிராமணர், அகமுடையார், செட்டியார் மற்றும் பறையர் சாதிகளில் மூத்த சகோதரனின் மனைவியையும் இளைய சகோதரனின் மனைவியையும் வெவ்வேறு சொற்களால்

குறிப்பிடுகின்றனர். வேறு சில சாதியினர் இளைய சகோதரனின் மனைவியைக் குறிப்பிடும்போது உறவுமுறைச்சொல்லால் குறிப்பிடாமல் விளக்கமுறையில் **தம்பி பொண்டாட்டி** என்றும் குறிப்பிடுகின்றனர். பெரும்பாலான சாதி மக்களும் மனைவியின் மூத்த சகோதா னையும் இளைய சகோதனையும் **மச்சான்** அல்லது **மச்சினன்** என்றே குறிப்பிடுகின்றனர். ஆனால் அகமுடையார் சாதியில் மனைவியின் இளைய சகோதரன் **மாப்ளெ** என்று வேறுபடுத்திக் குறிப்பிடப்படுகிறார். அதேபோன்று பெரும்பாலான சாதியிலும் மனைவியின் மூத்த சகோதரியைக் **கொளுந்தியா** என்றும் மனைவியின் இளைய சகோதரியை **மச்சினிச்சி** என்றும் வேறுபடுத்திக் குறிப்பிடுகின்றனர். ஆனால் பிராமணர்கள் மனைவியின் மூத்த சகோதரியையும் இளைய சகோதரியையும் **மச்சினி** என்ற ஒரே சொல்லால் குறிப்பிடுகின்றனர். அதேபோன்று முகமதியர்கள் மனைவியின் மூத்த சகோதரியையும் இளைய சகோதரியையும் **கொளுந்தியா** என்ற ஒரே சொல்லால் குறிப்பிடுகின்றனர்.

மேலே குறிப்பிட்டுள்ளவண்ணம் மூத்த, இளைய வேறுபாட்டை குறிப்பிடுவதில் பல்வேறு சாதி மக்களிடையே காணப்படும் வேறுபாடுகள் மண உறவினர்களைக் குறிப்பிடுவதில் மட்டுமே காணப்படுகின்றன. இரத்த உறவினர்களைக் குறிப்பிடும் போது எல்லாச் சாதியினரும் மூத்த இளைய வேறுபாட்டை வெவ்வேறு சொற்களால் தெளிவாக வேறுபடுத்திக் குறிப்பிடுகின்றனர்.

ஒருவரின் மூத்த சகோதரியின் கணவனையும் இளைய சகோதரியின் கணவனையும் வேறுபடுத்திக் குறிப்பிடுவதையும்

காணமுடிகிறது. பெரும்பாலான சாதி மக்களிடையே மூத்த சகோதரியின் கணவனையும் இளைய சகோதரியின் கணவனையும் **அத்தான்** என்று குறிப்பிடுகின்றனர். ஆனால் பல வேளைகளில் மூத்த சகோதரியின் கணவனைக் குறிப்பிடும்போது **அத்தான்** என்ற சொல்லுக்குப் பதிலாக மாமா என்ற சொல்லைப் பயன்படுத்துவதைக் காணமுடிகிறது இவ்வாறு மூத்த சகோதரியின் கணவனை **மாமா** என்று குறிப்பிடுவதற்குக் காரணம் அவர்களிடையே காணப்படும் மூத்த சகோதரி மகள் திருமணமுறையாகும். பிராமணர்கள் மூத்த சகோதரியின் கணவனை **அத்திம்பேர்** என்றும் இளைய சகோதரியின் கணவனை **மச்சினன்** என்றும் வேறுபடுத்திக் குறிப்பிடுகின்றனர். வேறு சில சாதியினர் மூத்த சகோதரியின் கணவனை **அத்தான்/மாமா** என்றும் இளைய சகோதரியின் கணவனை **அத்தான்/மாப்ளெ** என்றும் குறிப்பிடுகின்றனர். முகமதியர்கள் மூத்த சகோதரியின் கணவனையும் இளைய சகோதரியின் கணவனையும் **மச்சான்** என்றே குறிப்பிடுகின்றனர்.

**கொளுந்தியா** என்ற சொல் வெவ்வேறு சாதிகளில் வெவ்வேறு உறவினர்களைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படுவதைக் காணமுடிகிறது. அகமுடையார் சாதியினர் இளைய சகோதரனின் மனைவி, மனைவியின் மூத்த-இளைய சகோதரிகள் ஆகியோரைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்துகின்றனர். முகமதியர்கள் மனைவியின் மூத்த-இளைய சகோதரிகள் மற்றும் கணவனின் மூத்த-இளைய சகோதரர்களின் மனைவிகள் ஆகியோரையும் **கொளுந்தியா** என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். வேறு பல சாதிகளில் மனைவியின் மூத்த சகோதரியை மட்டும் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

ஏனைய சாதியினரோடு ஒப்பிட்டுப்பார்க்கும்போது பிராமணர்கள் வெவ்வேறு உறவினர்களை வெவ்வேறு சொற்களால் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. அவர்கள் தாயின் இளைய சகோதரியையும், தகப்பனின் இளைய சகோதரனின் மனைவியையும் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தும் **சித்தி** என்ற சொல் ஏனைய சாதியினரிடம் காணப்படவில்லை. அதோடு மாமா தாத்தா, **கொள்ளுத்தாத்தா**, எள்ளுத்தாத்தா போன்ற விளக்க உறவுமுறைச் சொற்களும் பிராமணர்களிடையே அதிகமாகக் காணப்படுகின்றன. பிராமணர்கள் தாயின் தாய் மற்றும் தகப்பனின் தாய் ஆகியோரைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தும் **பாட்டி** என்னும் சொல் தாயின் சகோதரனின் மனைவியைக் குறிப்பிடும் **அம்மாமி** என்னும் சொல், தகப்பனின் சகோதரரியின் கணவனைக் குறிப்பிடும் **அத்திம்பேர்** என்னும் சொல் போனற பல சொற்கள ஏனைய சாதியினரிடம் காணப்படவில்லை. ஆனால் தாயின் தாய் தகப்பனின் தாய் ஆகியோரைக் குறிப்பிடும் **பாட்டி** என்னும் சொல் ஏனைய சாதியினரிடமும் பரவிவருவதைக் காண முடிகிறது. குறிப்பாக எல்லாச் சாதிகளிலும் புதிய தலைமுறையினரின் வழக்கில் **பாட்டி** என்ற சொல்லைப் பயன்படுத்துவதைக் காணலாம்.

பொதுவாக எல்லாச் சாதிகளிலும் சிலகுறிப்பிட்ட உறவினர்களைக் குறிப்பிடும்போது நேரடியான உறவுமுறைச் சொல்லைப் பயன்படுத்தாமல் விளக்கமுறையில் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. சான்றாக **அத்தெ** மகா, அக்கா மகா, தம்பி பொண்டாட்டி போன்ற சொற்களைக் கூறலாம். அவ்வாறு குறிப்பிடுவதற்கு இரண்டு முக்கிய காரணங்களைக் கூறலாம். ஒன்று அவ்வாறான உறவினர்களோடு நெருங்கிய தொடர்பு இல்லாது

காணப்படுவது. இன்னொன்று அத்தகைய உறவினர்களைக் குறிப்பிடும் சொற்களைப் பயன்படுத்துவதற்குத் தயங்குதல்.

உறவுமுறைச் சொற்களைப் பொருள் அடிப்படையில் பார்க்கும்போது மூன்று முக்கிய பொருள்களை வெளிப்படுத்துவதைக் காணலாம் (1) தலைமுறை (2) வயது (3) பால்.

**தலைமுறை:**

தலைமுறை வேறுபாட்டைக் குறிப்பிடுவதற்கு வெவ்வேறு சாதிகளில் வெவ்வேறு சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. பிராமணர்களிடையே முன் தலைமுறைகளிலும் பின் தலைமுறைகளிலும் நான்கு தலைமுறைகள் வெவ்வேறு சொற்களால் குறிப்பிடப்படுகின்றன. இரண்டாவது முன் தலைமுறையினரைக் குறிப்பிடுவதற்குப் பயன்படுத்தும் தாத்தா, பாட்டி ஆகிய சொற்களோடு கொள்ளு என்ற சொல்லை இணைத்துக் கொள்ளுத் தாத்தா, கொள்ளுப் பாட்டி என்று மூன்றாவது தலைமுறையை வேறுபடுத்துகின்றனர். அதேபோன்று எள்ளு என்னும் சொல்லை இணைத்து எள்ளுத் தாத்தா, எள்ளுப் பாட்டி என்று நான்காவது தலைமுறையை (முன்) வேறுபடுத்துகின்றனர். பின்தலைமுறையினரையும் அவ்வாறே வேறுபடுத்துகின்றனர். அதாவது கொள்ளு என்ற சொல்லைப் பேரன் மற்றும் *பேத்தி* ஆகிய சொற்களோடு இணைத்து மூன்றாவது பின்தலைமுறையினரைக் குறிப்பிடுகின்றனர். **எள்ளுப்பேரன், எள்ளுப்பேத்தி** என்று நான்காவது பின் தலைமுறையை வேறுபடுத்திக் குறிப்பிடுகின்றனர். முன் தலைமுறையிலும்

பின்தலைமுறையிலும் முதல் இரு தலைமுறைகளும் தனிச்சொற்களால் வேறுபடுத்தப்படுகின்றன. அதாவது முதல் முன் தலைமுறையினரை அப்பா, அம்மா என்றும் இரண்டாவது முன்தலைமுறையினரைத் தாத்தா, பட்டி என்றும் குறிப்பிடுகின்றனர். இதேபோன்று முதல் பின் தலை முறையினரை மகன், மகள் என்றும்,. இரண்டாவது பின் தலைமுறையினரைப் பேரன், பேத்தி என்றும், தனிச்சொல்லால் வேறுபடுத்திக் குறிப்பிடுகின்றனர். இங்கு ஒரு தலைமுறைக்குப் பிறகு முன்தலைமுறையிலும் பின் தலைமுறையிலும் நான்குவித உறவுகளே காணப்படுகின்றன. அதாவது தாத்தா, பாட்டி, பேரன், பேத்தி ஆகியவை. கள்ளர் சாதியிலும் முன் தலைமுறையில் நான்கு தலைமுறைகள் வரையிலும் வேறுபடுத்திக் குறிப்பிடப்படுகின்றன. பெரும்பாலான சாதியினரும் இரண்டாவது முன்தலைமுறையைச் சேர்ந்த பெண் உறவை இரண்டு அடிப்படை உறவுமுறைச் சொற்களை இணைத்துக் குறிப்பிடுவதைக் காண முடிகிறது. அதாவது அம்மா+ஆயி-> அம்மாயி, அப்பா+ஆயி-> அப்பாயி என்று குறிப்பிடுகின்றனர். ஆனால் இரண்டாவது முன் தலைமுறையின் ஆண் பகுதியைத் தாத்சா என்னும் தனிச் சொல்லால் குறிப்பிடுகின்றனர். முதல் மற்றும் மூன்றாவது முன் தலை முறையைச் சேர்ந்தவர்களையும் முறையே அப்பா மற்றும் பாட்டன் என்ற தனிச்சொற்களால் குறிப்பிடுகின்றனர். மூன்றாவது தலைமுறையைக் குறிப்பிடும் பாட்டன் என்ற சொல்லோடு முப் என்ற முன்னிணைப்பைச் சேர்த்து முப்பாட்டன் என்று நான்காவது தலைமுறையைக் குறிப்பிடுகின்றனர். ஆனால் பின் தலைமுறையில் இரண்டுதலைமுறையினர் மட்டுமே வெவ்வேறு சொற்களால் குறிப்பிடப்படுகின்றனர். ஒரு

தலைமுறைக்கு மேல் இங்கு முன்தலைமுறையில் மூன்றுவித உறவுகளும் பின் தலைமுறையில் இரண்டுவித உறவுகளும் காணப்படுகின்றன. அதாவது முன்தலைமுறையில் தாத்தா, பாட்டி, பாட்டின் ஆகிய மூன்று உறவுகளும் பின தலைமுறையில் பேரன், பேத்தி ஆகிய இரண்டு உறவுகளும் காணப்படுகின்றன. ஏனைய சாதியினர் முன், பின் தலைமுறைகளில் இரண்டு தலைமுறைகளை மட்டுமே வேறுபடுத்திக் குறிப்பிடுகின்றனர்.

**வயது:**

உறவுமுறைச் சொற்களில் மூத்த இளைய பாகுபாடு எல்லா சாதியினரிடமும் காணப்படுகிறது. இது திராவிட உறவுமுறை அமைப்பின் மிக முக்கியக் கூறுகளில் ஒன்றாகும். பெற்றோரின் உடன்பிறந்தவர்களுக்கு இடையிலான வயது வேறுபாடு பெரும்பாலும் பெரிய மற்றும் சின்ன ஆகிய பெயரடைகளைச் சேர்ப்பதன் மூலம் வேறுபடுத்தப்படுகிறது. முன்னர்க் குறிப்பிட்டுள்ளவண்ணம் தாயின் இளைய சகோதரி மற்றும் தகப்பனின் இளைய சகோதரனின் மனைவி ஆகியோரைக் குறிப்பிடுவதற்குப் பிராமணர்களிடையே சித்தி என்னும் தனிச்சொல் காணப்படுகிறது. ஒருவர் தன் தலைமுறையைச் சேர்ந்தவர்களின் வயது வேறுபாடுகளையும் வெவ்வேறு சொற்களால் குறிப்பிடுகின்றார்.

**பால்:**

உறவுகளை வரையறுப்பதில் பால் மிக முக்கிய காரணக்கூறாகக் காணப்படுகிறது. இங்கு ஒரு உறவைக் குறிப்பிடும்

நபரின் பால் மற்றும் தொடர்புபடுத்தும் உறவினர்களின் பால் ஆகியவற்றின் அடிப்படையில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்துகொள்ளும் பழக்கம் காணப்படும் சமுதாயத்தில் ஒருவரின் மூத்த சகோதரியின் மகள் தான் திருமணம் செய்துகொள்ளும் உறவில் காணப்படுகிறாள். அதே வேளையில் ஒரு பெண்ணின் மூத்த சகோதரியின் மகள் அவளுக்கு மகள் என்ற உறவிலேயே காணப்படுகிறாள். ஒருவர் தன் தலைமுறையைச் சேர்ந்த உறவினர்களைத் தொடர்புபடுத்தும் உறவினர்களின் பாலின அடிப்படையில் வேறுபடுத்துவதையும் காணலாம். அதாவது தாயின் சகோதரனின் பிள்ளைகளை ஒருவித உறவிலும் தாயின் சகோதரியின் பிள்ளைகளை இன்னொருவித உறவிலும் வகைப்படுத்துகின்றனர். இதேபோன்று தகப்பனின் சகோதரனின் பிள்ளைகளை ஒருவித உறவிலும் தகப்பனின் சகோதரியின் பிள்ளைகளை இன்னொருவித உறவிலும் வகைப்படுத்துவதைக் காணலாம். இதுவும் திராவிட உறவுமுறை அமைப்பின் ஒரு முக்கியக் கூறாகும்.

உறவுமுறைச் சொற்களைப் பயன்படுத்தும்விதத்திலும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. அதோடு ஒருவர் தன் உறவினர்களை எந்த அளவுக்குச் சரியான உறவுமுறைச் சொற்களால் அழைக்கின்றார் அல்லது குறிப்பிடுகின்றார் என்பது மிகவும் முக்கியமானதாகும். சில உறவினர்களை நேரடியாக உறவுமுறைச் சொற்களால் அழைப்பதில்லை. உறவின் தூரம் அதிகரிக்கும்போதும் உறவுமுறைச் சொற்களில் தெளிவற்ற நிலை ஏற்படுவதுண்டு. மேலும் உறவுகளின் தன்மையைப் பொறுத்து பதிலிடு பெயர்களுக்குப் பதிலாக உறவுமுறைச் சொற்களைப்

பயன்படுத்துவதையும் காணலாம். சான்றாக "நீங்கள் போகவேண்டாம்" என்பதற்குப் பதிலாக "அப்பா போகவேண்டாம்" என்று குறிப்பிடுவதுண்டு. அதோடு உறவுமுறைச் சொற்களைப் பயன்படுத்தும் முறையில் ஒருவரின் குழந்தைப்பருவம் முதல் இறுதிவரை ஒரே சீராகக் காணப்படுவதில்லை. அது சூழ்நிலைக் கேற்றாற்போன்றும் பல காரணக்கூறுகளின் அடிப்படையிலும் வேறுபடுவதுண்டு.

குறிப்பிட்ட சில உறவுமுறைச் சொற்கள் இருதுருவச் சொற்களாகப் பயன்படுவதையும் காணலாம். அதாவது சில சொற்கள் குறிப்பிடப்படுகிறவரையும் குறிப்பிடுகிறவரையும் குறிப்பிடும் சொல்லாகக் காணப்படுகிறது. சான்றாகச் **சம்மந்தி, சக்களத்தி, ஓர்படியா, சகலன்** போன்ற சொற்களைக் கூறலாம். X.Y-ஐ திருமணம் செய்து கொண்டால் X-ன் பெற்றோர் Y-ன் பெற்றோரைச் சம்மந்தி என்று குறிப்பிடுகின்றனர். அதேபோன்று Y-ன் பெற்றோர் X-ன் பெற்றோரை சம்மந்தி என்று குறிப்பிடுகின்றனர். அதேபோன்று ஒருவருக்கு இரண்டு மனைவிகள் இருந்தால் முதல்மனைவி இரண்டாவது மனைவியை **சக்களத்தி** என்று குறிப்பிடுவாள். இரண்டாவது மனைவி முதல்மனைவியை **சக்களத்தி** என்று குறிப்பிடுவாள் இங்கு இருதுருவச் சொற்கள் உடன்பிறப்பு போன்ற ஒரு உறவை வெளிப்படுத்துகிறது. **சக்களத்தி, ஓர்படியா, சகலன்** ஆகிய உறவுகளில் மூத்தவரை இளையவர் அழைக்கும்போது மூத்த சகோதர சகோதரிகளை அழைப்பதற்குப் பயன்படுத்தப்படும் **அண்ணா, அக்கா** ஆகிய சொற்களால் அழைப்பதைக் காணலாம்.

சில சமூகச் சூழல்களில் **அம்மா**, **அப்பா** ஆகிய சொற்களும் இருதுருவ விளிச்சொற்களானப் பயன்படுத்தப் படுகின்றன. சான்றாக ஒரு தாய் தன் மகளை **அம்மா** என்று அழைக்கிறாள். அதேப்போன்று மகளும் தன் தாயை **அம்மா** என்று அழைக்கின்றாள். இதேபோன்று ஒரு தகப்பனும் தன் மகனை **அப்பா** என்று அழைப்பதையும் மகன் தகப்பனை **அப்பா** என்று அழைப்பதையும் காணலாம். இங்கு இருதுருவச் சொல்லானது தாய்-மகள் மற்றும் தகப்பன்-மகன் ஆகிய உறவுகளுக்கு இடையே செயல்படுவதைக் காணலாம்.

குறிப்பிட்ட சில உறவுமுறைச் சொற்கள் பாலைக் குறிப்பிடுவதற்கும் பயன்படுத்தப்படுகின்றன. சான்றாக **அம்மா**, **அப்பா/அய்யா** ஆகிய சொற்களைக் கூறலாம். இச்சொற்களை இன்னொரு சொல்லோடு இணைத்துக் குறிப்பிட்ட நபரைக் குறிப்பிடும்போது அவர் ஆணா அல்லது பெண்ணா என்பதைத் தெரிந்துகொள்ள முடிகிறது. இங்கு அம்மா என்ற சொல் பெண் பாலைக்குறிக்கும் சொல்லாகவும் அய்யா அப்பா என்ற சொற்கள் ஆண்பாலைக் குறிக்கும் சொல்லாகவும் காணப்படுகின்றன. சான்றாகக் கண்ணம்மா, கண்ணப்பன், மாரியம்மா, மாரியப்பன் ஆகிய சொற்களைக் கூறலாம். இவ்வாறு உறவுமுறைச் சொற்களால் பாலைக்குறிப்பிடும் பழக்கம் முகமதியர்களிடையேயும் கிறித்தவர்களிடையேயும் அதிகமாகக் காணப்படவில்லை

குறிப்பிட்ட சில உறவுமுறைச்சொற்கள் இணைச் சொற்களாகப் பயன்படுத்தப்படுகின்றன. அவ்வாறு இணைச்

சொற்களாக வரும்போது இன்னொரு பொருளைக் கொடுப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். சான்றாகக் கீழ்கண்ட சொற்களைக் கூறலாம்.

| | | |
|---|---|---|
| அண்ணன் | - | தம்பி |
| அக்கா | - | தங்கச்சி |
| அக்கா | - | தம்பி |
| அப்பா | - | அம்மா |
| பெரியப்பா | - | சித்தப்பா |
| தாத்தா | - | பாட்டி |

மேலே குறிப்பிடப்பட்டுள்ள சொற்களில் முதல் மூன்று சொற்களில் காணப்படும் இணைச்சொற்கள் ஒன்றோடொன்று நேரடித் தொடர்புடையவைகளாகும். முதலில் குறிப்பிடப்படும் சொல் வயதில் மூத்ததாகவும் இரண்டாவது குறிப்பிடப்படுவது வயதில் இளையதாகவும் காணப்படுகின்றன. ஆனால் அம்மா - அப்பா என்பதில் காணப்படும் இரு நபர்களும் மூன்றாவது நபரோடு தொடர்புடையவர்களாகக் காணப்படுகின்றனர். அதாவது அவர்களின் பிள்ளைகளோடு தொடர்புபடுத்தப்படுகிறார்கள்.

**அண்ணா**, **அக்கா** ஆகிய உறவுமுறைச்சொற்களும் தனிநபர்களின் பெயரோடு இணைத்துக் குறிப்பிடப்படுகின்றன. இங்கு ஒருவர் தன்னைவிட ஓரளவு வயதில் மூத்தவர்களைப் பெயர் சொல்லி அழைக்கவோ அல்லது குறிப்பிடவோ தயங்கும்போது குறிப்பிடப்படுகிறவர் ஆணாக இருந்தால் அவருடைய பெயரோடு **அண்ணா** என்ற உறவுமுறைச்சொல்லையும் பெண்ணாக இருந்தால் **அக்கா** என்ற உறவுமுறைச்சொல்லையும் இணைத்துக்

குறிப்பிடுவதைக் காணலாம். இங்கு ஒருவரின் பெயரோடு உறவுமுறைச்சொல்லை இணைத்து குறிப்பிடுவது ஒருவித மரியாதையைக் காட்டுவதாகக் காணப்படுகிறது. சான்றாக முத்தண்ணா, லெச்சுமியக்கா போன்ற சொற்களைக் கூறலாம். ஆனால் அவ்வாறு குறிப்பிடுவது சாதி அடிப்படையில் வேறுபடுவதுண்டு. சான்றாகப் பிராமணர் சாதியைச் சேர்ந்த ஒருவர் அரிசனர்களில் ஒருவரை அவ்வாறு குறிப்பிடுவதில்லை, சாதி, அந்தஸ்து ஆகியவற்றில் ஓரளவு ஒரே நிலையில் காணப்படுகிறவர்களிடையே மட்டுமே அத்தகைய வழக்கு காணப்படுகிறது.

அம்மா, அப்பா போன்ற உறவுமுறைச் சொற்கள் வியப்பிடைச்சொற்களாகவும் பயன்படுத்தப்படுகின்றன. சில சூழ்நிலைகளில் -டி, -டா போன்ற ஒட்டுகளை அம்மா, அப்பா ஆகிய உறவுமுறைச் சொற்களோடு இணைத்துக் குறிப்பிட்ட சில உணர்வுகளை வெளிப்படுத்துவதைக் காணலாம். சான்றாக அம்மா-டி, அப்பா-டா ஆகிய வியப்புச் சொற்களைக் கூறலாம்.

உறவுமுறைச் சொற்கள் உறவினர்களைக் குறிப்பிடுவதற்கு மட்டுமின்றி விளிச்சொற்களாகவும் பயன்படுத்தப்படுகின்றன. சில உறவினர்களைக் குறிப்பிடுவதற்கும் அழைப்பதற்கும் முற்றிலுமாக வேறுபட்ட சொற்கள் காணப்படுகின்றன. ஆனால் சில உறவினர்களைக் குறிப்பிடுவதற்கும் அழைப்பதற்கும் ஒரே சொல்லைப் பயன்படுத்துவதையும் காணலாம். அதோடு சில சமூகச் சூழல்களில் குடிவழிப் பட்டியல் தொடர்பு இல்லாதவரையும் அதாவது உறவினர்கள் அல்லாதவர்களை அழைப்பதற்கும்

ஒறவுமுறைச் சொற்கள் பயன்படுத்தப்படுவதைக் காணலாம். இது பல்வேறு சமூகக் காரணக்கூறுகளின் அடிப்படையில் வேறுபடுவதுண்டு. அவ்வாறான சமூகக் காரணக்கூறுகளினால் சில வேளைகளில் உறவினர்களைக் குறிப்பிடுவதிலும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. சான்றாகக் கள்ளர், அகமுடையார் போன்ற சாதியினரிடையே குடும்பத்தில் மூத்த சகோதரனை இளைய சகோதர சகோதரிகள் **பெரியவரு** என்று குறிப்பிடுகின்றனர். இங்கு மூத்த சகோதரனைக் குறிப்பிடும் சொல் வேறுபடுவதற்குக் காரணம் குறிப்பிட்ட சமுதாயத்தில் மூத்த சகோதரனுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுவதேயாகும். இன்னும் சில குடும்பங்களில் குழந்தைகள் தகப்பனை டாடி என்றும் தாயை **மம்மி** என்றும் அழைக்கின்றனர். இதற்கு குழந்தைகளின் கல்வி மற்றம் ஆங்கில மொழியின் தாக்கம் ஆகியவை முக்கிய காரணங்களாகும். எனவே ஒரு உறவினரை குறிப்பிடுவதற்கும் அழைப்பதற்கும் பயன்படுத்தப்படும் சொற்களில் காணப்படும் வேறுபாடுகள் குறிப்பிடுகிறவர் மற்றும் குறிப்பிடப்படுகிறவர் ஆகிய இருத்தரத்தாரின் சமூகக் கூறுகளை அடிப்படையாகக் கொண்டதாகும்.

கணவன் மனைவி ஆகியோரை அழைக்கும் சொற்களில் பல வேறுபாடுகள் காணப்படுகின்றன. கணவனை அழைப்பதற்கு **அத்தான்**, என்னங்க, ஏங்க போன்ற பல சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. அதேபோன்று மனைவியை அழைக்கும்போது ஏண்டி, எடியே, ஏட்டி போன்ற பல சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. இங்கு, கணவன் அல்லது மனைவியை அழைப்பதற்கு ஒரு குறிப்பிட்ட சொல்லைப் பயன்படுத்தாமல்

இருப்பதைக் காணமுடிகிறது. அவ்வாறு குறிப்பிட்ட சொல் பயன்படுத்தாமல் இருப்பதற்குக் காரணம் குறிப்பிட்ட சொல் இல்லாததினாலோ அல்லது தெளிவற்ற நிலையினாலோ அல்ல. இது அச்சமுதாயத்தில் காணப்படும் ஒரு பாரம்பரியப் பழக்கமாகக் காணப்படுகிறது.

முன் தலைமுறையைச் சேர்ந்த உறவினர்களைக் குறிப்பிடும்போதும் அழைக்கும்போதும் பெரும்பாலும் உறவுமுறைச் சொற்களையே பயன்படுத்துகின்றனர். ஆனால் இளைய சகோதர சகோதரிகளையும் பின்தலைமுறையினரையும் அழைக்கும்போது உறவுமுறைச் சொற்களைப் பயன்படுத்தாமல் வேறு சொற்களைக் கொண்டு அழைப்பதைக் காணமுடிகிறது.

உறவுமுறைச் சொற்களைப் பயன்படுத்தி உறவினர் அல்லாதவர்களையும் அழைப்பதைக் காணலாம். பொதுவாக அம்மா, அய்யா, அண்ணன், தம்பி, அக்கா, மாமா ஆகிய உறவுமுறைச்சொற்கள் அவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன. ஆனால் பயன்படுத்தும் விதத்தில் வயது, கல்வி, சாதி ஆகியவற்றின் அடிப்படையில் சில வேறுபாடுகள் ஏற்படுவதைக் காணமுடிகிறது. சான்றாகப் பிராமணர் சாதியைச்சேர்ந்த ஒருவர் அரிசனர்களில் ஒருவரை உறவுமுறைச்சொற்களால் அழைப்பதில்லை. என்னும் சொல் பொதுவாக எல்லாச் சாதி மக்களிடமும் ஒரு விளிச்சொல்லாகப் பயன்படுத்தப்படுகிறது. இச்சொல் ஒருவித மரியாதைக்கு உரிய சொல்லாகவும் காணப்படுகிறது. இவ்வாறு உறவினர் அல்லாத ஒருவரை உறவுமுறைச் சொல்லால் குறிப்பிடுவது பெரும்பாலும் சாதி ஏற்றத்தாழ்வில் ஒரே நிலையில்

இருப்பவர்களிடையே அதிகமாகக் காணப்படுகிறது. இதற்கு அவர்களிடையே காணப்படும் நெருங்கிய தொடர்பு மற்றும் நட்பு ஆகியவை முக்கியக் காரணங்களாக உள்ளன.

சில சமூகச் சூழல்களில் பதிலிடு பெயரையும் உறவுமுறைச் சொல்லையும் இணைத்துக் குறிப்பிடுவதையும் காணலாம். கோவிலூர், மேலமாகாணம் பகுதியில் இத்தகைய சொற்கள் கள்ளர், பறையர், பள்ளர் ஆகிய சாதி மக்களிடையே அதிகமாகக் காணப்படுகின்றன. வேறு சில சாதியினர் இத்தகைய சொற்களைப் பயன்படுத்துவதை இழிவாகக் கருதுகின்றனர் சில பதிலிடு பெயர்களின் முதல் பகுதியையும் உறவுமுறைச் சொல்லையும் சேர்த்துப் பயன்படுத்துகின்றனர். சான்றாகக் கீழ்க்கண்ட சொற்களைக் கூறலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ய | + | அப்பன் | -> | யப்பன் | 'என் அப்பா' |
| நொ | + | அண்ணன் | -> | நொண்ணன் | 'உன் அண்ணன்' |
| நோ | + | அக்கா | -> | நோக்கா | 'உன் அக்கா' |
| ஒ | + | அம்மா | -> | ஒம்மா | 'உன் அம்மா' |
| கொ | + | அப்பன் | -> | கொப்பன் | 'உன் அப்பா' முதலியன. |

இவ்வாறு பதிலிடு பெயருடன் குறிப்பிடப்படும் உறவுமுறைச் சொற்கள் அப்பகுதியில் வாழும் பிராமணர் மற்றும் வெள்ளாளர் ஆகிய உயர் சாதி மக்களிடையே காணப்படவில்லை. எமினோ (1953: 339-53) குறிப்பிடும்போது பதிலிடு பெயரையும் உறவுமுறைச் சொல்லையும் ஒன்றாக இணைத்துக் குறிப்பிடுவது ஒரு பழந்திராவிடக்கூறு (Proto-Dravidian Feature) எனக் கூறியுள்ளார்.

# முடிவுரை

எந்த ஒரு உறவினரும் ஒரே வேளையில் இரத்த உறவினராகவும் மண உறவினராகவும் இருப்பது பொதுவான திராவிட உறவுமுறை அமைப்பிற்குச் சற்று முரண்பட்டதாகும். ஆனால் நெருங்கிய உறவினர்களிடையே திருமணத் தொடர்பு கொள்ளும்போது இரத்த உறவினர் மண உறவினராகவும் இருப்பதைக் காண முடிகிறது. குறிப்பாக ஒரே குடும்பத்தில் மூத்த சகோதரி மகள் மணம், தாய் மாமன் மகள் மணம் மற்றும் தகப்பனின் சகோதரியின் மகள் மணம் ஆகிய திருமணங்கள் நடைபெறும்போது இரத்த உறவினர்-மண உறவினர் என்ற பாகுபாட்டில் பெரும் சிக்கல்கள் ஏற்படுகின்றன. இத்தகைய சிக்கல்கள் திராவிட உறவுமுறையைக் குறித்து வெளி நாட்டு அறிஞர்கள் தவறான முடிவுகளுக்கு வரவும் தூண்டுகிறது.

கேத்தலின் காப் (1979) என்பவர் தஞ்சாவூர் உறவுமுறை அமைப்பை விளக்கும்போது கூறிய கருத்தினை இதற்குச் சான்றாகக் கூறலாம். அவர், "பிராமணர்களைப் போல் அல்லாமல் கீழ்சாதியினர் தாயின் இளைய சகோதரியோ அல்லது ஒன்றுவிட்ட சகோதரியோ மணமகளைவிட வயதில் குறைவாக இருந்தால் மணம் செய்துகொள்ளும் முறையையும் ஆதரித்தனர்" என்று குறிப்பிடுகிறார். ஆனால் இத்தகைய திருமண முறைகள் தமிழகத்தில் நடைபெற்று வந்ததற்கான எந்தவிதச் சான்றுகளும் கிடைக்கவில்லை

மேலும், டுமாண்டின் இரத்த உறவு மணஉறவு பாகுபாட்டில் காணப்படும் சில குறைகளைச் சுப்பாரெட்டி (1984) சுட்டிக்காட்டியுள்ளார். அதாவது திராவிட உறவுமுறை அமைப்பில் ஒருவரின் அந்தஸ்து அவருடைய பிள்ளைகளுக்கும் பின்னர் அவருடைய மகனின் பிள்ளைகளுக்கும் ஒப்படைக்கப்படுகிறது. (மகளின் பிள்ளைகளுக்கு அல்ல). இதேபோன்று திருமணத் தொடர்பினை எடுத்துக் கொண்டால் ஒருவரின் பிள்ளைகள் அவருடைய தாயின் சகோதரனின் மகளின் பிள்ளைகளோடோ அல்லது அவருடைய தகப்பனின் சகோதரியின் மகளின் பிள்ளைகளோடோ மண உறவு கொள்ளக்கூடாது ஆனால் அவருடைய தாயின் சகோதரனின் மகனின் பிள்ளைகளோடும் அவருடைய தகப்பனின் சகோதரியின் மகனின் பிள்ளைகளோடும் மட்டுமே திருமணத் தொடர்புகொள்ளலாம். இத்தகைய ஒரு கால்வழி கணக்கிடல் தென்னிந்தியா முழுவதும் காணப்படுகிறது. இவ்வாறிருக்கும்போது டுமாண்டு தாயின் தகப்பனை இரத்த உறவாக வகைப்படுத்தியிருப்பது சரியாக இருக்கமுடியாது என்று

சுப்பாரெட்டி குறிப்பிட்டுள்ளார். மேலும் தாயின் தகப்பனையும் தந்தையின் தகப்பனையும் குறிப்பிடுவதற்கு ஏன் ஒரு சொல் காணப்படுகிறது என்ற கேள்வி ஒரு சிக்கலான விளக்கத்தைக் கொடுக்க டுமாண்டைத் தூண்டுகிறது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

தற்போதைய கள ஆய்வின்போது குறிப்பிட்ட சில சாதி மக்கள் தாயின் தகப்பனையும் தகப்பனின் தகப்பனையும் வேறுபடுத்தி வெவ்வேறு சொற்களால் குறிப்பிடுவதைக் காணமுடிந்தது. குறிப்பாகப் பறையர் சாதியினர் தகப்பனின் தகப்பனை அய்யா என்றும் தாயின் தகப்பனை தாத்தா என்றும் குறிப்பிடுகின்றனர். அதே போன்று பள்ளர் சாதியினர் தகப்பனின் தகப்பனை அப்பச்சி என்றும் தாயின் தகப்பனைத் தாத்தா என்றும் குறிப்பிடுகின்றனர். அதோடு மூப்பனார், வள்ளுவர், உடையார் ஆகிய சாதி மக்களும் தகப்பனின் தகப்பனை அய்யா என்றும் தாயின் தகப்பனைத் தாத்தா என்றும் குறிப்பிடுகின்றனர். இங்கு அனைத்து சாதியினரும் தாயின் தகப்பனை தாத்தா என்று பொதுவான சொல்லால் குறிப்பிடுகின்றனர். குறிப்பிட்ட சில சாதியினர் தகப்பனின் தகப்பனை வேறு சொல்லால் குறிப்பிடுவதைக் காணமுடிகிறது. அவ்வாறு வேறுபடுத்திக் குறிப்பிடுவதற்குக் காரணம் தென்னிந்தியா முழுவதும் காணப்படும் ஒரு கால்வழி கணக்கிடல் மற்றும் திருமணத் தொடர்புகளாகவும் இருக்கலாம். அதோடு தாயின் தகப்பனையும் தகப்பனின் தகப்பனையும் வேறுபடுத்துவது தாயின் தகப்பனை இரத்த உறவிலிருந்து வேறுபடுத்துவதாகவும் கருதலாம் அவ்வாறு வேறுபடுத்துவதற்குத் தந்தைவழிச் சொத்துரிமையும் ஒரு காரணமாகும்.

தமிழகக் கிராமச் சமூக அமைப்பில் பாரம்பரியமாகச் சாதிகளுக்கிடையிலான உறவுகளைப் பார்க்கும்போது தாழ்த்தப்பட்ட சாதி மக்களின் வாழ்க்கையின் எல்லா நிலைகளிலும் முற்படுத்தப்பட்ட சாதி மக்களின் தயவு தேவையாகக் காணப்பட்டுள்ளது. தற்போது இந்நிலையில் பல மாறுதல்கள் ஏற்பட்டுவருவது குறிப்பிடத்தக்கதாகும். குறிப்பாக ஏனைய சாதியினரைச் சார்ந்து வாழாமல் தனித்துச் செயல்படுவதைக் காணமுடிகிறது. இதற்குக் கல்வி, பொருளாதாரம் ஆகியவற்றில் ஏற்பட்டுவரும் முன்னேற்றம் மற்றும் நில உடைமையில் ஏற்பட்டுவரும் மாறுதல்கள் ஆகியவை முக்கியக் காரணங்களாகின்றன. திருமணம் நிச்சயித்தல், மணவிலக்கு போன்றவற்றில் கிராமப் பஞ்சாயத்து அல்லது நாட்டாமை மிக முக்கியப் பங்கு ஆற்றியுள்ளது. ஆனால் தற்போது பெரும்பாலான சாதி மக்களிடையே குறிப்பாக மேல் சாதி மக்களிடையே நாட்டாமை அதன் முக்கியத்துவத்தை இழந்துவருவதைக் காணமுடிகிறது.

தமிழர்களின் திருமண முறையில் உறவினர்களை இரு பிரிவுகளாகப் பிரித்து ஒரு பிரிவினரோடு திருமணத் தொடர்பு கொள்வதும் இன்னொரு பிரிவினரோடு திருமணத் தொடர்பைத் தடைசெய்வதும் மிக முக்கியக்கூறாகும். அதோடு மூத்த சகோதரியின் மகளைத் திருமணம் செய்துகொள்ளும் பழக்கமும் காணப்படுகிறது. சகோதரி மகள் திருமணமானது வரையறுக்கப்பட்ட விதிமுறைகளுக்குட்பட்டதா என்பது கேள்விக்குரியதாகும். தமிழகக் கிராம சமுதாயத்தில் மூன்று அல்லது நான்கு தலைமுறைகளில் நடைபெற்றுள்ள திருமணங்களைப்

பார்க்கும் போது சகோதரி மகள் மணத்தின் எண்ணிக்கை குறைந்து வருவதைக் காணமுடிகிறது. இதற்கு முக்கியமாக மூன்று காரணங்களைக் கூறலாம்.

1) படித்தவர்களிடையே சகோதரியின் மகளைத் திருமணம் செய்து கொள்வது அறிவியல் அடிப்படையில் சிறந்ததல்ல என்ற எண்ணம் காணப்படுவது.

2) வளர்ந்து வரும் வரதட்சணை முறை. அதாவது சகோதரி மகள் அல்லது நெருங்கிய உறவினர்களைத் திருமணம் செய்துகொள்ளும் போது கூடுதலான வரதட்சணை பெற இயலாது என்பதால் அத்தகைய திருமணங்களைத் தவிர்க்கின்றனர்.

3) சகோதரியின் மகளைத் திருமணம் செய்துகொள்வதைக் கிறித்வ மதகுருக்கள் ஆதரிப்பதில்லை எனவே கிறித்தவர்களிடையே சகோதரிமகள் மணம் மிகக் குறைவாகக் காணப்படுகிறது.

இன்னொரு புறத்தில் பார்க்கும்போது உறவினர்களோடுள்ள திருமணத்தொடர்புக்கும் ஓரளவு முக்கியத்துவம் அளிக்கின்றனர். காரணம் இத்தகைய திருமணத்தில் கணவன் மனைவியிடையே காணப்படும் பண்பாட்டு அடிப்படையிலான வேறுபாடுகள் குறைவாகக் காணப்படுகின்றன. இதனால் திருமணத்துக்குப்பின்

